# முன்னுரை



ஸ்ரீ சிருங்கேரியில் ஜகத்குரு பீடாதிபத்யம் வஹித்து வந்து ஸமீபத்தில் ஸித்திம்கதர்களான **ஸ்ரீ சந்திரசேகரபாரதீ ஸ்வாமிகளவர்கள்** 1923 முதல் 1927வரை தக்ஷிணதேசத்தில் விஜய யாத்திரைசெய்து ஆங்காங்குள்ள சிஷ்யகோடிகளுக்கு சில ஸமயங்களில் ஸல்லாபரூபமாயும் சில ஸமயங்களில் பிரவசனரூபமாயும் தர்மத்தை போதித்து அநுக்ரஹித்து வந்ததில் அவர்களின் ஸல்லாபங்களிலிருந்து சில அம்சங்களைத் தொகுத்து இங்கிலீஷில் From the Master's Lips (இப்பால் Dialagues with the Guru) என்ற பெயரிலும் தமிழில் "**தேசிகன் தேன் மொழிகள்**" என்ற பெயரிலும் பிரசுரம் செய்யப்பட்டது. சில நண்பர்கள் அவ்விதமே அம்மஹானின் பிரவசனங்களிலிருந்தும் சில அம்சங்களைத் தொகுத்து வெளியிடவேண்டும் என்று கேட்டுக்கொண்டதை அனுஸரித்து இப் புஸ்தகம் வெளியிடப்படுகிறது. இதே விஷயத்தை இங்கிலீஷில் பல வியாஸங்களாக கோரக்பூர் கல்யாண கல்பதரு என்ற பத்திரிகையில் பிரசுரம் செய்து இருப்பதை "Thoughts from the Master" என்ற தலைப்பின் கீழ் புஸ்தகமாக வெளியிட உத்தேசித்து இருக்கிறது. இதில் கண்ட விஷயங்கள் யாதொன்றும் என் சொந்தமல்ல. ஆனாலும் ஸ்ரீ மஹாஸன்னிதானத்தின் உபதேசங்களை நான் கிரஹிப்பதில் தவறுதல்

ஏற்படக்கூடியது ஸஹஜமானதினால் அபிக்ஞர்கள் அப்படியேதேனும் தோஷங்களிருந்தால் அவைகளை விலக்கி உபதேச ஸாரத்தையே கிரஹிப்பார்களென்று நம்புகிறேன்.

இப்புஸ்தகம் வேதாந்த சாஸ்திர கிரந்தமல்ல. இதில் ஸாமான்ய ஜனங்களுக்கு நித்தியசர்யையில் இருக்கவேண்டிய சிரத்தையையும் மனோபாவத்தையும் நன்கு விளக்கிக் காட்டுவதற்காக ஏற்பட்ட உபதேச மொழிகள் அடங்கியிருக்கின்றன. வித்வான்களும் பாமரர்களும் இதிலிருந்தறியக்கூடிய தத்வங்களை நன்கு உணர்ந்து ஒவ்வொருவரும் வாழ்க்கையில் உபயோகப்படுத்திக்கொண்டு அனுஷ்டித்து வந்து ஸத்குருவின் கருணைக்குப் பாத்திரமாகிக் கிருதார்த்தர்களாக வேண்டுமென்று வேண்டுகிறேன்.

ஸ்ரீரங்கம். R. கிருஷ்ணஸ்வாமி அய்யர்.

# விஷய அட்டவணை.

॥ श्रीगुरुभ्यो नमः ॥



"प्रदीपज्वालाभिर्दिवसकरनीराजनविधिः
सुधासूतश्चन्द्रोपलजललवैरर्घ्यरचना ।
स्वकीयैरम्भोभिः सलिलनिधिसौहित्यकरणं
त्वदीयाभिर्वाग्भिः" विरचितमिदं स्यात्तव मुदे ॥

உ

॥ श्रीगुरुभ्यो नमः ॥

# அமிருத மொழிகள்.

## அத்யாயம் 1.

## ஸத்குரு மஹிமை.

---

### 1. நமது நோக்கம்.

பிராணி ஸாமான்யமான ஜீவர்கள் எல்லோரும் தங்கள் தங்களுக்கு ஸுகம் வேண்டும், துக்கம் இருக்கக்கூடாது, என்று எப்பொழுதும் இச்சிக்கிறார்களென்பது ஸித்தம். ஸதா காலமும் அப்படியே ஸுகத்தை யடைவதற்கும் துக்கத்தை விலக்குவதற்கும்தான் பிரயத்தினம் செய்கிறார்கள். தாங்கள் செய்யும் ஸகல கார்யங்களும் இந்த இரண்டு உத்தேசங்களை வைத்துக்கொண்டே செய்தாலும்கூட, ஸுகம் அடையப்படுகிறது என்பதில்லை, துக்கம் நிவிருத்தியாகிறது என்பதுமில்லை. தங்களுடைய உத்தேசத்தை நிறைவேற்றக் கூடிய ஸாதனம் இதுதான் என்று ஜீவர்கள் பிரயத்தினம் செய்தும், நினைத்தபடி பலன் அடையாததினால் அவர்கள் ஸாதனமாக நினைத்தது சரியான ஸாதனமில்லையென்றாவது, பலன் ஏற்படுவ

தற்கு மற்றொரு ஸாதனத்தையும் அபேக்ஷிக்கிறதென்றுவது, தீர்மானிக்க வேண்டியிருக்கிறது. ஸாதனத்தை சரியாய் அனுஷ்டானம் செய்தேன், பலன் வரவில்லை, என்ருல் அது ஸாதனமாகாது. சரியான ஸாதனமாயிருந்தால் பலன் வந்தே தீரவேண்டும். போஜனம் செய்தேன், பசி தீரவில்லை, என்று சொன்ஞல் பசி தீரும்படியான போஜனம் செய்யவில்லை என்றுதான் தாத்பர்யம். அதேமாதிரி, நமக்கு ஸுகம் கிடைக்கவில்லை யென்ருல், ஸுக ஸாதனம் என்னவென்று தெரிந்து சரியாய் அனுஷ்டானம் செய்யவில்லை யென்று அர்த்தம். துக்கம் நிவிருத்தியாக வில்லை யென்ருல், துக்க ஸாதனம் என்னவென்று தெரிந்து கொண்டு பரித்யாகம் செய்யவில்லை யென்று அர்த்தம்.

ஸதா காலமும் ஸுகப்பிராப்தி, துக்க நிவிருத்தி, இவைகளை உத்தேசித்து பிரயத்தினம் செய்து கொண்டேதான் இருக்கிறேமே, அந்த பிரயத்தினம் பலன் அன்னியில் போவது நியாயமா? என்று கேட்கலாம். நம்முடைய சொந்த ஞானத்திஞல் மாத்திரம் ஸுக ஸாதனம் கண்டுபிடிக்க முடியுமாஞல், எல்லோருமே எப்பொழுதும் ஸுகமாயிருக்க வேண்டும், எப்பொழுதுமே துக்க ஸம்பந்தமிருக்கக் கூடாது. ஸுக ஸாதனம் தெரிந்து அனுஷ்டானம் செய்தாலும்கூட பலன் ஏற்படுவதற்கு பிரதிபந்த ரூபமாக எத்தனையோ இருக்கக் கூடியதால் அவைகளையும் தெரிந்து நிவிருத்தி செய்துகொள்ள வேண்டும். எல்லோரும் பிரயத்தி

னம் செய்து கொண்டிருந்தாலும் பலனையடையாத தற்குக் காரணம் இன்னவிதப் பிரயத்தினம் இன்ன விதப் பிரயோஜனத்தைக் கொடுக்குமென்று தெரி யாமலிருப்பதேதான். வாஸிஷ்டத்தில் சொல்லியபடி, பௌருஷப் பிரயத்தினம் இரண்டு விதம். ஒன்று சாஸ்திரத்தை யனுஸரித்தது, மற்றொன்று சாஸ்தி ரத்தை மீறியது. சாஸ்திரத்தை மீறிய பிரயத்தினம் செய்தால் கெடுதலும் சாஸ்திரத்தை யொட்டிய பிர யத்தினம் செய்தால் நன்மையும் ஏற்படும்.

நன்மை என்பதும் இரண்டு விதம், நித்யம் அநித் யம் என்று. அல்பமான ஸுகம் முதல் ஹிரண்ய கர்ப்ப ஸுகம் வரையில் உள்ள ஸகலவித நன்மையும் அநித்யமாகும். தேவதைகளுக்குக்கூட அடிக்கடி அஸுரர்களால் சிரமம் ஏற்பட்டதாகவும், சதுர்முகப் பிரஹ்மாவே ஒரு காலத்தில் துஷ்ட அஸுரர்களான மதுகைடபர்களால் எதிர்க்கப்பட்டதாகவும் புரா ணங்கள் மூலமாகத் தெரிகிறது. ஆகையால் அவர்கள் ஸுகமும் துக்கத்துடன் கலந்திருப்பதால் நல்லதில்லை, அநித்யம்தான். அப்படி அநித்யமாக இருப்பானேன் என்றால், கர்ம பலனாயிருப்பதால் அந்த ஸுகம் ஜன்ய (உண்டாகிற) ஸுகமாகும். ஜன்யம் என்றால் நாச முண்டு. சில ஸுகங்கள் ஜாஸ்தி நாள் ஸ்தாயியாய் இருக்கலாமே தவிர, சாசுவதமாய் இருக்க நியாய மில்லை. அந்தந்த ஸுகங்களை ஏற்படுத்திக் கொடுத்த கர்ம பலனாகிய அபூர்வம் செலவழிந்து போனவுடன் அவைகளுக்கு நாசமேற்படுவது நியாயம் தானே. நாச

மேற்பட்டால் மறுபடியும் புண்ணிய ஸம்பாதனத்திற்காக பிரயத்தினம் செய்ய வேண்டும். மறுபடியும் ஸுகானுபவம், மறுபடியும் ஸாதனானுஷ்டானம், என்று திரும்பத் திரும்ப ஏற்பட்டுக் கொண்டிருக்குமே தவிர ஒருவித முடிவும் ஏற்படாது. ஆகையால் தான் மற்றொரு விதமான ஸுகம் நித்தியமாயிருக்கிறதென்று சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது. இது மாத்திரம் அல்ல. மற்ற ஸுகங்களெல்லாம் ஸுகமே அல்லவென்றும், இதுதான் சரியான ஸுகம் என்றும், சொல்லப்படுகிறது. அவ்விதம் ஒரு ஸுகம் இருக்கிறதென்றும் அதையடையும் வழி இன்னதென்றும் நமக்கு உபதேசம் செய்யவும் நம் பிரயத்தினம் ஸபலமாகும்படி ஈசுவர பிரஸாதத்தை யடைவிக்கவும் குரு என்பவர் அவசியம் வேண்டும்.

आराधितं दैवतमिष्टमर्थं
ददाति तस्याधिगमो गुरोः स्यात् ।
नो चेत् कथं वेत्तुमिहेश्वरोऽसौ
अतीन्द्रियं दैवतमिष्टदं नु ॥

"தேவதை ஆராதிக்கப் பட்டால் இஷ்டமான பலனைக் கொடுக்கும். அது விஷயமான ஞானம் குரு மூலமாகவே ஏற்பட வேண்டியிருக்கிறது. அவர் இல்லாமல் போனால், இவனால் எப்படி கண்டு பிடிக்க முடியும்? இஷ்டத்தைக் கொடுக்கக் கூடிய தேவதை இந்திரியத்திற்கு எட்டாததல்லவா?"

என்று சொல்லியிருக்கிறபடி ஈசுவர ப்ரஸாதம் ஏற்பட வேண்டுமானால் முதலில் குருவின் அனுக்ர ஹம் வேண்டும். அவ்வனுக்ரஹத்தையடைய நாம் அவரைத்தேடி சரணாகதி செய்ய வேண்டும்.

எந்தவிதமான பிரவிருத்திக்கும் சரியான அதிகாரி யாயிருந்தால்தான் பலன் உண்டாகும். குருவைத் தேடி சரணாகதியடைய நம்மிடம் அதிகாரமிருக்கிறதா வென்று கொஞ்சம் கவனிக்க வேண்டும். வாஸ்தவத் தில், நம் முன்னோர்களைவிட நாம்தான் ஜாஸ்தி அதி காரம் பெற்றிருக்கிறோம் என்று சொல்லலாம். அவர் கள் தங்கள் ஜன்ம காலம் முதல் ஸதாகாலமும் சாஸ் திரீய அனுஷ்டானத்திலேயே இருந்து கொண்டு, அவர் கள் ஆசார்யரிடத்தில் சரணாகதி செய்தவர்களாகவே இருந்து வந்தபடியால் புதிதாய் சரணாகதி பண்ண வேண்டிய அவசியம் அவர்களுக்குக் கிடையாது. நாம் இதுவரை அசாஸ்திரீயமான பிரவிருத்தியிலேயே கால த்தை கழித்து வந்திருப்பதாலும், ஸுகம் என்ன வென்றுவது ஸுக ஸாதனமென்ன வென்றுவது நமக்குத் தெரியாததினாலும், நமக்குத்தான் குரு சரணா கதி அவசியம். ஆகையால் நாம் தான் முக்கிய அதி காரியாவோம்.

## 2. குரு அவசியம்

ஸுக ஸாதனமான தர்மம், துக்க ஸாதனமான அதர்மம், இவைகளின் ஸ்வரூபம் இன்னதென்று சொல்லவும், பலனைக் கொடுக்கும் ஈசுவரனின் ஸ்வ

ரூபத்தைக் காட்டவும் ஒரு குரு அவசியம் வேண்டு மென்று சொல்லப்பட்டது. ஈசுவரனே தானே பூலோகத்தில் வந்து நேருக்கு நேர் உபதேசித்தால் என்ன, மத்தியில் குரு ஒருவர் எதற்காக, என்று கேட்கலாம். ஸாதாரணமாக உலகத்தில் கூட, தன்னை மற்றவர்கள் மரியாதை செய்ய வேண்டுமென்று நினைத்தால், தானே போய் தன்னை மரியாதை பண்ணுங்கள் என்று சொன்னால் நடக்காது. அதற்காக, தன் யோக்கியதையை யறிந்த ஒருவனைக் கொண்டு மற்றவர்களுக்குச் சொல்வது வழக்கம். அதேமாதிரி, ஈசுவரனிடத்தில் நமக்கு பக்தி ஏற்பட வேண்டுமானாலும், ஈசுவரனுடைய ஸ்வரூபத்தை அறிந்த மற்றொருவனிடம் கேட்டால் தான் ஏற்படும். தவிரவும் ஈசுவரனே, மானுஷ விக்கிரஹம் எடுத்தோ எப்படியோ, நம் முன் வந்து நின்று "நான் தான் ஈசுவரன், நான் சொல்கிறபடி எல்லாரும் கேளுங்கள்" என்று சொன்னால், நாம் அவரை ஈசுவரன் என்று ஒப்புக்கொள்ளவாவது அவர் சொல்கிறபடி கேட்கவாவது தயாராயிருக்கிறோமா? முன்னொரு காலத்தில் பகவான் ஸ்ரீ கிருஷ்ணனாக அவதரித்த ஸமயத்தில் அப்படியும் நேரில் சொல்லிப் பார்க்க வில்லையா? அவர் சொல்லியும் துர்யோதனன் நம்பாமல் தானே இருந்தான்? தவிரவும் ஈசுவரனுக்குச் சொந்தமான ரூபம் இல்லாததினால், நம் முன் ஸ்வய ரூபத்துடன் வந்து நிற்க முடியாது. "பிரத்யக்ஷத்திற்கு விஷயமாகாததினால் ஈசுவரனே கிடையாது" என்று சார்வாகாதிகள் சொல்

கிருர்களே யென்று நினைத்து ஒரு காலத்தில் ரிஷிக ளெல்லாம் ஈசுவரனை பிரத்யக்ஷமாகும்படி பிரார்த் தித்துக் கேட்டுக் கொண்டார்கள். அவர்கள் பிரார்த் தனைக்கு இணங்கி பகவானும் ரூபம் தரித்து சார்வா காதிகள் முன்னிலையில் தோன்றினர். அப்பொழுது அவர்கள் “இதுவரையில், இல்லை என்று சொல்லி வந்தோம். இப்பொழுது அல்ல என்று சொல்கிறோம். இவர் பிரத்யக்ஷத்திற்கு விஷயமாவதால் ஈசுவரனல்ல” என்று சொன்னார்களாம். இவ்விதமாக नास्ति ईश्वरः प्रत्यक्षाविषयत्वात् என்றும் नायं ईश्वरः प्रत्यक्षविषयत्वात् என் றும் சமயத்திற்குத் தக்கபடி தோன்றினபடி யெல் லாம் ஆக்ஷேபிக்கிறவர்களுக்கு ஈசுவரன் நேரில் வந்து தான் என்ன பிரயோஜனம்.

ஈசுவரன் ஏற்கெனவே வேத மூலமாக தர்மாதர் மம் இன்னதென்று வெளியிட்டிருப்பதால், அந்த சாஸ்திரத்தை நாமே எடுத்துப் பார்த்தால் போதாதா? இதற்காக குரு எதற்கு? என்று மற்றொரு கேள்வியும் கேட்கலாம். முதல் கார்யம், எல்லா சாஸ்திரத்தை யும் வாசித்து அதில் சொல்லியிருக்கும் விஷயங்களை நாமே தெரிந்து கொள்வதென்பது ஸாத்தியமில்லாத தது. இரண்டாவது, சாஸ்திரம் முழுவதையும் கற்றுக் கொண்டு அப்புறம் தர்மானுஷ்டானம் செய்வதென் ருல், அதுவும் ஸாத்தியமில்லாத கார்யம். ஏனென் ருல் சாஸ்திராப்யாஸம் செய்யவே நம் ஆயுள் காலம் எவ்வளவு இருந்தாலும் போதாது. தவிரவும் நம்மி டம் இருக்கும் தோஷங்கள் அனந்தமாயிருப்பதுடன்,

அவைகளை நாமே தெரிந்து கொள்ளவாவது போக்கடித்துக் கொள்ளவாவது ஸாத்தியமில்லை. ஆகையால் நம்முடைய பக்குவத்தை அறிந்து, இவன் இன்ன படியிலிருக்கிறான், இன்ன கார்யம் செய்தால் மேல் படிக்குப் போகலாம், என்று எடுத்துச் சொல்லவும் குரு அவசியம். ஜ்வரத்தினால் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிற ஒருவனுக்கு குளிர்ந்த ஜலத்தில் ஸ்நாநம் செய்தால் உஷ்ணம் சமனமாகும் என்று தோன்றும். அதுவும் வாஸ்தவம்தான்; ஆனால் சரீரத்துடன் சேர்ந்தே சமனத்தையடையும். ஆகையால் கேவலம் நம் தோற்றத்தை வைத்தாவது யுக்தியை வைத்தாவது ஒன்றும் செய்வதற்கில்லை. ஜ்வரத்தின் ஸ்வரூபம் தெரிந்தவனாய், இந்த ஜ்வரத்திற்கு இன்ன மருந்து, இன்ன விதமாய் உபயோகப்படுத்த வேண்டுமென்று தெரிந்தவனாய், ஒரு வைத்தியனைத் தேட வேண்டும். இந்த ஜ்வரத்திற்கு இன்ன மருந்தென்று நமக்கு தெரிந்தாலும் போதாது. ஜ்வரம் ஜாஸ்தியாயிருக்கும்போது சீக்கிரம் குணமடைய வேண்டுமென்ற எண்ணமிருப்பதால் நான்கு வேளைகளுக்குக் கொடுத்த மருந்தை ஒரே வேளையில் சாப்பிட்டு விட்டால் சீக்கிரம் குணமாய் விடும் என்று தோன்றும். அப்படி செய்தால் மருந்தும் விஷமாகிவிடும். அதேமாதிரி, சாஸ்திரத்தில் இன்ன இன்ன படியிலிருக்கிறவர்கள் இன்ன இன்ன ஸாதனங்களை அனுஷ்டானம் செய்ய வேண்டுமென்று சொல்லியிருப்பதை யெல்லாம் நன்றாய் அறிந்து நம்முடைய யோக்யதைக்குத் தகுந்த உபாய

த்தை எடுத்துக் காட்டுவதற்கு கட்டாயம் குரு அவசியம்.

### 3. ஞான தானம்

தானங்களிலெல்லாம் சிறந்தது அன்ன தானம் என்று சொல்லப் பட்டிருக்கிறது. ஏனென்றால் தானம் வாங்குகிறவனுக்குத் திருப்தி யேற்படும்வரை செய்யக்கூடிய தானம் அது ஒன்றுதான். எவ்வளவு பணம் கொடுத்தாலும், வஸ்திர தானம் செய்தாலும், பூதானம் கொடுத்தாலும், வாங்குகிறவன் போதுமென்று சொல்வது கிடையாது. ஆனால் அன்ன தானத்தில் எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவு சாப்பிட்டுவிட்டால், போதும் என்று சொல்லிவிடுவான். அதற்குமேல் ஒரு கவளம் கொடுத்தாலும் வேண்டாமென்றே சொல்வான். இவ்விதமாக, போதுமென்று சொல்கிறவரையில் திருப்தியேற்படுத்தக்கூடிய தானம் அன்னதானம் ஒன்றுதான். அதினால்தான் அது மிகவும் சிரேஷ்டம் என்று சொல்கிறார்கள். ஆனால் இந்த தானத்திலும், ஒருவேளை சாப்பிட்டபின் அப்பொழுது போதுமென்று சொன்னாலும் கூட, அந்த திருப்தி அப்பொழுது மாத்திரமிருக்குமே தவிர, அடுத்த வேளையில் பசி வரும்போது மறுபடியும் அன்னத்தில் அபேக்ஷை யேற்பட்டுத்தான் தீரும். ஆகையால் திருப்தியேற்படுத்திக் கொடுப்பதுடன் மறுபடியும் அபேக்ஷையே யில்லாமல் நித்திய திருப்தியேற்படக் கூடியதாக ஒரு தானமிருந்தால், அதற்கு மேலான தானம் கிடையாதென்று சொல்வதில் என்ன

ஸந்தேகம்? அப்படியே, ஒருவனுக்கு ஒரு விஷயத்தில் அபேக்ஷயிருக்கும்போது அந்த பதார்த்தத்தை அவனுக்குக் கொடுத்தால் அந்த பதார்த்த விஷயமான திருப்திமாத்திரம் ஏற்படும். மற்ற பதார்த்தங்களில் காமம் ஏற்படாதென்று சொல்ல முடியாது. ஒருவித திருப்தியை உண்டுபண்ணினால், ஸகலவித காமங்களும் நிவிருத்தியாகுமென்று இருக்குமானால், அவ்வித திருப்தியை யுண்டாக்கக்கூடிய தானத்திற்கு ஸமானமுண்டோ? இவ்விதமாக எக்காலத்தும் எவ் விஷயத்தும் திருப்தியை யேற்படுத்தக்கூடிய தானம் ஞானதானம் என்று சொல்கிறார்கள். அவ்விதமான ஸர்வோத்கிருஷ்டமான ஞானதானத்தை செய்கிற ஸத்குருவிற்கு உபமானம் ஏது என்று நம் ஆசார்யாள் சொல்கிறார்கள்.

दृष्टान्तो नैव दृष्टस्त्रिभुवनजठरे सद्गुरोर्ज्ञानदातुः

அவருக்கு ஸமானமான பதார்த்தம் உலகத்தில் இருந்தாலல்லவா உபமானம் சொல்லலாம். தான் தொடும் இரும்புத் துண்டுகளையெல்லாம் ஸ்வர்ணமாக்கக்கூடிய ஸாமர்த்தியமுள்ள ஸ்பர்ச மணியை உபமானமாகச் சொல்வோமென்றால், அதுவும் இரும்பை தங்கமாக்குமேயொழிய, இரும்பை ஸ்பர்ச மணியாகச் செய்ய முடியாது. இரும்பை ஸ்வர்ணமாக்கினாலும், அந்த இரும்புக்கு மற்ற இரும்புகளை தானே ஸ்வர்ணமாக்கும் தன்மையைக் கொடுத்துவிடாது.

स्पर्शश्चेत्तत्र कल्प्यः स नयति यदहो स्वर्णतामश्मसारम् ।
न स्पर्शत्वं तथापि

ஆசார்யரோவென்றால் தன்னை சரணமடைந்த தன் சிஷ்யனை தனக்கு எவ்விதத்திலும் ஸமானமாக்கிவிடு கிறார். அந்த சிஷ்யனுக்கு ஏற்படும் சிஷ்யர்களையும் அதே பதவிக்குக் கொண்டுவரக்கூடிய வல்லமையுள்ள வனாக அவனே ஆகிவிடுகிறான்.

**श्रितचरणयुगे सद्गुरुः स्वीयशिष्ये स्वीयं साम्यं विधत्ते**

தன் ஸாம்யத்தை சிஷ்யனுக்கு ஏற்படுத்துகிறார் என் பது விசேஷம். 'ஸ்வீயம் ஸாம்யம்' என்ற பதங்களை வேறு விதமாகவும் வியாக்யானம் செய்யலாம். ஸ்ரீமத் பகவத் கீதையில் **पण्डिताः समदर्शिनः** என்ற இடத்தில் ஸ்ரீமத் ஆசார்யாள் "ஸம" என்கிற பதத் திற்கு "பிரஹ்மம்" என்று பாஷ்யம் செய்திருக்கிறார் கள். ஆகையால் "ஸாம்யம்" என்பதை "பிரஹ்மத் வம்", பிரஹ்மத் தன்மை, என்றே வைத்துக்கொள் ளலாம். அதாவது, குருவானவர் சிஷ்யனுக்கு அவ னுக்குச் சொந்தமான பிரஹ்மத் தன்மையையே அளிக் கிறார் என்று ஏற்படுகிறது. முன் சொன்ன அர்த்தத் தில், குரு மாதிரி சிஷ்யன் ஆகிறான் என்று சொல்வதில் குருவுக்கும் சிஷ்யனுக்கும் வேற்றுமை த்வனிப்பதால், இரண்டாவது சொன்ன வியாக்யானமே சிறந்த தென்று தோன்றுகிறது. இவ்விதமாக, தன் ஸ்வரூப மான பிரஹ்மத் தன்மையையே சிஷ்யனுக்கு அளிக்கத் தயாராயிருக்கிற குருவுக்கு உபமானம் எப்படி அகப் படும்? ஆகையால்தான் ஆசார்யர் **भवति निरुपमस्तेन वा लौकिकोऽपि ॥** உபமானமற்றவர் என்று சொல்லப்படு கிறார். லௌகிக வித்யையை கற்பிக்கும் ஒரு குருவே

தனக்குத் தெரிந்த ஸகல விஷயங்களையும் தன் சிஷ்ய னுக்கு சொல்லிக்கொடுத்து தனக்கு ஸமானமாக்குவ தால் அவருக்குக்கூட உபமானம் சொல்ல முடியாது. அப்படியிருக்க ஸர்வோத்கிருஷ்டமான வித்யையைக் கொடுத்து நிச்ரேயஸம் கொடுக்கும் ஆசார்யர் உப மானமற்றவர் என்பதில் என்ன ஸந்தேகம். அபார கருணாஸாகரமாகிய ஆசார்யர் நம்மை உத்தாரணம் செய்வித்து நமக்கு சிரேயஸ்ஸை உண்டுபண்ண ஸித்த மாயிருக்கும்போது அவருடைய பாதாரவிந்தங்களில் சரணாகதிசெய்து அவரையே அவலம்பனமாக வைத் துக்கொண்டு நிச்ரேயஸம் வரையுள்ள ஸகல இஷ்ட ஸித்திகளையும் நாம் அடையலாமென்பதில் ஆக்ஷே பணையுண்டோ?

## 4. சில பக்தர்கள்

ஆசார்ய சரணாகதி செய்யவேண்டியது அவசிய மென்று சொல்லப்பட்டது. எந்தக் கார்யமும் செய்ய வேண்டியதென்று சொன்னால், அதற்கு பிரமாணம் கேட்பது நியாயமாயிருப்பதால், ஆசார்ய சரணாகதி விஷயமாகவும் பிரமாணம் சொல்வதுதான் உசித மாகும். அவ்விதம் யார் யார் இதற்கு முன்னால் சரணா கதி செய்து சிரேயஸ் அடைந்திருக்கிறார்கள் என் பதைத் தெரிந்துகொண்டு நாமும் ஆசார்யருடைய ப்ரீதியை ஸம்பாதித்துவிட்டால் ஆகக்கூடாத கார்யம் ஒன்றுமேயில்லை.

यदि तुष्टो गुरुरेकः स्वयमेवायान्ति सिद्धयः सर्वाः ।

என்று சொல்லியிருக்கிறபடி, குரு ப்ரீதி ஒன்று இருந்து விட்டால் எல்லா ஸித்திகளும் தானகவே ஏற்பட்டு விடும். ஏனென்று கேட்டால் நம் சாஸ்திரப்படி குரு வின் ஸ்வரூபத்தைச் சொல்லும்போது

गुरुर्ब्रह्मा गुरुर्विष्णुर्गुरुर्देवो महेश्वरः ।

அதாவது குருவே பிரஹ்மா, குருவே மஹாவிஷ்ணு, குருவே பரமேசுவரன் என்றிருக்கிறபடியால் திரிமூர்த் திகளையும் அவர்களுக்குக் கீழ்பட்ட ஸகல தேவதை களையும் தனித்தனியே உபாஸித்தால் எந்தெந்த பலன் கள் கிடைக்குமோ அத்தனை பலன்களும் குரு ஆராத னம் ஒன்றினால் கிடைக்கும். அதை வைத்துத்தான் குருவை ஸர்வதேவதாமயன் என்று சொல்வது:

இவ்விதம் ஆசார்ய பரிதோஷணத்தினல் மஹிமை பெற்றவர்களில் பத்மபாதாசார்யரை சொல்லலாம். அவருக்கு முதலில் ஸனந்தனர் என்று பெயர். அவ ரிடம் ஆதி ஆசார்யாரவர்களுக்கு விசேஷமான அபி மானமிருப்பதாக மற்ற சிஷ்யர்கள் நினைத்து அவரிடத் தில் கொஞ்சம் பொறாமை கொண்டிருந்தார்கள். பொறாமை என்பது தோஷமாகவிருப்பதால், அதை நிவிருத்தி செய்ய வேண்டியது அவசியமென்று நினைத் தும், ஸனந்தனருடைய விசேஷ பக்தியை எல்லோ ருக்கும் தெரியும்படிச் செய்ய உத்தேசித்தும், ஒருநாள் கங்கா நதிக்கு அக்கரையிலிருந்த சிஷ்யர்களை இக் கரைக்கு உடனே வரும்படி ஆசாரியார் ஆக்ஞாபிக்க ஸனந்தனரைத் தவிர மற்ற சிஷ்யர்கள் உடனே ஓடம்

அகப்படுமா என்று பார்க்கப் போனார்கள். அப்பொழுது ஸனந்தனர் அபாரமான ஸம்ஸார ஸாகரத்தையே கடத்தி வைக்க வல்லமையுள்ள குரு பாதுகை இருக்கும் போது இந்த நதியைக் கடப்பதா நமக்குப் பெரிது என்று குரு பாதத்தில் நிரதிசய பக்தியுடன் கங்காப்பிரவாஹத்தில் இறங்கிவிட்டார். இவருடைய பக்தியைப் பார்த்து கங்காதேவியும் இவருடைய கால் அடிகளைத் தாங்குவதற்காக அங்கங்கே ஒவ்வொரு தாமரை மலரை உண்டுபண்ணிக் கொடுத்தாள். இதைக் கண்டு ஆச்சர்யமடைந்த மற்ற சிஷ்யர்கள் பொறாமையை விட்டு அது முதல் ஸனந்தனரிடம் விசேஷ கௌரவ புத்தியை வைத்தார்கள். இவர் பாதம் வைத்த இடமெல்லாம் பத்மம் உண்டான படியால், அது முதல் பத்மபாதர் என்று இவருக்குக் காரணப்பெயர் ஏற்பட்டது. இந்த ஸந்தர்ப்பத்தில் சங்கர விஜயத்தில்

संतारिकाऽनवधिसंसृतिसागरस्य

किं तारयेन्न सरितं गुरुपादभक्तिः ।

என்று சொல்கிற இடத்தில் "அநவதி" அதாவது எல்லையில்லாதது என்று ஸம்ஸார ஸாகரத்திற்கு விசேஷணமாகப் போட்டிருப்பதால், எல்லையே கிடையாதோ என்று ஸந்தேகப்பட வேண்டாம். அநவதி, அபாரம், முதலான வார்த்தைகளெல்லாம் நாம் இப்பொழுதிருக்கும் ஸ்திதியை வைத்துச் சொன்னது. நாம் இப்படியே இருந்துவரும் பக்ஷத்தில் ஒரு நாளும்

நாம் மறுகரைக்குப் போவது கிடையாது தான். அதனுல் மறுகரையே கிடையாது என்று சொல்லப் படுகிறது. ஆனுல் வாஸ்தவத்தில் ஸம்ஸாரத்திற்கும் எல்லையுண்டு. ஞானம் தான் எல்லை. ஞானம் வந்து விட்டதேயானுல் அக்கரைக்குப் போய் விடுவோம். அதுதான் "பாரம்" கரை, அதுதான் "அவதி," எல்லை. அதுவரை ஸம்ஸாரத்தை அபாரம், அநவதி, என்று சொல்வதும் பிசகு இல்லை.

இன்னும் தோடகாசார்யார் சரித்திரத்தை கவனிப்போம். ஆசார்யரே சரணம் என்று எண்ணி அவர் நம் ஆசார்யாளின் வஸ்திரங்களைத் துவைக்கிறது முதலிய சுசுரூஷைகள் செய்துவந்தார். அவருக்கு சாஸ்திர பரிக்ஞானம் அதிகமாகக் கிடையாது. அப்படியிருந்தும், அவர் வந்துதான் ஆசார்யாள் வேதாந்த பாடப் பிரவசனம் செய்வது வழக்கமாயிருந்தது. ஒரு நாள் அவர் வர தாமதப்பட்டது. ஒரு விஷயமும் அறிய சக்தியில்லாத அவருக்காக ஆசார்யாள் தாமதிப்பது சரியில்லையென்று பத்மபாதாசார்யர் முதலியோர்கள் நினைத்தார்கள். "அவரும் இருந்தால்தான் பாடம் சொல்ல வேண்டுமென்று தங்களுக்கு அபிப்பிராயமிருந்தால், அவருக்குப் பிரதிநிதியாக இந்தச் சுவர் இருப்பதினுல், தாமதப்படுத்த வேண்டியதில்லை" என்று பத்மபாதாசார்யர் சொன்னுர். இதைக் கேட்ட ஆசார்யாள் இவர்களுக்கு ஏற்பட்டிருந்த வித்யா கர்வத்தைப் போக்கடிக்க உத்தேசித்தும், அப்பொழுது தன் சிஷ்யனிடம் ஏற்பட்ட

விசேஷ கருணையினாலும், பதிநான்கு வித்யைகளும் ஸம்க்ரமமாய் அவருக்கு உதயமாகும்படி மனஸினாலேயே அனுக்ரஹம் செய்தார்கள். நதிக் கரையில் வேஷ்டி துவைத்துக் கொண்டிருந்த கிரி என்ற அந்த சிஷ்யர் உடனே ஸகலசாஸ்திரபாரங்கதராய்விட்டார். அப்பால் அந்நதிக்கரையிலிருந்து ஆசார்யார் ஸன்னிதியில் வந்து கொண்டிருக்கும் பொழுதே அவர் சுருதிஸார ஸமுத்தாரம் என்று பெயர் விளங்குகிற கிரந்தத்தில் அற்புதமான சுலோகங்களினால் ஆத்ம ஸ்வரூபத்தை வெளியிட்டார். அதைக் கண்டு மற்ற சிஷ்யர்கள் ஆச்சர்யப்பட்டு அதுமுதல் அந்த கிரியிடம் கௌரவம் பாராட்டி வந்தார்கள். அந்த சுலோகங்கள் தோடக விருத்தத்தில் அமைந்திருந்தபடியால், அன்று முதல் தோடகாசார்யார் என்ற பெயரும் அவருக்கு ஏற்பட்டது.

## 5 பக்தியே பலன் தரும்

அப்படியே, ஆசார்யபக்தியில் சிறந்தவனாக ஏகலவ்யன் என்று ஒருவன் இருந்ததாக மஹாபாரதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அவன் துரோணாசார்யாரிடம் போய் தனக்கு தனுர் வித்யை கற்றுக் கொடுக்க வேண்டுமென்று கேட்டதற்கு அவர் மறுதளித்து விட்டார். அதன் பேரில், மற்றொரு குருவை அடைய இஷ்டமில்லாதவனாக, அவருடைய உருவம் போல் மண்ணில் ஓர் உருவம் செய்து வைத்துக்கொண்டு, அதற்குப் பிரதிதினமும் நமஸ்காராதிகள் செய்து விட்டு, தானாகவே அதன் முன்னிலையில் தனுர் வித்யை

அப்யாஸம் செய்ய ஆரம்பித்து மிகவும் ஸாமர்த்திய முள்ளவனாக ஆகிவிட்டான். ஒரு நாள் துரோணாசாரியாரும் அர்ஜுனனும் ஒரு காடு வழியாகப் போய்க் கொண்டிருக்கும்போது, ஒருவனால் அடுத்தடுத்து விடப்பட்ட ஐந்து பாணங்கள் ஸமகாலத்தில் ஒரு நாயை அடித்ததை கவனித்த துரோணரும் அர்ஜுன னும் ஆச்சர்யப்பட்டு, யார் அம்பு போட்டதென்று கவனிக்கையில் அங்கு நின்ற ஏகலவ்யனைப் பார்த்து, நீ யார் என்று கேட்டார்கள். தான் துரோணா சார்யர் சிஷ்யன் என்று சொன்னான். லோகோத் தரமான தனுர் வித்யாப்யாஸம் உனக்கே கற்றுக் கொடுக்கிறேன் என்று முன் துரோணாசார்யர் செய் திருந்த பிரதிக்ஞையை ஞாபகத்தில் வைத்திருந்த அர் ஜுனன் இப்பொழுது ஏகலவ்யனுடைய ஹஸ்த லாக வத்தைப் பார்த்து, அப்பிரதிக்ஞைக்கு விரோதமாக மற்றொருவனை தன்னை விடப்பெரிய வில்லாளியாக தன் ஆசார்யர் செய்திருக்கிறார் என்று ஸந்தேகப் பட் டான். முன் தன்னிடம் வந்து கேட்ட போது தான் நிராகரித்தது ஞாபகமில்லாமல், துரோணரும் "நீ துரோணாசார்யருக்கு எப்படி சிஷ்யன், அவர் எப் பொழுது உனக்கு அப்யாஸம் செய்து வைத்தார்?" என்று கேட்க, ஏகலவ்யன் தன்னுடைய விருத்தாந் தத்தைச் சொன்னான். அதைக் கேட்டு ஆச்சரியப் பட்ட துரோணர் அர்ஜுனன் விஷயமாய் தான் முன் செய்திருந்த பிரதிக்ஞையை நினைத்து "நான் தான் துரோணர். நீ வாஸ்தவமாக என் சிஷ்யனாக இருந்

திற பக்ஷத்தில் எனக்கு குரு தக்ஷிணை கொடுக்க வேண்டியதில்லையா?" என்று கேட்டார். "அப்படியே கொடுக்க ஸித்தமாயிருக்கிறேன், என்ன கொடுக்க வேண்டும்?" என்று அவன் கேட்க, 'உன் கைக்கட்டை விரல்களை நறுக்கிக் கொடுக்க வேண்டும்' என்று சொன்னார். உடனே மனதில் கொஞ்சமேனும் கவலையன்னியில் தன் கைக் கட்டைவிரல்களை நறுக்கி ஸமர்ப்பணம் செய்தான். அந்தக் குறைவு ஏற்பட்டபடியால் அர்ஜுனனைவிடப் பெரிய வில்லாளியாயிருந்த ஏகலவ்யன் அர்ஜுனனுக்கு ஸமானமானான். இந்த உபாக்கியானத்தில், ஏகலவ்யனுக்கு ஏற்பட்ட தனுர் வித்யா ரூபமான பலனைக் கொடுத்தது யார்? துரோணருக்கு இவன் தன் சிஷ்யன் என்றே தெரியாது. தெரிந்தவுடன் அனுக்ரஹம் செய்யாமல் நிக்ரஹம் செய்யவும் ஸித்தமாயிருந்திருக்கிறார். ஆகையால் அவருடைய பிரஸாதத்தினால் ஏற்பட்டதென்று சொல்ல இடமே இல்லை. அவருடைய மண் உருவத்திற்கு பலன் கொடுக்கும் தன்மையிருந்தது என்று சொல்வதும் பொருந்தாது. ஆகையால் இவனுடைய குரு பக்தியே தான் காரணமென்றும், அந்த குரு பக்தியினால் பிரீதியடைந்த ஈசுவரனே பலன் கொடுத்திருக்கிறார் என்றும் தீர்மானம் செய்ய வேண்டியிருக்கிறது.

இவ்விதமாக அநேகர்களுடைய சரித்திரங்கள் பக்தியுடன் குருவை சரணமடையும் விஷயமான பிரமாணங்களாகும். அவர்கள் எல்லோரும் செய்திருந்த சரணாகதி மாதிரி நம்மால் செய்ய முடியாமல்

போனாலும், நம் சக்திக்கு ஏற்றபடியாவது செய்ய வேண்டியது உசிதமே. நமக்கு ஸாத்தியமான சரணாகதி எவ்வளவு என்பதை நாமே தீர்மானம் செய்து கொள்ளவேண்டியது. ஈசுவரன் நம்மைவிடப் பெரியவன், அவனே நியந்தா, ஆசார்யர் நம்மைவிடப் பெரியவர், அவரே சரணம், என்று வாயால் சொல்லிக் கொண்டிருந்தால் மாத்திரம் போதாது. ஒரு யஜமானனிடம் போய் பிரதி தினமும் நீயே பெரியவன், நீதான் யஜமானன், என்று ஸ்தோத்திரம் செய்துவிட்டு நமஸ்காரம் செய்துவிட்டு வந்தால் மட்டில் அவன் நல்ல ஸேவகன் ஆகமாட்டான். ஸ்தோத்திரம் நமஸ்காரம் செய்யாமல் போனாலும் யஜமானன் இட்ட கட்டளையை குறைவன்னியில் நிறைவேற்றி வருபவனே நல்ல ஸேவகனாவான். சொன்ன கார்யத்தைச் செய்யாமல் நித்தியம் நமஸ்காரம் மாத்திரம் செய்து வரும் ஸேவகனிடத்தில் யஜமானனுக்கு ஒருநாளும் பிரீதி ஏற்படாது. அதிருப்திதான் ஏற்படும். ஆகையால் நாம் குரு பக்தி செய்கிறோம் என்று வாஸ்தவமாகச் சொல்லிக்கொள்ள வேண்டுமானால் நித்தியம் நாம் நம்முடைய ஆசார்ய மூர்த்திக்கு வந்தனாதிகள் மாத்திரம் செய்தால் போதாது. அவர் சொல்லியிருக்கிறபடி நடந்துவந்தால்தான் அவருடைய பிரஸாதம் ஏற்பட்டு நாம் சிரேயஸ் அடையலாம்.



## அத்யாயம் 2.

## குருவின் கட்டளை.

### 1. ஈசனும் ஜகத்தும்.

குரு பக்தி செய்வதென்றால் குரு சொல்லிய கட்டளைகளை நிறைவேற்றுவதைத் தவிர வேறில்லையென்று சொன்னோம். அப்படி நம்முடைய ஆசார்யார் நமக்கு என்னவிதமான கட்டளைகள் இட்டிருக்கிறார் என்று கேட்டால், அவரே சுருக்கமாக உபதேச பஞ்சகம் என்ற கிரந்தத்தில் சொல்லியிருக்கிறார். முதல் சுலோகத்தை மாத்திரம் கவனிப்போம். அதிலேயே எட்டு கட்டளைகள் இருக்கின்றன.

1. वेदो नित्यमधीयताम् — வேதத்தை நித்தியம் அத்யயனம் செய்,
2. तदुदितं कर्म स्वनुष्ठीयताम् — அதில் சொல்லிய கர்மாவை நன்கு அனுஷ்டானம் செய்,
3. तेनेशस्य विधीयतामपचितिः — அதனால் ஈசுவரனுடைய ஆராதனத்தை செய்,
4. काम्ये मतिस्त्यज्यताम् — காம்யத்தில் எண்ணத்தை விட்டு விடு,
5. पापौघः परिधूयताम् — பாபக் குவியலை நன்கு உதறிவிடு,
6. भवसुखे दोषोऽनुसंधीयताम् — ஸம்ஸார ஸுகத்தில் தோஷத்தை அனுஸந்தானம் செய்,

7. आत्मेच्छा व्यवसीयताम् — ஆத்ம விஷயமான இச்சையை உறுதிப்படுத்து,
8. निजगृहात्तूर्णं विनिर्गम्यताम् — உடனே தன் வீட்டிலிருந்து நன்கு வெளிக்கிளம்பு.

ஸ்ரீமத் பகவத்கீதா பாஷ்யத்தின் ஆரம்பத்தில் ஆசார்யார் சொல்லியிருக்கிறபடி, ஈசுவரன் ஜகத்தை ஸ்ருஷ்டி செய்தவுடன் ஸனக ஸனந்தனாதி மகர்ஷிகள் மூலமாக நிவிருத்தி தர்ம மார்க்கத்தையும், மரீசி முதலிய ரிஷிகள் மூலமாக பிரவிருத்தி தர்ம மார்க்கத்தையும் பிரசாரம் செய்தார். ஸ்ருஷ்டி செய்யப் பட்ட ஜகத் சரியான ஸ்திதியில் இருந்து வருவதற்கு தர்மமே ஸாதனம் धर्मो विश्वस्य जगतः प्रतिष्ठा என்று சொல்கிறபடியால் ஜகத்தின் நிலைமை தர்மத்திற்கு அதீனமா யிருக்கிறது. சிரவண மனனாதி ரூபமான தர்மத்திற்கு நிவிருத்தி தர்மம் என்றும், அக்னி ஸாத்தியமான தர்மத்திற்கு பிரவிருத்தி தர்மம் என்றும், பொதுவாக லக்ஷணம் சொல்லலாம். ஜகத்தின் ஸ்திதிக்கு ஸாதனமான தர்மம் யாரால் ஏற்படுத்தப்படவேண்டு மென்றால் அது ஜகத்தை ஸ்ருஷ்டி செய்த ஈசுவரனைத் தவிர வேறு ஒருவராலும் முடியாத காரியம்.

இந்த ஜகத்து எப்பொழுதுமே இப்படியே இருந்து வந்திருக்கிறது என்று சொல்லி விட்டால் என்ன? ஈசுவரன் ஒருவர் ஸ்ருஷ்டி செய்தார் என்று வைத்துக் கொண்டு, ஜகத்தின் ஸ்திதிக்காக அவரே ஏற்பாடு செய்தார் என்று எதற்காகச் சொல்ல வேண்டும்?

அல்லது, ஜகத்து எப்படி ஸ்ருஷ்டியாயிருந்த போதி லும் இந்த தர்ம வியவஸ்தையை ஜீவர்களே செய்து கொண்டார்களென்று வைத்துக் கொண்டால் என்ன? இவ்விதமாக பல கேள்விகளை சிலர் கேட்கிறார்கள். இதற்கு யுக்தி புரஸ்ஸரமாகவே அப்பய்ய தீக்ஷித ரவர்கள் ஆத்மார்ப்பண ஸ்துதி என்கிற கிரந்தத்தில் பதில் சொல்லியிருக்கிறார். அவயவத்தோடு கூடிய பதார்த்தங்கள் எல்லாமே உத்பத்தியாகித்தானிருக்க வேண்டுமென்று எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். உத்பத்தியானது மாத்திரம் வாஸ்தவம், ஆனால் கர்த்தா கிடையாது, என்று சொல்வது யுக் திக்கு விரோதம். ஏனென்றால், உத்பத்தியாவதற்கு முன் இல்லாமலிருந்த பதார்த்தம் பின்னால் உத்பத்தி யாக வேண்டுமேயானால் அதற்கு ஒரு காரணம் சொல்ல வேண்டும். அந்தக் காரணத்திற்குக் கட்டுப் பட்டு கார்யமே தன்னால் தானே உண்டாவது முடி யாது; ஏனென்றால், உத்பத்தியாவதற்கு முன் தான் இல்லை. ஆகையால், காரணத்திலிருந்து கார்யம் ஏற் பட வேண்டுமானால், கர்த்தா ஒருவன் அவசியம் அங் கீகரிக்கப்பட வேண்டும். ஜடமான ஜகத்து, தான் பூர்வமில்லாததினாலும், ஜடமானதினாலும், தன்னை தானே ஸ்ருஷ்டி செய்து கொள்வது ஸாத்யமில்லாத கார்யம். இப்பொழுது புலப்படும் ஜகத்து ஸ்தூல பூதங்களால் செய்யப்பட்டிருப்பதால், இதற்குக் காரணம் ஸூக்ஷ்ம பூதங்கள் என்று சொல்லக்கூடு மானாலும், இந்திரியங்களுக்கு எட்டாத ஸூக்ஷ்ம

பூதங்களுக்காகவாவது ஒரு ஈசுவரனை ஒப்புக்கொண்டு தான் தீரவேண்டும். ஈசுவரனை ஸாதிக்கக்கூடிய யுக்தி கள் எத்தனையோ இருந்தும், இப்பொழுது ஜகத் ஸாவயவம் என்ற ஒரு ஹேதுவே போதுமானது.

ஜீவன் பராதீனனுகவும் கிஞ்சிக்ஞனுகவுமிருப் பதால் தர்ம வியவஸ்தையை தானே கண்டுபிடித்துக் கொள்வது ஸாத்தியமில்லாத காரியம். தனக்கே தர்மம் அதாவது ஸுக ஸாதனம், அதர்மம் அதாவது துக்க ஸாதனம், எது என்று தெரிந்துகொள்ள சக்தி யிருக்கும் விஷயத்தில் ஒருவனும் துக்கமடையக் காரணமில்லை, ஸதா ஸுகமும் அடையப் பட்டிருக்க வேண்டும். இந்தக் காரணத்தினுலேயே தர்மாதர்ம வியவஸ்தை ஜீவனுல் செய்யக் கூடியதில்லை என்றும் நன்ருய்த் தெரியும். ஆகையால் ஈசுவரனுல் செய்யப் பட்டதென்றே சொல்லவேண்டும். ஒரு குடும்பத்தில் இருக்கும் ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு ஏற்பட்ட அந்தந்த கடமைகளைத் தவருமல் நடத்திக்கொண்டு குடும்ப யஜமானனுடைய ஆக்ஞைக்குக் கட்டுப்பட்டு நடந்து வருவார்களேயானுல், அந்த குடும்பம் நிரம்ப வும் சிலாக்கியமாயிருக்கும். குடும்பஸ்தர்கள் ஒவ் வொருவரும் தங்களுக்குத் தோன்றினபடி யெல்லாம் நடந்து வந்தால் குடும்பம் அதிசீக்கிரம் கெட்டுவிடும் என்பதிலும் ஆக்ஷேபணையில்லை. ஆகையால் இந்த ஜகத்து முழுமையையும் குடும்பமாகப்பெற்ற ஈசுவரன் ஜகத் ஸ்திதியைக் கருதி அவரவர்களுக்கு ஏற்பட்ட கடமைகள் இன்னதென்று விபாகம் செய்திருக்கிருர்.

ஒரு ராஜ்யம் என்றால் எல்லாரும் எல்லாக் கார்யங்களை யும் பார்ப்பதானால் அது ராஜ்யமேயாகாது. அந்தந்த அதிகாரம் பெற்றவர்கள் தங்கள் தங்கள் உத்யோகங் களை கலப்பன்னியில் பார்த்து வந்தால்தான் ராஜ்யம் நன்றாயிருக்கும். அவ்விதமே, ஈசுவரன் இந்த ஜகத் தான பெரிய ராஜ்யம் சரிவர நடந்து வருவதற்காக இந்த தர்மவியவஸ்தையை செய்திருக்கிறார்.

## 2. தர்மாதர்ம வியவஸ்தை.

ஒருகுடும்பத்தின் யஜமானனாயிருக்கிற தகப்பனார் தன் குமாரர்களைப் பார்த்து, நீங்கள் குடும்ப சிரேயஸ்ஸையும் உங்களுடைய சிரேயஸ்ஸையும் உத் தேசித்து இன்ன இன்ன மாதிரி நடந்து கொள்ள வேண்டும், இன்ன இன்ன மாதிரி நடந்துகொள்ளக் கூடாது, என்று ஹிதோபதேசம் செய்கிற மாதிரி ஜகத் பிதாவான ஈசுவரன் தன் பிரஜைகளாகிய ஜீவர் களைப்பார்த்து, நான் தர்மம் என்று சொல்கிறதை அனுஷ்டானம் செய்யவேண்டும், அதர்மம் என்று சொல்கிறதை பரித்யாகம் செய்யவேண்டும், என்று ஹிதோபதேசம் செய்திருக்கிறார். ஆகையால் பகவா னால் 'अहरहः संध्यामुपासीत' முதலான வாக்கியங்களால் விதிக்கப்பட்டிருக்கிற ஸந்தியாவந்தனாதிகளான வர் ணாசிரம தர்மங்கள் எவையென்று தெரிந்துகொண்டு அனுஷ்டானம் செய்யவேண்டும், 'न कलञ्जं भक्षयेत्' முதலான வாக்கியங்களால் நிஷேதம் செய்யப்பட் டிருக்கிற களஞ்ச பக்ஷணம் முதலியவை அதர்மம்

என்று தெரிந்துகொண்டு அவைகளை பரித்யாகம் செய்ய வேண்டும். எப்படியும் தர்மம் அதர்மம் இவ்விரண்டின் ஸ்வரூபமும் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். நம் யுக்தியினாலேயாவது ப்ரத்யக்ஷத்தினாலேயாவது நாமே தெரிந்துகொள்வது கொஞ்சமேனும் ஸாத்யமில்லாத கார்யம். நம்முடைய ப்ரத்யக்ஷத்திற்கும் யுக்திக்கும் விஷயமாகக்கூடிய ஸங்கதியைச் சொல்லிக்கொடுக்க சாஸ்திரம் வேண்டியது அவசியமில்லை. தர்மாதர்மம் சாஸ்திரத்தைத் தவிர்த்து வேறு ப்ரமாணத்திற்கு விஷயமாகிறதில்லை. சாஸ்திரம் ஏற்பட்டிருப்பதினாலேயே தர்மாதர்மம் வேறு ப்ரமாணத்திற்கு விஷயமில்லையென்று ஸித்தமாகிறது. சாஸ்திரத்திற்கு லக்ஷணமே வேறு ப்ரமாணத்தினால் தெரியக்கூடாததை போதிக்கத்தக்கது என்பதுதான்.

प्रत्यक्षेणानुमित्या वा यस्तूपायो न बुद्ध्यते ।
एनं विदन्ति वेदेन तस्माद्वेदस्य वेदता ॥

என்று வேதத்திற்கு லக்ஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. சாஸ்திரம் என்று சொன்னாலே வேதம் தான். ஸ்ம்ருதி புராணாதிகளையும் நாம் சாஸ்திரம் என்று சொல்வதுண்டு; ஆனால் அவைகளுக்கு ப்ராமாண்யம் வேதத்திற்கு அதீனமாயிருப்பதினால் தான். அந்த வேதம் அப்யுதய ஸாதனமான கர்மத்தையும் நிச்ரேயஸ ஸாதனமான ஞானத்தையும் போதிக்கிறது. இஹலோக ஸுகம் முதல் ப்ரஹ்மலோக ஸுகம் வரையில் அப்யுதயத்தில் சேரும்; மோக்ஷம் நிச்ரேயஸ

மாகும். இந்த இரண்டையும் எடுத்துச்சொல்ல வேதத்திஞல்தான் முடியும். ஸாதாரணமாக ஒரு லௌகிக உத்தியோகமிருந்தாலும் அதில் செய்யவேண்டிய கார்யங்கள் எவை, செய்யக்கூடாத கார்யங்கள் எவை, என்று வியவஸ்தை உண்டு. அதேமாதிரி, ஜீவர்களுக்கும் செய்யவேண்டியதாக தர்மமும் விலக்கவேண்டியதாக அதர்மமும் சொல்லப்பட்டிருக்கிறது. அந்த தர்மம் அதர்மம் என்பது என்ன என்று தெரிய வேண்டுமாஞல் அவைகளை போதிக்கிற வேதத்தை கட்டாயம் அத்யயனம் செய்யவேண்டும். அதஞல்தான் ஆசார்யார் முதலில் வேதாத்யயனத்தை செய்யும்படி கட்டளையிட்டிருக்கிறுர்.

அர்த்தம் தெரியாமல் வேதாத்யயனம் பண்ணிஞலும் அபூர்வம் அதாவது புண்யம் ஏற்படுவது ஸித்தமாயிருந்தாலும், அத்யயனம் என்கிற வார்த்தை அர்த்தக் கிரஹணம் வரை போதிப்பிக்கும். திருஷ்ட பலஞக அர்த்தக் கிரஹணம் என்ற பிரயோஜனமிருக்கும்போது அதை உபேக்ஷிப்பது நியாயமில்லே. பிராஹ்மணஞகப் பிறந்து அத்யயனம் செய்யாமலிருந்தால் விராத்தியன் ஆகிறுன் என்று சொல்லியிருப்பதிஞல், விராத்தியதா தோஷ பரிஹாரத்திற்காக மாத்திரம் வேதாத்யயனம் என்று சிலரும், அர்த்தம் தெரியாமல் வேதாத்யயனம் செய்தால் போதுமென்றும், வேதாத்யயனத்திஞல் தனியாகப் புண்யம் கிடையாதென்றும் சிலரும், சொல்கிறுர்கள். அது சரியல்ல. எப்பொழுது சுருதியிஞல் வேதாத்யயனம்

செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டு விட்டதோ, அதை அனுஷ்டிப்பதினால் புண்யமில்லையென்று சொல்வது உசிதமில்லை. விதித்ததினாலேயே புண்யமுண்டு என்று தெரிகிறது. வேதாத்யயனம் நித்யகர்மா வென்று காட்டுவதற்காகவே "வேதத்தை நித்யம் அத்யயனம் செய்ய வேண்டும்" என்று ஆசார்யார் சொல்லியிருக்கிறார். நித்யகர்மாவானதினால், தனியாக புண்யமுண்டென்றே சொல்ல வேண்டும்.

கர்மஸ்வரூபம் தெரியவேண்டுமானால் அத்யயனம் அவசியமாகவிருக்கட்டும், பிரஹ்மஸ்வரூபம் தெரிவதற்கு அது எதற்காக வேண்டும் என்றால் அங்கேயும் பிரஹ்மத்தை உபநிஷத் மூலமாகவே அறியவேண்டியிருப்பதாலும் பிரமாணாந்தரத்தினால் அறிய முடியாததாக இருப்பதாலும் அதற்கும் வேதாத்யயனம் அவசியம் வேண்டும். "अधीतवेदान्तस्य" என்றும் "श्रोतव्यः श्रुतिवाक्येभ्यः" என்றும் சொல்லியிருப்பதினால் பாஷாக் கிரந்தங்கள் மூலமாகவே பிரஹ்மஞானம் ஏற்படலா மென்று சொல்வது சுருதிக்கு விரோதம்.

### 3. கர்மம் அவசியம்

இவ்விதமாக வேதாத்யயனம் அவசியமென்று சொல்லி அப்புறம் "அதினால் சொல்லப்பட்டிருக்கும் கர்மாவை நன்கு அனுஷ்டிக்க வேண்டும்" என்று இரண்டாவதாக ஆசார்யார் கட்டளையிட்டார். தத்காலத்தில் அத்வைத வேதாந்தத்தின் வாஸ்தவ ஸ்வரூபம் தெரியாமல் ஏதோ கர்மத்தை விட்டு

விடுவதே வேதாந்தத்தின் தாத்பர்யமென்று சிலர் ஸ்வபாவமான ஆலஸ்யத்தினால் நினைக்கிறார்கள். அப்படி நினைக்கக்கூடாதென்று தெரியவேண்டியே கர்மாவை நன்றாய் செய்யவேண்டுமென்று ஆசார்யார் சொல்கிறார். பகவான் சங்கராசார்ய ரூபமாக முதலிலேயே அவதாரம் செய்து ஞான மார்க்கத்தை பிரசாரம் செய்யக்கூடாதா? முதலில் ஸுப்ரஹ்மண்ய ஸ்வாமியை குமாரிலபட்டபாதராக அவதாரம் செய்யச்சொல்லி அவர் மூலமாக கர்மமார்க்கத்தை ஸ்தாபனம் செய்துகொண்டு பிறகுதான் தான் அவதரித்தார். அதனாலேயே கர்மம் அவசியமென்று தெரியலாமே. ஞானத்திற்கு கர்மம் பாஹ்ய அங்கம். கர்மத்தினால் ஏற்பட வேண்டிய பலனான சித்தசுத்தி ஏற்பட்டால் ஞானத்தில் அதிகாரியாவோம். வேதாந்தம் எவ்வளவு வாசித்தாலும், கர்மானுஷ்டானம் செய்து சித்தசுத்தி ஸம்பாதித்தாலொழிய அவ்வளவும் பிரயோஜனப்படாது. ஒரு வயலிலிருந்து தான்யம் அடைய வேண்டுமானால், அதில் முளைத்திருக்கும் களைகளைப்பிடுங்கி எறிய வேண்டும். அப்புறம் தான் உரம் போடவேண்டும். அப்புறம்தான் விதை விதைக்கலாம். களையெடுக்காமல் மேல் காரியங்களை எவ்வளவு பரிஷ்காரமாகச் செய்தாலும் பலன் கிடைக்காது. அதே மாதிரி, நம்மிடமிருக்கும் தோஷங்களை நிவிருத்தி செய்வதற்காக நித்திய கர்மாக்களை செய்து சித்தசுத்தி ஸம்பாதித்துக் கொள்ளவேண்டும். கர்மானுஷ்டானத்தினால் அழுக்குகள் எல்லாம் நிவிருத்தி

யானால்த்தான் ஞானம் ஏற்பட முடியும். ‘**कषाये कर्मभिः पक्वे ततो ज्ञानं प्रवर्तते**’ என்று சொல்லப்படுகிறது.

கர்மா செய்யவேண்டிய முறையை அப்புறம் மூன்றாவது கட்டளையில் ஆசார்யார் சொல்கிறார்கள். அதாவது, அப்படி கர்மா செய்வதினாலேயே ஈசுவராராதனம் செய்யவேண்டுமென்கிறார்கள். ஆராதனம் என்பதும் கர்மம் தான், வேறில்லை. பகவத்கீதையிலும் ‘**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दाति मानवः**’ என்று பகவான் சொல்லியிருக்கிறபடி ஈசுவரார்ச்சனம் என்பது ஸ்வகர்மானுஷ்டானத்தைத் தவிர வேறில்லை. ஸ்வகர்மமென்றால் தனக்கு சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மாவைத்தவிர, தான் தன்னிஷ்டப்படி நினைக்கும் அல்லது செய்து வரும் கார்யங்கள் என்று துரர்த்தம் செய்துவிடக்கூடாது.

எந்த கர்மத்தினால் ஈசுவராராதனமாகிறதென்றால் நித்தியம், நைமித்திகம் என்ற இரண்டு வகையினால் தான். ஏனென்றால், அடுத்த வாக்கியத்தில் நான்காவது கட்டளையாக "காம்யத்தில் எண்ணத்தை விட்டுவிடு" என்று ஸ்பஷ்டமாகவே ஆசார்யார் சொல்கிறார்கள். காம்ய கர்மம் செய்வது மிகக்கஷ்டம். அதினால் ஏற்படும் பலனும் அநித்தியம். அதில் நோக்கம் வைப்பது மிகவும் பிசகு. **काकमांसं शुनोच्छिष्टं स्तोकं तदपि दुर्लभम्** "காக்கையின் மாம்ஸம், நாய் சாப்பிட்ட மிச்சம், அதுவும் கொஞ்சம் தான் இருக்கிறது, அது அகப்படுவதும் சிரமம்" என்று சொல்வது போலாகும். தவிரவும், காம்ய கர்மாக்களை

எவ்விதமாக விதிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே செய்யவேண்டும். கொஞ்சமேனும் தவறக்கூடாது. அது மாத்திரம் இல்லை; தவறினால் அனர்த்தமும் உண்டு. தவிரவும் இக்காலத்தில் வேதத்தில் சொல்லியிருக்கிற விதிப்படி ஒரு காம்ய கர்மமும் சரியாய் செய்வதுமில்லை. அதனால் பலன் ஏற்படுகிறதுமில்லை. ஆனால் தான் செய்தது சரியில்லையென்று நினைக்காமல் சாஸ்திரத்தில் சொல்லியிருப்பது பிசகு என்று தீர்மானித்து விடுகிறோம். ஆகையால் இக்காலத்தில் காம்ய கர்மானுஷ்டானம் அசிரத்தைக்குத்தான் காரணமாகிறது. இப்படியிருப்பதினால் நித்திய நைமித்திக கர்மங்களை செய்வதுதான் உசிதமாகும், நித்திய கர்மத்திற்கும் நைமித்திக கர்மத்திற்கும் அதிக வித்தியாஸமில்லை. நித்ய கர்மமும் ஸூர்யோதயம் அமாவாஸ்யை முதலிய நிமித்தங்களை வைத்தே ஏற்பட்டிருப்பதால், அவைகளும் நைமித்திக கர்மங்கள் தான். ஆகையால் இந்த இரண்டுவித கர்மங்களுக்கும் லக்ஷண பேதம் சொல்லும்போது, ஒன்று நியதமான நிமித்தத்தை வைத்து ஏற்பட்டிருப்பதாயும், மற்றொன்று அநியதமான நிமித்தத்தை வைத்து ஏற்பட்டிருப்பதாயும், சொல்ல வேண்டும். கிரஹணாதிகளும் ஜ்யோதிஸ் சாஸ்திரப்படி கண்டுபிடிக்கக்கூடியதால் அவைகளும் நியதம் தான் என்று சொல்லலாமென்றாலும், ஒவ்வொரு வருஷமும் ஏற்படத்தான் வேண்டுமென்று சொல்லமுடியாததால் அநியதம் என்று எண்ணப்படுகிறது.

இவ்விதமாக நித்திய நைமித்திக கர்மாக்களை ஈசுவராராதனபுத்தியுடன் செய்யும் விஷயத்தில் நம் பாபங்கள் நிவிருத்தியாகும். அதையே "பாபங்களைப் பறக்கடிக்க வேண்டும்" என்ற அடுத்த கட்டளையில் ஆசார்யார் சொல்கிறார்கள். பாபம் போனால்த்தான் ஈசுவரனுக்கு நம்மிடம் ப்ரீதி ஏற்பட நியாயமுண்டு. அதையுத்தேசித்துத்தான் நம் கர்மாக்களில் समस्त-दुरितक्षयद्वारा श्रीपरमेश्वरप्रीत्यर्थं என்று ஸங்கல்பம் செய்கிறோம். எப்பொழுதுமே நம் யஜமானனோ மேல் உத்தியோகஸ்தனோ அவனுடைய பிரீதி ஏற்பட வேண்டுமானால், முதலில் அதுவரை நாம் செய்திருக்கும் தப்பிதங்களுக்கு மன்னிப்புக் கேட்டுக்கொள்ள வேண்டும். மன்னிப்பு கிடைத்த பிறகு தான் அவனுடைய பிரீதி ஏற்படும். நம் பாபங்கள் தீராதவரை ஈசுவரப்ரீதி ஏற்பட நியாயமில்லை.

### 4. ஞானத்தில் அதிகாரம்.

இவ்விதமாக கர்மானுஷ்டானத்தினால் ஈசுவர பிரஸாதமும், பாபம் விலகி சித்தசுத்தியும் ஏற்பட்டு விட்டால், அப்புறம் நம்முடைய மனஸ் மேலான விஷயத்தைக்கிரஹிப்பதில் சரியானபடி பிரவர்த்திக்கும். அப்பொழுதுதான் ஸம்ஸாரத்திலிருக்கும் தோஷங்கள் ஸ்பஷ்டமாகத் தெரியும். சித்தம் சுத்தமில்லாத விஷயத்தில் ஸம்ஸார துக்கம் எல்லாம் ஸுகமாகக் கூடத் தோன்றும். ஆகையால்த்தான் பாபம் விலகி சித்தசுத்தி ஏற்பட்ட பிறகு "ஸம்ஸார ஸுகத்

தில் தோஷத்தை அனுஸந்தானம் செய்" என்ற அடுத்த கட்டளையை ஆசார்யார் சொன்னார். ஆகையால் ஸம்ஸாரத்தில் வைராக்கியம் ஏற்படும் வரை சித்த சுத்தி ஏற்பட்டிருக்கிறதென்று சொல்ல முடியாது. வைராக்யம் என்பது திருஷ்ட பலனாக இருப்பதால், அதற்கு ஸாதனமான சித்தசுத்திக்காக எவ்வளவு காலம் அப்பியாஸம் செய்யவேண்டுமென்று கேட்கக் கூடாது. உமியைப் போக்கி அரிசி எடுக்க வேண்டுமென்று பிரயத்தினம் செய்கிறவன் உலக்கையால் எத்தனை குத்துக்குத்த வேண்டுமென்று கேட்டால் போலாகும். உமி போகிற வரையில் குத்த வேண்டியது தான் என்பதைத்தவிர வேறு பதில் கிடையாது. அதேபோல, பிரஹ்மலோக பரியந்தமுள்ள ஸகல பதார்த்தங்களிலும் விரக்தி யேற்படும் வரை சித்த சுத்திக்கு யத்தினம் செய்ய வேண்டியதுதான். மனஸ் மிகவும் பரிசுத்தமாயிருக்கும் விஷயத்தில் உபதேசம் செய்தவுடன் ஆத்மஞானம் உண்டாகும்.

परिपक्वमतेः सकृच्छ्रुतं जनयेदात्मधियं श्रुतेर्वचः ।

ஸுரேசுவராசார்யருக்கு கர்மானுஷ்டானத்தினால் சித்ததோஷங்களெல்லாம் போயிருந்தபடியால், தன் யுக்திக்குச் சரியானபடியும் வேதார்த்தத்தை யனுஸரித்தும் ஆசார்யாருடைய பிரவசனம் இருந்தபடியால், ஓரே தடவை உபதேசத்தால் தீவ்ரவைராக்யம் அடைந்து ஞானமார்க்கத்தில் பிரவேசித்தார். கர்ம மார்க்கத்தில் சிரேஷ்டரான ஜனக மஹாராஜாவும்

ஸித்த கீதா சிரவணத்தினால் உடனே ஞானம் அடைந்ததாகவும் சொல்லப்படுகிறது.

சித்த சுத்தி ஏற்பட்டால் வைராக்யம் ஏற்படுவானேன் என்றால், விஷயங்களின் வாஸ்தவ ஸ்வரூபத்தை கிரஹிக்கும்படியான யோக்கியதை மனஸுக்கு வரும்போது, அதில் ஆரோபிதமாயிருக்கிற "இது நல்லது" என்ற எண்ணம் நிவிருத்தியாய்விடும். அவ் விஷயத்தில் உள்ள தோஷங்களும் தெரியவருமாதலால் "இது வேண்டும்" என்ற எண்ணமும் போய்விடும்.

रत्ने यदि शिलाबुद्धिर्जायेत वा भयं ततः ।
समीचीनत्वधीर्नैते नोपादेयत्वधीरपि ॥

என்று ஆசார்யாள் சொல்கிறார்கள். ரத்னம் என்று நினைத்துக் கொண்டிருக்கையில் வெறும் கல் தான் என்று தோன்றினாலும், அதுவிஷயமாய் பயம் ஏதேனும் ஏற்பட்டாலும், "இது நல்லது" என்ற புத்தி போய், "இது வேண்டும்" என்கிற புத்தியும் போய் விடும். நமக்கு நாக்குக்கு ருசியாயிருந்தாலும், அதை சாப்பிடும் விஷயத்தில் தலைவலி வயிற்றுவலி வரும் என்று தெரிந்தால், அந்த ஆகாரத்தை நாம் சாப்பிடுகிறதில்லை. பார்ப்பதற்கு நல்லது போல் தோன்றி விசாரணையில் கெடுதலான பதார்த்தங்கள் உண்டோ என்றால், விஷயங்கள் எல்லாமே அப்படித்தான். ஜானகீபரிணய நாடகத்தில் ஸ்ரீராமரைப் பார்த்து மாரீசன்

रघुनन्दन एष सुन्दरः करपद्मार्पितबाणकार्मुकः ।
अहिडिम्भ इवोद्वमन्विषं स्पृहणीयश्च भयंकरश्च मे ॥

என்று சொல்லுவது போல், விஷயங்கள் மனோஹரமாகத் தோன்றின போதிலும் அவைகள் பயஜனகங்கள் என்றே பாவிக்கவேண்டும்.

இவ்விதமாக ஸம்ஸாரத்தில் பய திருஷ்டியினாலோ ஸ்வரூப பரிக்ஞானத்தினாலோ, தோஷானுஸந்தானம் ஏற்பட்டால், தோஷமின்றி நித்திய நிரதிசயமான ஸுகத்திற்காக ஆத்ம விஷயமாக மனஸ் நோக்கும். அப்பொழுது தான் "ஆத்ம விஷயமான இச்சையை உறுதிப்படுத்து" என்ற ஆசார்யாளின் அடுத்த கட்டளைக்கு இடம் ஏற்படும். ஆத்மா நம்முடைய ஸ்வரூபமாகவே இருப்பதாலும், நித்தியம் அடையப்பட்டதாகவே இருப்பதாலும், ஆத்ம விஷயமாக பிரவிருத்தி எதற்கு என்று கேட்கலாம். "கண்ட சாமீகர ந்யாயம்" என்று ஸமாதானம் சொல்லுவார்கள். அதாவது, கழுத்தில் அணிந்திருந்த தங்கச் சங்கிலியைக் காணவில்லை யென்று தேடும்பொழுது, கழுத்திலேயே இருப்பதாக ஒரு ஆப்தனுடைய வாக்கியத்தைக்கேட்டு புதிதாகக் கிடைத்தது போல் ஸந்தோஷப்படுகிறதில்லையா? அதே மாதிரி, நித்திய பிராப்தமாயிருந்தாலும் அவித்யா பலத்தினால் பிராப்தமில்லை யென்று நாம் தத்காலம் நினைத்துக் கொண்டிருப்பதினால், அந்த அக்ஞானத்தின் நாசத்திற்காகப் பிரயத்தினம் அவசியம் செய்யவேண்டி யிருக்கிறது.

அக்ஞான கார்யமான ஸம்ஸார ஸுக துக்கங்களின் மத்தியில் இருந்துகொண்டிருக்கிற வரையில் ஆத்ம ஞானத்தை ஸம்பாதிப்பது ஸாத்தியமில்லை யென்றிருப்பதால் "தன் வீட்டை விட்டு உடனே வெளிக்கிளம்பு" என்ற கட்டளையுடன் ஆசார்யாள் இந்த சுலோகத்தை முடித்தார்கள்.

இவ்விதமாக மிகக் கருணையுடன் நமக்கு உபதேசித்திருக்கும் ஆசார்யாள் விஷயத்தில் நாம் குரு பக்தி செய்வதென்றால் அவர்கள் சொல்லிய கட்டளைகளை நிறைவேற்றுவதைத் தவிர வேறில்லை யென்று முன்னமே சொன்னோம். அவர்கள் நமக்கு செய்திருக்கும் உபகாரத்திற்கு நாம் பிரத்யுபகாரம் செய்வது ஸாத்தியமில்லை. அவர்களிடம் பக்தி செய்து நாம் அவர்களுக்கு ஏதோ ஸாதித்துக் கொடுக்கப் போகிறோமென்பது கிடையாது. அவர்கள் சொல்வதும் நம்முடைய சிரேயஸ்ஸைக் கருதித்தான். அவர்களுக்கு எவ்விதப் பிரயோஜனமுமில்லை. ஆகையால் அவர்களுடைய ஆக்ஞாப் பிரகாரம் நமக்கு ஏற்பட்டிருக்கிற ஸ்வகர்மங்களை அனுஷ்டானம் செய்து வருவதினால் குருவை ஸந்தோஷப்படுத்தி அவர்களுடைய பிரஸாதத்தால் மேல்மேலும் சிரேயஸ்ஸை அடைந்து கடைசியில் நிரதிசயானந்த ரூபமான மோக்ஷத்தையும் நாம் அடையலாம்.



# அத்யாயம் 2.

# ஆஸ்திக்யம்

## 1. குரு அபசாரம் கூடாது.

ஒரு மனிதன் ஸாமான்யமாக நமக்குச் செய்த உபகாரத்தைக் கூட நாம் மறக்கக் கூடாது. உப காரத்தை மறத்தல் மஹாதோஷம். कृतघ्ने नास्ति निष्कृतिः செய் நன்றி மறந்தவர்களுக்கு எவ்வித பரிஹாரமும் இடையாது என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. அப் படியிருக்க, ஸகல தர்ம விஷயங்களையும் நமக்கு போதித்து மோக்ஷஸாதனமான ஞானத்தை உபதேசம் செய்கிற குருவை நாம் மறந்தால் என்ன சொல்கிறது? அதற்கு நிகரான பெரிய தோஷம் வேறு எதுவுமில்லை என்று நிச்சயமாய் சொல்லலாம். அவ்வித தோஷம் ஜனங்களுக்கு ஏற்படாமலிருக்கக் கருதியே ஸ்ரீமத் ஆசார்யபாதர்கள் காலடியை புனருத்தாரணம் செய்து ஸ்ரீமத் பகவத்பாத மூர்த்தியைப் பிரதிஷ்டை செய் தார்கள். பகவானே மிகக் கருணையுடன் ஆசார்ய ரூபமாக நேரில் வந்து நமக்கு தர்ம விஷயமான அறிவைப் புகட்டி யிருக்கும்போது நாம் அவரை மறக் கலாமா? குரு இல்லாவிட்டால் வேதத்தின் தாத் பர்யமே நமக்கு விளங்காது. சாஸ்திரத்தில் ஒரு இடத் தில் "ஒரு பிராணியையும் ஹிம்ஸிக்கக்கூடாது" என் றும், மற்றோரிடத்தில் "பிராஹ்மணனைக் கொல்லக் கூடாது" என்றும், வேறோரிடத்தில் "ஆத்திரேய

கோத்திரத்தில் பிறந்தவனைக் கொல்லக்கூடாது" என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. இதுபோல் சாஸ்திரங்களில் சொல்லப்படும் விதி விலக்குகளின் விசேஷக் கருத்துகளை ஆசார்யரல்லவா நமக்கு விளக்கிக் காட்டுகிறார்? இம்மூன்றுவித விலக்கு வாக்கியங்களின் கருத்தென்ன? முதலில் ஸகலப்பிராணிகளுடைய ஹிம்ஸையையும் நீக்க வேண்டும், பிறகு பிராஹ்மண ஹிம்ஸையை விசேஷமாக நீக்க வேண்டும், அதிலும் ஆத்ரேய கோத்திரத்தவனை ஹிம்ஸிப்பது கொடிய தோஷம் என்று தாத்பர்யம்.

குருவினிடம் நன்றி பாராட்டாமலிருப்பதுடன் நிற்காமல் அவர்களுக்கு துக்கத்தையும் உண்டுபண்ணினால் எவ்வளவு தோஷமாகும். பூர்வாசார்யாரவர்களை நேரில் தரிசித்த அநேகர்களுக்கு ஞாபகமிருக்கலாம்; அவர்களின் முகத்தில் எப்பொழுதும் ஆனந்தம் விளங்கும். இப்பொழுதும் படத்தின் மூலமாக இவ்விசேஷத்தை நன்கு அனுபவிக்கலாம். அவர்களுக்கு துக்கம் என்பதே தெரியாது. அவர்களின் முகத்தில் ஏதேனும் துக்கக் குறி தோன்றுமானால், அது பிரபஞ்சத்திலுள்ள ஜனங்களின் நிலைமையைக் குறித்து அவர்கள் வருந்துவதையே குறிக்கும். அம்பிகையைப் பார்த்து அவர்கள் ஸ்தோத்திரம் செய்யும்போது "ஹே அம்பிகே, என்னை ஸுகமாக இருக்கச் செய்ய மாட்டாயா? துக்க ஸாகரத்தில் மூழ்கிக் கிடக்கிறேனே?" என்றார்கள். என்ன துக்கம் என்று கேட்டால், "பிராஹ்மணர் முதற்கொண்டு நாஸ்திக்ய

புத்தியினால் கெடுக்கப்பட்ட மனதுடன் இருக்கிறார்களே? பிராஹ்மணர் முதற்கொண்டு அநேகமாய் அவரவர்களுக்கு ஏற்பட்ட கர்மாக்களை விட்டுவிட்டிருக்கிறார்களே? பிராஹ்மணர் முதற்கொண்டு சிகையைக் கத்தரித்துக்கொண்டிருக்கிறார்களே? இவர்களை இவ்விதம் பார்ப்பதினாலேயேதான் துக்கம்" என்று சொல்லியிருக்கிறார்கள்.

नास्तिक्यबुद्धिहतमानसवारिजातान्
त्यक्तात्मकर्मनिचयान् बहुशो द्विजाद्यान् ।
कृत्तोत्तमाङ्गजततीन् विनिरीक्ष्य दुःख-
वार्धौ निमग्नमिममम्ब सुखे नियुङ्क्ष्व ॥

இதர பாஷையை அப்யஸித்ததினாலோ வேறு எந்தக் காரணத்தினாலோ தங்கள் தர்மங்களையும் தங்கள் ஆசாரங்களையும் தங்கள் நடை உடை பாவனைகளையும் தங்கள் வேஷத்தையும்கூட மாற்றிக்கொண்டிருக்கும் ஜனங்களைப் பார்க்க யாருக்குத்தான் துக்கம் மேலிடாது? மிகவும் கருணாமூர்த்தியான குருநாதருக்கு துக்கம் ஏற்படுவதில் என்ன ஆச்சர்யம்? அவர்களுக்கு துக்கம் ஏற்படும்படி நாம் நடந்துகொண்டால், அதுவே குருத்ரோஹமாகிய மஹா பாபம் ஆகாதா? ஸ்வதர்மத்தை விட்டவர் யாவரும், தன் தன் கர்மானுஷ்டானங்களை விட்டவர் யாவரும், அந்த குருத்ரோஹத்திற்கு பாத்தியப் பட்டவர்களாகிறார்கள். அவர்களுக்கு இந்த துக்கத்தை நீக்கி அவர்களின் மனது ஸந்தோஷமாக விளங்கச் செய்யவேண்

டியது நம் கடமையல்லவா? அவர்களுக்காக நாம் செய்யவேண்டிய கார்யம் ஒன்றுமில்லை. நாம் நம் முடைய ஸந்த்யாவந்தனாதி கர்மாக்களை ஒழுங்காக அனுஷ்டானம் செய்வதே அவர்களுக்கு ஸந்தோஷத்தைக் கொடுக்கும். அதுதான் அவர்களின் திருப்திக்கு ஹேது. அவர்கள் க்ருத க்ருத்யர்கள். அவர்களுக்கு சொந்தமாக ஆகவேண்டிய கார்யம் ஒன்றும் கிடையாது. பிரபஞ்சத்தின் ஸ்திதியை நினைத்து நினைத்து அது கெட்டுப் போகிறதே என்ற எண்ணத்துடன், ஜனங்கள் எப்படியாவது ஸுகமாக இருக்க வேண்டுமென்றே பகவானிடம் பிரார்த்தித்து வந்தார்கள். "ஈசுவரன் ஒருவன் உண்டு, கர்மத்தை யனுஸரித்து விசித்திரமாக ஜன்மாந்தரம் உண்டு, புண்ணியசாலிகளுக்கு ஸுகத்தைக் கொடுக்கக் கூடியதும் பாபிகளுக்கு துக்கத்தைக் கொடுக்கக் கூடியதுமான லோகாந்தரம் உண்டு, என்ற புத்தியை ஜனங்களுக்குக் கொடுக்க வேண்டுமென்றே அடிக்கடிப் பிரார்த்தித்து வந்திருக்கிறார்கள்.

ईशोऽस्ति जन्म विचित्रतरं हि जन्तोः

लोकान्तरं च निजकर्मकृतां सुखापम् ।

पापानि पापफलदाश्च तथैव लोकाः

इत्यम्ब लोकततये वितराशु बुद्धिम् ॥

ஜாதி குலாசாரங்களை யிழந்து, விபரீத ஆசாரங்களையும் நடையுடை பாவனைகளையும் கைப்பற்றி ஜீவிக்

கின்ற இந்த ஜனங்களுக்கு ஆஸ்திக்ய புத்தியுண்டாக வேண்டும் என்பதே நமது குருமூர்த்தியின் ஆவல்.

## 2. அதர்மமே துக்ககாரணம்

எல்லா இடங்களிலும் ஜனங்கள் கஷ்டப்படுகிறார்கள். நம்முடைய பூர்வாசாரம் கெட்டதினால்த்தான் இவ்வித கஷ்ட நிலை நீடிக்கிறது. தர்மாசாரம் லோபிக்க ஆரம்பித்தது, கஷ்டமேற்படவும் ஆரம்பித்தது. தர்மத்தில்த்தான் ஸகல லோகங்களும் நிலை பெற்று நிற்கின்றன. தர்மம் இன்னது, அதர்மம் இன்னது, என்பதைத் தெரிவிப்பது வேதம். இதை ஒரு கவி ஒரு சுலோகத்தில் நன்கு விளக்கிக் காட்டியிருக்கிறார்.

उच्चैर्गतिर्जगति सिध्यति धर्मतश्चेत्
तस्य प्रमा च वचनैः कृतकेतरैश्चेत् ।
तेषां प्रकाशनदशा च महीसुरैश்चेत्
तानन्तरेण निपतेत् क नु मत्प्रणामः ॥

"உலகத்தில் மேன்மையடைவது தர்மத்தினால்த்தான் என்பது வாஸ்தவமாயிருந்தால், அந்த தர்ம ஸ்வரூபம் தெரிவதற்கு அநாதியான வேதமே பிரமாணமாயிருக்குமானால், அவ்விரண்டையும் பிரகாசிப்பிக்கிறது பிராஹ்மணர்களை சேர்ந்ததானால், எனது நமஸ்காரம் அவர்களைத் தவிர்த்து வேறு எங்கே உசிதமாகும்"

ஆதலால், பிராஹ்மணர்களால் வேதம், வேதத்தினால் தர்மம், தர்மத்தினால் மேன்மை என்றிருக்க,

இப்பொழுது இவைகளுக்கு விபரீதமாக, அதாவது பிராம்மணர்களுக்கு இழிவு, வேதத்திற்கு இழிவு, தர்மத்திற்கு இழிவு, என்று ஏற்பட்டிருப்பதால் பலனும் விபரீதமாகவே இருக்கிறது. நடந்துகொள்வது அபத்தியமாக, ஆனால் ஆரோக்கியம் மாத்திரம் வேண்டும், என்றால் எப்படிக் கிடைக்கும்?

पुण्यस्य फलमिच्छन्ति पुण्यं नेच्छन्ति मानवाः
न पापफलमिच्छन्ति पापं कुर्वन्ति यत्नतः ॥

புண்ணியத்தின் பலனாகிய ஸுகத்தை எல்லா மனுஷ்யர்களும் அபேக்ஷிக்கிறார்கள், ஆனால் அதற்கு ஸாதனமான புண்யத்தைக் கருதுகிறதில்லை. யாரும் பாபத்தின் பலனாகிய துக்கத்தை இச்சிப்பது கிடையாது, ஆனால் துக்கத்தைக் கொடுக்கக்கூடிய பாபத்தை மாத்திரம் யத்னத்துடன் செய்கிறார்கள். ஸுகத்தை விரும்புகிறார்களே தவிர, அதற்கு வேண்டிய புத்தி மட்டும் விபரீதமாகவே யிருக்கிறது. அதர்மம் மேலிட்டு விட்டதால், ஜனங்களுக்கு துன்பமும் மிகுதியாகிவிட்டது. ஸாதனம் விபரீதமாயிருப்பதால், பலனும் விபரீதமாயிருக்கின்றது. ஸாதனத்தை சரிப்படுத்திக் கொண்டால், பலனும் சரியாகும்.

ஸாமான்யமாக எல்லாவிடங்களிலும் தர்ம லோபம் ஏற்பட்டு ஜனங்கள் யாவரும் கஷ்டப்படுகிற இக்காலத்தில் ஏன் பகவான் அவதாரம் செய்யவில்லை?

यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।

अभ्युत्थानमधर्मस्य तदाऽऽत्मानं सृजाम्यहम् ॥

எந்த எந்த காலங்களில் தர்மத்திற்கு வாட்டமும், அதர்மத்திற்கு செழிப்பும் ஏற்படுமோ அப்பொழுது நான் அவதரிக்கிறேன், என்று பகவான் சொல்லவில்லையா?

परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।
धर्मसंस्थापनार्थाय संभवामि युगे युगे ॥

நல்லோர்களை பாதுகாக்கவும் தீயோர்களை சிக்ஷிக்கவும் தர்மத்தை நிலை நிறுத்தவும் நான் அவதரிக்கிறேன், என்று சொன்ன பிரதிக்ஞைப்படி இப்பொழுதுள்ள தர்மக் குறைவையும் அதர்ம எழுச்சியையும் பார்த்து, ஸாதுக்களை ரக்ஷிக்கவும் துஷ்டர்களைக் கண்டிக்கவும் பகவான் அவதரிக்க வேண்டாமா? ஸாமான்ய மனிதன்கூட தான் செய்த பிரதிக்ஞையை நிறைவேற்றுகிறானே? அப்படியிருக்க, பகவான் தன் பிரதிக்ஞையை பரிபாலிக்க அவதாரம் செய்ய வேண்டாமா? என்று சிலர் நினைக்கக் கூடும். இங்கு ஒரு விஷயத்தை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். எந்த ஸமயத்தில் மனிதர்களே சீர்திருந்தி நடந்துகொள்ள முடியுமோ, அந்த ஸமயத்தில் பகவான் வருவதில்லை. இப்பொழுது நாம் படுகின்ற துன்பங்களுக்கெல்லாம் காரணம் நம்மிடமுள்ள தர்மாசார லோபம்தான் என்பதை நாமே வெகு ஸுலபமாகத் தெரிந்துகொண்டு சீர்திருத்திக் கொண்டுவிடலாம்.

ஆசாரம் கெட்டதற்குக் காரணம் முக்கியமாக அன்னியர்களின் ஸஹவாஸமே. காலமும் காரணமாகும். இதுதான் கலியின் ஸ்வபாவமாயிற்றே, நம்மால் என்ன செய்ய முடியும், எல்லாம் கெட்டுத் தானே தீரும், என்று சொல்லிக்கொண்டிருக்கக் கூடாது. கெட்ட ஸஹவாஸத்தினால் கொஞ்சம் கெட்டது; காலத்தினாலும் கொஞ்சம் கெட்டது. இந்த இரண்டு காரணங்களையும் நன்கு தெரிந்துகொண்டால் "நாம் பிரயத்தினம் செய்யவில்லை, அதனால்த்தான் தர்மம் கெட்டுப்போயிற்று" என்பது விளங்கும். நாம் தர்மத்தை விடாமல் அனுஷ்டிப்பதற்குப் பிரயத்தினம் செய்திருந்தும்கூட, நாம் கெட்டுவிட்டால், "காலம் அனுகூலமில்லாமலிருந்து கெடுத்தது" என்று காலத்தின்பேரில் தோஷம் சொல்லலாம். இரண்டு மாணாக்கர்களில் இருவரும் நன்றாகப் படித்திருந்து, அதில் ஒருவன் மட்டும் பரீக்ஷையில் தேறினால், மற்றவனுக்கு அதிருஷ்டக் குறைவு என்று சொல்லலாம். மற்றவன் என்றைக்குமே அக்கறையுடன் படியாத சோம்பேறியாக இருந்தால், அதிருஷ்டத்தின்மேல் அபவாதம் சொல்ல நியாயம் உண்டா? தோல்விக்குக் காரணம் பிரத்தியக்ஷமாகத் தெரியும்போது, அதிருஷ்டத்தைக் குறை சொல்லுவானேன்? அதேமாதிரி, நாம் தர்மானுஷ்டான விஷயத்தில் கொஞ்சமேனும் பிரயத்தினமே செய்யாமல், காலத்தின்பேரில் குற்றம் சொல்வது எப்படி நியாயமாகும்.

## 3. தர்மமே ஸுக காரணம்

ஸந்த்யாவந்தனம் ஔபாஸனம் முதலிய கர்மாக்களை சிறிதேனும் அனுஷ்டிப்பதில்லை, கீதை முதலிய வைகளை பாராயணம் செய்வதில்லை. காரணம் ஸாவகாசம் கிடைக்கிறதில்லையாம். தினசரிப் பத்திரிகை வாசிப்பதற்கோ வீண் வம்பு பேசுவதற்கோ ஸாவகாசம் தாராளமாக இருக்கிறது. சிரேயஸ் பெறுவதற்கு ஸாவகாசமில்லை யென்றால், அதில் புத்தி செல்லவில்லை, அதில் சிரத்தையில்லை, என்று தான் அர்த்தம். கிடைத்த ஸமயத்தில் புண்ணியத்தை ஸம்பாதித்துக் கொள்ள வேண்டும். ஸமயத்தை வீணுக்கக்கூடாது. இந்த ஜன்மாவினின்றும் மேன்மை பெற முயற்சிக்க வேண்டும். ராஜாங்கத்தில் உத்தியோகம் கிடைத்தால் மேல்மேலும் அதை விருத்தி செய்து கொள்ளவும் அதற்கு மேலுள்ள அதிகார பதவியைப் பெறவும் முயற்சி செய்கிருர்களல்லவா? அது போலவே, பகவான் நமக்கு மேலான மனுஷ்ய ஜன்மா என்கிற பதவியைக் கொடுத்திருக்கிருர். அதைக் காப்பாற்றிக் கொள்ளவும் மேல்மேல் பதவி பெறுவதற்கும் நாம் முயற்சி செய்ய வேண்டாமா? க்ஷத்திரியனுக்கு ராஜ்யத்தினுலும், வைசியனுக்குப் பணத்தினுலும் அந்தஸ்து. பிராஹ்மணனுக்கு மனஸ்சாந்தி என்கிற மேலான சம்பளம். இதைப் பார்க்கிலும் வேறு எவருக்கு ஜாஸ்தி சம்பளமுண்டு? மனதின் உபசாந்தியே மோக்ஷஸாம்ராஜ்ய ஸுகமாகும். இது போதாதா? ஸந்தோஷ மில்லாத பிராஹ்மணன் கெட்டான்,

अनन्तसुखा द्विजा नहः என்று சாஸ்திரம் சொல்லுகிறது. இந்த ஸுகம் யாருக்குமில்லை. இந்த ஸுகத்தைக் கெடுத்துக்கொண்டு துச்சமான விஷய ஸுகத்தில் ஈடு படுவது நியாயமாகுமா? "பிராஹ்மணனுடைய சரீரமே விஷய ஸுகத்திற்காக ஏற்பட்டதில்லை, இந்த லோகத்தில் மஹத்தான க்லேசத்தை யனுபவித்து ஸத்கர்மானுஷ்டானம் செய்யவும் பரலோகத்தில் அனந்தமான ஸுகத்தை அனுபவிப்பதற்காகவுமே ஏற்பட்டது.

ब्राह्मणस्य तु देहोऽयं नोपभोगाय कल्पते ।

इह क्लेशाय महते प्रेत्यानन्तसुखाय च ॥

என்று பெரியோர்கள் சொல்கிறார்கள். சாஸ்திரத்தில் சொல்லியபடி கர்மாக்களை அனுஷ்டானம் செய்து சரீரத்தை க்லேசப்படுத்த வேண்டியதே பிராஹ்மணனுடைய கடமையாகும். சர்க்கரை வேண்டுமென்று ஆசைப்படுகிற ஜனங்கள் கரும்புத் துண்டங்களை வைத்து பூஜை செய்கிறது கிடையாது. அவைகளை தாக்ஷிண்யமன்னியில் தடிகளால் அடித்துக் கசக்கி சார் பிழிகிறார்கள். அப்பொழுதுதான் ரஸம் ஏற்பட்டு அதிலிருந்து சர்க்கரை கிடைக்கிறது. அதுபோல, பிராஹ்மணன் தன் சரீரத்தை ஸத்கர்மானுஷ்டானங்களினால் க்லேசப்படுத்த வேண்டியதுதான். கரும்புத் துண்டுகளுக்குத் தடியடி கொடுத்தால்தான் தித்திப்பான சர்க்கரையைத் தின்று ஸுகம் பெறமுடியும். நித்திய ஸுகம் வேண்டுமானால், தபஸ்ஸினால் சரீரக்

லேசம் செய்யவேண்டியதுதான். கரும்புத் துண்டம் நோவுமோ எனக் கருதி அடியாதிருந்துவிட்டால், சர்க்கரை வராது. பிராசீனமான தர்மானுஷ்டானமே நமக்கு ஸுகம் பெறுவதற்கு சரியான வழி. அதை விடாமல் அனுஷ்டிக்க வேண்டும். சரீராபிமானத்தினு லோ வேறு காரணத்தினுலோ அவ்வழியிலிருந்து தவறி ேுமேயானுல் ஸுகம் அகப்படாது.

## 4. ஆஸ்திகர் கடமை

"ஸுகம் அடையும் வழி இதுதான்" என்று மேல்நாட்டார் சொன்ன வழிகளையெல்லாம் இதுவரை பல வருஷங்களாக நாம் பார்த்தாய்விட்டது. பிரயோஜனத்தைக் காணும். இனி, நம் முன்னேர்கள் சொன்ன முறையில் கொஞ்சம் புத்தியைச் செலுத்திப் பாருங்கள். இந்த முறைக்கும் ஒரு ஐம்பது வருஷ காலம் கொடுத்து அக்கரையுடன் பாருங்கள். மேல் நாட்டு முறையே ஸுக ஸாதனம் என்று பார்த்தது போல, நமது சாஸ்திர ரீதியாக துக்க நிவிருத்திக்கு சொல்லப்பட்டிருக்கும் உபாயங்களைக் கைப்பற்றிப் பாருங்கள். சும்மா இருந்துகொண்டு, மேன்மை பெற உபாயமென்ன வென்று பேசுவது வீண். நம் முன் ேர்கள் பிராசீன மார்க்கத்தில் வாழ்ந்தார்கள், ஸுகம்பெறுவதற்கான ஸாதனம் அவர்களிடம் இருந் தது. நாம் இத்தனை நாளாக மேல் நாட்டு முறையில் படித்தும் நடந்தும், ஸுகம்பெறுவதற்கான ஸாத னத்தை யடையவில்லை. நம் முன்னேரிடம் இப்

பொழுது நம்மிடமிருப்பதைப் பார்க்கிலும் வேறு ஸாமக்ரீ இருந்தது அதுதான் தர்மம். பத்து வருஷங்களாவது தர்மத்தை விடாது அனுஷ்டித்துப் பாருங்கள். இப்போது எல்லாரும் படுகின்ற துன்பம் நீங்கும். நமக்கு ஸுக ஸாதனம் இன்னதென்று தோன்றாமையே கஷ்டம் நீங்காததின் காரணம். சாஸ்திரத்தில் குயுக்தி வேண்டாம். நமது புத்தி முதலிய கரணங்களுக்கு எட்டாத விஷயங்களின் உண்மை தெரிந்துகொள்வதற்காக அல்லவா வேத சாஸ்திரங்களிடம் செல்லுகின்றோம்? அவைகளில் எந்த தீர்மானம் சொல்லப்பட்டிருக்கிறதோ அதுவே நமக்கு சரணம்.

நமது பையன்களுக்கு ராஜகீய வித்யையான ஆங்கிலப்படிப்பு வேண்டாமென்று சொல்லவில்லை. ஆங்கிலேயர்களிடம் ராஜ்ய நிர்வாஹம் இருக்கும் வரை அது அவசியமாகவும் இருக்கலாம் என்றாலும், நமது சாஸ்திர விரோதமாக, நம் பையன்கள் நடந்துகொள்ளாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும். கண்டவிடங்களில் தின்னாமல், ஆசாரத்தோடு ஆஹார விஷயங்களில் சுசியாயிருக்கும்படி ஸௌகர்யம் செய்து கொடுக்க வேண்டும். ஆசாரம் கெடக்கூடாது. தவிரவும், லோகத்தில் தவறான ஆசாரங்களைத் திருத்திக்கொண்டு வருவதற்கு சிலராவது நல்ல ஆசார சீலர்களாக இருக்க வேண்டியது அவசியம். அவர்களைப் பார்த்து மற்றவர்கள் திருந்துவார்கள். எல்லோரும் கெட்டு விட்டால் தர்மாசாரவிதைக்கு ஆள் கிடையாமல் போய் விடும். தர்மா

சாரத்திற்குக் கட்டுப்படாதவர்கள் பிரிந்து போனாலும் ஆசாரத்தை விடாமல் சிலராவது கட்டுப்பாடாக இருக்க வேண்டும். அப்பொழுது மற்றவர்களும் திருந்துவார்கள். சாஸ்திர ஆசாரங்களுக்குக் கட்டுப் படாதவர்களை விட்டுவிட வேண்டியதுதான். ஸ்ரீமானு யிருந்தாலும் சரி, யாராயிருந்தாலும் சரி. உறவு போகுமே என்று கொஞ்சமேனும் கவலைப்படக் கூடாது. அநாசாரமுள்ளவர்களின் ஸஹவாஸமே கூடாது. தர்மத்திற்குப் பிரதிகூலமாக யார் நடந்தா லும் தாக்ஷிண்யமன்னியில் அவர்களை தியாகம் செய்ய வேண்டியதுதான். தர்ம விரோதமாய் ஊரில் உள்ள குழந்தைகளை யெல்லாம் ஸரயூநதியில் எடுத்தெறிந்த ஜ்யேஷ்ட புத்திரனான அஸமஞ்ஜனை ஸகரமஹாராஜா ராஜ்யத்தை விட்டே விரட்டி விடவில்லையா? அது போல், தர்ம விரோதமாக நடப்போர் யாராயிருந்தா லும் நாமும் விலக்க வேண்டியதே. அவ்விதம் செய்யா விடில் நமக்கும் ஆபத்துதான்.

## 5. ஸ்திரீ தர்மம்

முன் காலத்தில் புருஷர்கள் எங்கிருந்தாலும், ஸ்திரீகள் வீட்டிலிருந்துகொண்டு ஜாதி தர்மத்தையும் குலாசாரத்தையும் விடாமல் அனுஷ்டித்து வந்தார் கள். வெகுவாக அவர்களாலேயே ஜாதியாசாரங்கள், குல தர்மங்கள் நன்கு பரிபாலிக்கப்பட்டு வந்தன. தர்மம் அவர்களிடம் நிலைபெற்று விளங்கியது. இப் பொழுது ஸ்திரீகளுக்கும் புதுப் படிப்பு ஏற்பட்டது.

வெளியில் புறப்பட்டு விட்டார்கள். உத்தியோகத்திற்கு புருஷர்களுடன் போட்டி போடுகிறார்கள். இதனால் ஸ்திரீகளிடத்தில் குடும்ப தர்மாசாரம் இல்லாமல் கெடுகிறது. இந்தப் படிப்பு வேண்டவே வேண்டாம். இந்தப் பெண் படிப்பு முறையை உங்களால் எவ்வளவு தூரம் நிறுத்த முடியுமோ, அவ்வளவு தூரம் நிறுத்தப் பாடுபடுங்கள்.

"பெண்டுகளை இளம் பருவத்தில் தகப்பனாரும், யௌவன பருவத்தில் பர்த்தாவும், முதிர்ந்த வயதில் புத்திரனும், ரக்ஷிக்கிறார்கள். அவர்களுக்கு ஸ்வாதந்திரியம் உசிதமில்லை"

पिता रक्षति कौमारे भर्ता रक्षति यौवने ।
पुत्रो रक्षति वार्धक्ये न स्त्री स्वातन्त्र्यमर्हति ॥

என்று சொல்வதினாலேயே அவர்கள் தங்கள் ஜீவனத்திற்காகவோ வேறு எதற்காகவோ ஸ்வதந்தரமாக வெளியேறும்படி அவகாசம் கொடுக்கக் கூடாதென்று சாஸ்திரம் சொல்கிறது. இது அவர்களுடைய ரக்ஷையை உத்தேசித்தே ஏற்பட்டது. அவர்களை எப்பொழுதும் கைவிடக்கூடாது என்பதே சாஸ்திரத்தின் கருத்து. அவர்கள் எக்காலத்திலும் வீட்டிலிருந்து வெளியேறுவதற்கு கொஞ்சமேனும் அவசியமன்னியில் வீட்டில் இருந்துகொண்டே தங்களுடைய தர்மானுஷ்டானங்களைச் செய்துகொண்டு ஜாதி குலாசாரங்களை பரிபாலித்து வரவேண்டும் என்கிற கருத்தைத் தவிர வேறில்லை. இதற்கு விரோதமான பழக்

கத்தை ஏற்படுத்திக் கொடுத்தால் அவர்களும் கெடுவார்கள், குலமும் கெடும், ஜாதியும் கெடும். ஆகையால் ஸ்திரீகளின் ஆசாரம் கெடாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது மிகவும் அவசியமாகிறது.

## 6. தர்மமே துணையாகும்

அந்திய காலத்தில் நம் கூடவருவது எது? பணம் முதலியவைகள் வீட்டிலேயே தங்கிவிடுகின்றன. ஸ்நேஹிதர்களும் பந்துக்களும் மயானம் மட்டும் வந்து திரும்பி விடுகிறார்கள். அதற்கப்பாலோ? இவன் செய்த புண்ணிய பாபங்கள் மாத்திரம் இவனைப் பற்றிக்கொண்டு பின் தொடருகின்றன.

अर्था गृहे निवर्तन्ते श्मशाने मित्रबान्धवाः ।
सुकृतं दुष्कृतं चैव गच्छन्तमनुगच्छति ॥

ஆதலால் புண்ணிய பாபங்களையறிந்து புண்ணியத்தை செய்யவேண்டும், பாபத்தை விலக்க வேண்டும். நாம் நல்லதையே செய்துகொண்டிருந்தால் நாம் நன்மையடைகிறோமென்பது மாத்திரமல்ல, நம்மைப் பின்பற்றி சிலரேனும் நன்மை பெறுவார்கள். கெட்டவர்களும் கால அளவில் நன்மையான வழிக்குத் திரும்புவார்கள். ஜனங்களுக்கு உலக ஸுகங்களைப்பற்றியும் ஸுக ஸாதனங்களைப்பற்றியும் உபதேசிப்பதற்கு இதர தேசத்தார் பலர் இருக்கிறார்கள். நம் தேசத்திலும் அநேகர் இருக்கிறார்கள். அவ்வுபதேசங்களெல்லாம் ஆசையைப் பெருக்கி மனதுக்கு

கலக்கத்தை யுண்டுபண்ணுவதற்குத்தான் பிரயோஜனம். ஆசையைப் பெருக்கிக்கொண்டு போனால், உலகத்திலுள்ள சாமான்கள் முழுதும் கிடைத்தாலும் போதாது, மேன்மேலும் அதிகம் வேண்டும் என்றே தோன்றும். அது மிகவும் கஷ்டம். இவ்வளவு போதும் என்று ஒரு நிர்மானம் நாமே செய்துகொள்ளவேண்டும். நாம் இங்கிருந்து புறப்படும்போது கூட வராத பதார்த்தங்களுக்காக இவ்வளவுதான் பாடுபடுகிறதென்று ஒரு வியவஸ்தை வேண்டாமா? நிரதிசயமாய் ஆத்ம ஸுகம் ஒன்றிருக்க அதைப்பெற நாம் பிரயத்தினம் செய்ய வேண்டாமா? நம் புத்தி அதில் கொஞ்சமேனும் செல்லுகிறதா? சாஸ்திரத்தை நம்பாதவர்களுக்கும், நம்பி அனுஷ்டிக்காதவர்களுக்கும், அவ்விஷயமாகச் சொல்லித் தருவது எப்படி? ஆகையால் சாஸ்திரத்தில் நம்பிக்கையுள்ள சிலர்களாவது தர்மானுஷ்டானத்தை நழுவ விடாமல் நன்கு பரிபாலித்துவந்தால், அவர்களுக்கும் க்ஷேமமுண்டு, அவர்களைச் சேர்ந்தவர்களுக்கும் க்ஷேமமுண்டு, லோகத்திற்கே க்ஷேமமுண்டு. அவ்வித தர்மாசார சீலர்கள் ஜாஸ்தியாக ஜாஸ்தியாக ஸகல ஜனங்களுக்கும் கஷ்ட நிவாரணம் ஏற்படும். இவ்விதம் தங்கள் தங்கள் ஜாதி குலாசாரங்களை பரிபாலித்துக்கொண்டு தங்கள் தங்கள் ஸ்வதர்மங்களை அனுஷ்டித்து வருவதே குரு ஸேவையாகும். இதுவே அவருடைய பிரீதிக்கு ஹேதுவாகும். குரு பிரீதியடைந்தால் ஸகலவிதமான அபீஷ்ட ஸித்தியும் ஏற்படும். ஸத்குருப் பிரஸாதத்

ஆனால் எல்லாருக்கும் ஆஸ்திக்ய புத்தி திடமாக ஏற்பட வேண்டுமென்று பிரார்த்திக்கிறோம்.



## அத்யாயம் 4

## வித்யாப்யாஸம்

### 1. படிப்பும் பணமும்

எல்லோருக்கும் ஞானம் வேண்டுமென்கிற எண்ணமும் இருக்கிறது, ஸுகம் வேண்டுமென்கிற எண்ணமும் இருக்கிறது. ஆனால் ஞானம் என்றால் என்ன? ஸுகம் என்றால் என்ன? என்று யாரும் விசாரிப்பது கிடையாது. ஒரு சின்ன சுலோகத்தில் யாருக்கும் தெரியும்படியாக ஞானத்திற்கும் ஸுகத்திற்குமுள்ள ஸம்பந்தத்தைப் பெரியோர்கள் சொல்லியிருக்கிறார்கள்.

विद्या ददाति विनयं विनयाद्याति पात्रताम् ।
पात्रत्वाद्धनमाप्नोति धनाद्धर्मं ततः सुखम् ॥

ஆத்யந்திக ஸுகரூபமாயிருக்கிற மோக்ஷத்தையாவது அதற்கு ஸாதகமான ஆத்மக்ஞானத்தையாவது இங்கே சொல்லவில்லை. ஸாமான்யமான வித்யையைக் குறித்தே சொல்கிறார். "வித்யை கிரமப்படி அப்பிய

விக்கப்பட்டால் வணக்கமேற்படும். வணக்கமிருந்தால் நல்ல யோக்யதை யேற்படும். யோக்யதையுள்ளவர்களை ஜனங்கள் வெகுவாக ஆதரிப்பதால் பணம் கிடைக்கும். பணத்தை சரியானபடி உபயோகித்தால் தர்மம் கிடைக்கும். தர்மம் சித்தித்தால் ஸுகம் ஏற்படும்." என்று சொல்கிறார். இந்த சுலோகத்திலிருந்து நாம் முக்கியமாய் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்கள் இரண்டு: அதாவது, வித்யை சரியாக இருந்தால் விநயம் இருக்குமென்பதும், தர்மமே ஸுகஸாதனம் என்பதும். இதிலிருந்து விநயத்தை யேற்படுத்தாத படிப்புக்கு வித்யை யென்ற பெயர் பொருந்தாதென்பதும் நன்றாகத் தெரிகிறது. அநேகவிதமான இக்காலத்திய வாசிப்பை வித்யை என்று சொல்லிக்கொண்டும் அவ்வாசிப்பை யேற்படுத்திவிடும் ஸ்தலங்களுக்கு வித்யாசாலைகளென்றும் வியவஹாரம் இருந்தபோதிலும், அவைகளில் வாசித்து வெளிவந்தவர்கள் விநய ஸம்பன்னர்களாக இருக்கிறார்களா என்று கவனித்துப்பார்த்தால், அந்த வியவஹாரம் எவ்வளவு தூரம் நியாயம் என்பது வெளிப்படும். வித்யா விநய ஸம்பத்து மூலமாகக் கிடைத்த தனம் தான் தர்மத்திற்கு உபயோகப்படுமென்பதும் இந்த சுலோகத்திலேயே தெரிகிறது. தகப்பனாருக்கு ஸம்ஸ்கிருதத்தில் பிதா என்று பெயர். பையனை பரிபாலனம் செய்கிறபடியால் அந்தப் பெயர் ஏற்பட்டது. இப்பொழுதுள்ள அநேக தகப்பனார்கள் தங்கள் மக்களை பரிபாலிக்கிறார்களாவென்று கவனித்துப் பார்க்க

வேண்டும். எது குழந்தைகளுக்கு வாஸ்தவமாக அனு கூலமோ அதைச் செய்து கொடுப்பவர்களல்லவா அவர்களை பரிபாலிக்கிறார்களென்று சொல்லலாம்? அவர்கள் ஆசாரத்தைக் கெடுத்து ஆஹாரத்தைக் கெடுத்து எப்படியாவது பணம் ஸம்பாதித்தால் போது மென்ற ஒரே நோக்கத்துடன் பணத்திலுள்ள ஆசை யால் பையன்களைக் கெடுக்கிற தகப்பனார்களை பிதாக் கள் என்று எப்படி சொல்ல முடியும்? வாஸ்தவத்தில் இந்தத் தகப்பனார்களே அப்பையன்களைக் கெடுத்த தாக ஏற்படுவதால், அப்பையன்கள் ஸ்வதந்திரர் களான பிறகு தங்கள் தகப்பனார்களை உதாஸீனம் செய்வதும் வெறுப்பதும் ஸஹஜமாகிவிட்டது. அவன் அப்படியிருந்தாலும் இருக்கட்டும், எங்கேயாவது பணம் ஸம்பாதித்தால் போதும், என்று நினைக்கிற தகப்பனார்களும் இருக்கிறார்கள். பணத்தினால் ஸாக்ஷாத்தாக ஸுகம் உண்டாகிறதும் கிடையாது. ஒரு மனுஷ்யனுக்கு வேண்டியமட்டில் பணமிருந்தா லும், அந்தப் பணமானது அவனுடைய பசியை நீக் குமா? அந்தப் பணத்தைக்கொண்டு ஸாமக்கிரியைகள் வாங்கி சமயல் செய்து சாப்பிட்டாலொழிய பசி நிவி ருத்தியாகாது. அதேமாதிரி தனத்தால் ஸாக்ஷாத்தாக ஸுகமடைய முடியாது. தனத்தால் ஸுகமடைய தர்மம் மார்க்கமாக இருக்கிறது. தர்மமென்றால் என்ன, ஸுகமென்றால் என்ன, என்பதை முதலில் நன்கு விசாரித்துத் தெரிந்துகொள்ள வேண்டும். தர்மத்தை யும் வாஸ்தவமான ஸுகத்தையும் தெரிந்துகொள்வ-

தற்கு சாஸ்திர பரிசயம் அவசியம் செய்யவேண்டும். அல்லது சாஸ்திரமறிந்த சிஷ்டர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளவேண்டும்.

## 2. ஜகத்தின் நியமனம்

தர்மம்தான் உலகம் முழுமையினுடையவும் இருப்புக்குக் காரணமாயிருக்கிறது.

धर्मो विश्वस्य जगतः प्रतिष्ठा ।

என்று சொல்லப்படுவதால் தர்மம் என்பது பகவானுடைய ஸ்வரூபமேயாகிறது. அதை நாம் உபயோகப்படுத்தி ஒரு பலனையடைய வேண்டுமென்று நினைத்தால் அவருடைய ஆக்ஞா ரூபமான சுருதி ஸ்மிருதி முதலிய சாஸ்திரங்களில் சொல்லியபடி நடந்தால்த்தான் ஸாத்யமாகும். நித்தியமாக ஒரு நியமம் இல்லாத பக்ஷத்தில் ஜகத்தில் எந்தக் கார்யமும் ஸாத்யமில்லை. இவ்வுலகில் கண்ணால் பார்க்கின்ற நுட்பமான பொருள்களில் மிகவும் சிறியது தூசி. அந்த மண் தூசிகூட ஆகாயத்தில் தங்காமல் கொஞ்சம் கொஞ்சமாக கீழே வந்து விழுகிறது. மழையடிக்கும் போது மண் தூசி தங்குகிறதா? ஒரு மண் தூசிகூட தங்கமுடியாத ஆகாசத்தில் நிராதாரமாக இந்த கனமான பூமி எவ்விதம் தங்கி நிற்கிறது? பூமியை ஆதி சேஷனும் அஷ்டதிக்கு யானைகளும் தாங்கினும், அவைகளும் சேர்ந்து யாவும் ஆகாசத்திலல்லவா நிற்கின்றன? நாம் காண்கின்ற இந்த பூமி விசாலமான ஸமுத்திரத்தின்மீது மிதக்கின்றது. தண்ணீரில் நாம்

ஒரு சிறு கல்லைப் போட்டாலும் உடனேயே அடியில் போய்விடுகிறது, மேலே மிதப்பதில்லை. இவ்வளவு காடு மலைகளுடன் அதிக கனமான பூமியை ஸமுத்திர ஜலத்தின்மேல் அமைத்து அது கீழே மூழ்கிப் போகாமல் ஆகாயத்தில் நிறுத்துவது என்றால் இதை ஸ்ருஷ்டித்த பகவானின் பெருமை எப்படிப்பட்டது. அவருடைய கட்டுப்பாடாயிருக்கிற தர்மத்திற்கு கட்டுப்பட்டே ஜகத்தில் ஸகல கார்யங்களும் நடக்கின்றன. நாம் உட்கார்ந்திருக்கிற இந்த பூமி கீழே போகாமல் பாதுகாப்பதும், அந்தரிக்ஷம் சந்திர ஸூர்ய நக்ஷத்ராதிகளுடன் விளங்கிக்கொண்டு நமக்கு நன்மை செய்து வருவதும், ஆகாசம் திக்குக்கள் பூமி ஸமுத்திரம் முதலானவைகள் தரிக்கப்படுவதும், மஹாத்மாவான வாஸுதேவருடைய அபாரமான வீர்யத்தினால்த்தான்.

द्यौः सचन्द्रार्कनक्षत्रं खं दिशो भूर्महोदधिः ।
वासुदेवस्य वीर्येण विधृतानि महात्मनः ॥

பர்த்ருஹரி

सूर्यो भ्राम्यति नित्यमेव गगने तस्मै नमः कर्मणे ॥

"எதனால் ஸூர்யன் ஆகாச மண்டலத்தில் தினந்தோறும் ஸஞ்சரித்து வருகிறாரோ அந்த கர்மத்திற்கு நமஸ்காரம்" என்று சொன்னவிடத்திலும் ஜடமான கர்மத்திற்கல்லாமல் கர்மாத்யக்ஷனாகிய ஈசுவரனுக்கே பெருமை கொடுத்ததாகும். நாம் யாவரும் ஜீவித்திருப்பது ஸூர்யப் பிரகாசத்தினால்த்தான். ஸூர்

யப் பிரகாசமில்லாமல் போனால் நாம் இருட்டில் இருக்க வேண்டியிருக்கும். உஷ்ணமில்லையானால் நாமே இருக்க முடியாது. ஸகல புல் பூண்டுகளும் இருக்க முடியாது. அவர் ஒரு நியமத்திற்குக் கட்டுப் படாமலிருந்தால் பகல் ராத்திரி என்ற வியவஸ்தை யாவது, வஸந்தம் முதலான ருதுக்களாவது, இருக்க நியாயமில்லை. அவரும் பகவானுடைய நியமனத்திற் குக் கட்டுப்பட்டு நடக்கிறார் என்பதை "இவரிடத்தி னின்றும் பயந்துதான் வாயு வீசுகிறார், ஸூர்யன் உதயமாகிறார்" என்ற உபநிஷத் வாக்கியம் கூறு கிறது. இவைகளையெல்லாம் சிந்திக்கும்பொழுது இந்த பிரஹ்மாண்டத்திற்கு ஆதார வஸ்துவாக விளங்கு வோனும் ஜகத்திலுள்ள ஸகல வஸ்துக்களையும் தன் நியமனத்திற்குள்படுத்தி நடத்துவோனும் ஸகல ஜீவர் களாலும் செய்யப்படுகிற கர்மாக்களுக்குத் தக்கபடி பலனைத் தவறாமல் கொடுப்போனும் ஆகிய ஜகதீசு வரன் ஒருவன் மேலே இருக்கின்றான் என்று தெரி கிறது. ஸகல ஜகத்தையும் அவரே நியமனம் செய் வதால் அவருடைய சக்திக்காவது ஞானத்திற்காவது எல்லையில்லை. ஜகத்தில் நடக்கும் ஸம்பவங்கள் சில நம்முடைய சிற்றறிவுக்கு நியாயமில்லைபோலத் தோன் றலாம். வாஸ்தவத்தில் அவைகளும் ஒரு நியமப்படி நியாயமாக ஏற்பட்டவைகளாகவே இருக்கும்.

வெய்யில் காலத்தில் ஒரு நாஸ்திகன் காட்டின் வழியே ஸஞ்சரித்து வந்தான். களைப்பின் மிகுதியால் ஒரு ஆலமரத்தின் நிழலில் படுத்துக் கொண்டான்.

மரம் ஆகாயத்தை யளாவிப் பெரிதாயிருப்பதையும், அதன் பழங்கள் மட்டும் மிகச் சிறியதாயிருப்பதையும் பார்த்து சிந்திக்கலானான். "ஒரு சிறு பூஷணிக்கொடி கூட எவ்வளவு பெரிதான காய் காய்க்கின்றது. இந்த விசாலமான ஆலவிருக்ஷத்திற்கு இன்னம் எவ்வளவு பெரிய கனியை அமைத்திருக்கலாம். கடவுள் ஒருவர் இருந்து அவருக்கு புத்தியுமிருந்தால், சிறிய பூஷணிக் கொடிக்கு அவ்வளவு பெரிய காயை அமைத்து விட்டு இப்பெரிதான ஆலமரத்திற்கு இவ்வளவு சிறிய கனியைப் படைத்திருப்பாரா?" என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டான். சிறிது நேரத்திற் கெல்லாம் இவன் நித்திரை செய்யும் பொழுது இவன் மீது பல ஆலங்கனிகள் வீழ்ந்தன. அப்பொழுது அவனுடைய அபிப்பிராயம் வேறுவிதமாக மாறியது. "ஆகா! இவ்வளவு பெரிதான ஆலமரத்திற்குக் கடவுள் பெரிதான கனியைப் படைத்திருப்பாரானால் இப்பொழுது என் மீது விழுந்த கனிகளால் என் தலை முதலியவைகள் உடைந்து நசித்திருப்பேன். என்னைப் போல் உள்ளவர்கள் நிழலுக்காக இங்கே வரக்கூடுமென்பதை அறிந்தே கடவுள் இதற்கு சிறியதாக கனிகளைப் படைத்தார் போலும்" என்று சொல்லிக்கொண்டான். இது போலவே நம்முடைய புத்திக்கு எட்டாத விஷயங்கள் பல இருக்கின்றன. ஆகையால் ஈசுவர நியமன ரூபமான தர்மத்தின் ஸ்வரூபத்தை நம் புத்தியை வைத்துக் கண்டுபிடிக்கவோ தீர்மானம் செய்யவோ முடியாது. சாஸ்திரங்கள் மூலமாகத்தான்

அறியத்தக்கது. நமக்கு இன்ன கார்யம் செய்தால் நல்லது, இன்னது செய்தால் கெடுதல், என்று நம் புத்தியால் மாத்திரம் அறிந்துகொள்ள முடியாது. அதற்காகவே சாஸ்திரங்கள் ஹிதாஹிதங்களைப் போதிப்பதற்காகப் பிரவிருத்தித்திருக்கின்றன.

## 3. சாஸ்திர லக்ஷணம்

தவிரவும், இதரப் பிரமாணங்களால் அறியப்படாத அர்த்தத்தை புதிதாக அறிவிப்பதே சாஸ்திரம். மறுபிறப்பு, லோகாந்தரம், ஈசுவரன் இவைகளைப் பற்றி நாம் சாஸ்திர மூலமாகவே ஞானம் பெறவேண்டும். பிரத்யக்ஷமாகத் தோன்றுவதையே பிரமாணமாகக் கொள்வதானல், நம் கண்ணுக்கு பித்த தோஷத்தால் சங்கம் மஞ்சளாகத் தோன்றும், காமாலைக் கண்ணனுக்கு ஸூர்யனே மஞ்சளாகத் தோன்றும். இருள் நேரத்திலே பழுதை பாம்பாகத் தோன்றுகிறது. இவையெல்லாம் பிரத்யக்ஷம்தானே. வாஸ்தவமென்று நம்பி விடலாமா? தவிரவும் உலகத்தில் பிரவிருத்தி செய்யும்போது பிரத்தியக்ஷத்தால் தெரிந்தபடிதான் ஒப்புக்கொள்வேன் என்றால் ஒரு கார்யமும் நடைபெருது. உலகத்தில் ஜீவிப்பதற்காகக்கூட பலவித படிப்புகள் கற்றுக்கொண்டே தீர வேண்டியிருக்கிறது. அவைகளைப் பிரத்தியக்ஷமாய் அறிந்த பிற்பாடுதான் ஒப்புக்கொள்வேன் என்பது ஸாத்தியப்படாது. அப்படியிருக்க, இதரப் பிரமாணங்களுக்கு விஷயமாகாத தர்ம விஷயமாகவும் பிரஹ்ம

**விஷயமாகவும் சாஸ்திரமே நமக்குப் பிரமாணம் என் பதில் என்ன ஸந்தேஹம்?**

புத்தியை ஸூக்ஷ்ம விஷயங்களை கிரஹிக்கும்படி தீக்ஷ்ணமாக்கி உண்மையை தெளிவாக அறிந்துகொள்வதற்கே எல்லா சாஸ்திரங்களும் உபயோகமாகின்றன. தர்க்கம் மீமாம்ஸை முதலிய சாஸ்திரங்கள் ஒன்றுக்கொன்று விரோதமுள்ளவைபோல் சிலருக்குத் தோன்றலாம். மீமாம்ஸகர் ஈசன் இல்லை என்பர். வேதாந்திகள் உண்டு என்பர். நன்கு கவனித்துப் பார்த்தால் தார்க்கிகன் யுக்தியினாலேயே ஈசுவரனுண்டென்று ஸ்தாபிக்க முயன்றதை மீமாம்ஸகர் கண்டித்தாரே தவிர வேறில்லை. ஈசுவரன் யுக்தியினால் மாத்திரம் ஸித்திக்கக் கூடியவனில்லை யென்பதே அவர்கள் தாத்பர்யம். அவரவர்கள் பூர்வ ஸம்ஸ்காரங்களுக்குத் தக்கபடி புத்தியை ஊக்கமாகச் செலுத்தி உண்மையைக் கண்டுபிடிப்பதற்காகவே சாஸ்திரங்கள் வரிசையாக அமைந்துள்ளன. ஆனால் உண்மையைக் கண்டுபிடிப்பதில் புத்தியைச் செலுத்தாமல் புத்தியை கூர்மையாக மாத்திரம் செய்துகொண்டால் பிரயோஜனமில்லை. ஆத்ம ஸ்வரூபத்தை விளக்கி நித்தியானந்த ரூபமான மோக்ஷத்தை ஸம்பாதித்துக் கொடுக்கக் கூடிய வித்யையைத்தான் வித்யை என்று சொல்ல வேண்டும். அப்படியே எது பந்தகமாகவில்லையோ அதுவே சரியான கர்மா, இதர கர்மாக்கள் எல்லாம் வீண் சிரமமேயாகும். முக்திக்கு உபயோகப்படாமலிருக்கும், புத்தி ஸாமர்த்தியத்தை மாத்திரம் உண்டாக்கும் வித்யையெல்லாம் சில்ப வித்யைதான்.

तत्कर्म यन्न बन्धाय सा विद्या या विमुक्तये ।
आयासायापरं कर्म विद्याऽन्या शिल्पनैपुणम् ॥

தற்காலத்தில் பள்ளிக்கூடங்களில் அப்யஸிக்கப்படும் வித்யையெல்லாம் இதில் சேர்ந்ததுதான். இதனால் ஏற்படும் கௌசலத்தால் லௌகிகமாய் உண்டாகும் சிற்சில தொந்தரவுகளை விலக்கிக்கொள்ள முடியலாம்.

இதற்கு ஒரு கதை உண்டு. ஓர் அரசன் ஒரு நாள் காலையில் எழுந்திருந்ததும் ஜன்னல் வழியாகப் பார்த்தான். அந்த ஸமயத்தில் ஒரு வித்தியார்த்தி வீதியில் போய்க்கொண்டிருந்தான். அன்று முதன் முதலில் அரசன் அவன் முகத்தைத்தான் பார்த்தான். பிறகு ஜன்னலிலிருந்து திரும்பும்பொழுது அரசனுடைய தலை கதவிலடிபட்டு கொஞ்சம் காயம்பட்டது. உடனே அரசனுக்கு மிகவும் கோபமுண்டாய் விட்டது. அந்த க்ஷணத்திலேயே அந்த வித்தியார்த்தியை கொலை செய்துவிடும்படி அவ்வரசன் ஆக்ஞை கொடுத்துவிட்டான். உடனே அதிகாரிகள் அந்தப் பையனைக் கொலைக் களத்திற்குக் கொண்டுபோய் நிறுத்தினார்கள். அப்பொழுது அந்தச் சிறுவன் "எனக்கு ஏன் இந்த சிக்ஷை விதிக்கப்பட்டது? நான் என்ன அபராதம் செய்தேன்?" என்று கேட்டான். அதற்கு அதிகாரிகள் "இன்று காலையில் மஹாராஜா உன் முகத்தில் விழித்தனராம். உடனே அவருக்குத் தலையில் காயம் பட்டதாம். அதனால் உனக்கு இந்த சிக்ஷை விதிக்கப்பட்டது" என்றனர். இதைக் கேட்ட

வித்யார்த்தி "ஆனல் சரி. உலகத்தில் மரண தண்டனையை அடைகிறவர்களுக்கு அந்திய காலத்தில் அவர்களுடைய இஷ்டத்தைப் பூர்த்தி செய்விக்கிற வழக்கமுண்டு. அந்தமாதிரி எனக்கும் ஓர் இஷ்டமிருக்கிறது. அதைப் பூர்த்திசெய்து கொடுத்துவிட்டு ராஜாவின் ஆக்ஞையை நிறைவேற்றிவிடுங்கள்" என்று கேட்டுக்கொண்டான். அப்பொழுது கொலையாளிகள் "உன் இஷ்டம் என்ன ?" என்று கேட்டார்கள். அதற்கு வித்யார்த்தி "ராஜாவை ஒரு தடவை நான் பார்க்க வேண்டும். அதற்குப் பிறகு நீங்கள் ஆக்ஞையை நிறைவேற்றலாம்" என்றான். உடனே அவனை அரசனிடம் கொண்டுபோனார்கள். அவன் ராஜாவைப் பார்த்து "எனக்கு ஏன் இந்த சிக்ஷை விதித்தீர்கள் ?" என்று கேட்டான். அரசன் காரணத்தைச் சொல்லவும், அந்தப் பையன் 'மஹாராஜா, என்னைப் பார்த்ததனால் தங்களுக்கு தலையில் கொஞ்சம் அடிபட்டது. அதற்காக எனக்கு இக்கொலை தண்டனையை விதித்தீர்கள். நான் இன்று முதன் முதலில் உங்கள் முகத்தைத்தான் பார்த்தேன். அதனால் எனக்குக் கொலையை அடையும்படி நேர்ந்திருக்கிறது. இப்பேர்க்கொத்த தங்களுக்கு என்ன சிக்ஷை விதித்துக்கொள்ளுகிறீர்களோ உத்திரவாக வேண்டும்' என்று கேட்டான். அப்பொழுது அரசனானவன் சற்று யோசித்துப் பார்த்து தனக்குண்டான கோபத்தை ஸமாதானப் படுத்திக்கொண்டு பையனுடைய புத்தி கௌசலத்திற்கு ஸந்தோஷப்பட்டு

தான் கொடுத்திருந்த அநியாயமான கொலையாக்ஞையை ரத்து செய்தான்.

இந்த மாதிரி புத்தி கௌசலமேற்படுவதற்கு மாத்திரம் வேண்டுமானால் மற்ற வித்யைகள் உபயோகப்படலாம். அதன் பலத்தால் ஸாமான்யமான அஸௌகர்யங்களை யெல்லாம் பரிஹரித்துக் கொள்ள ஸாத்தியமாகலாம். இக்காலத்தில் அப்யஸித்து வரும் குசல வித்யைகளால் இப்பேர்ப்பட்ட கௌசலம் ஏற்படலாம் ஆனால் நித்தியமான ஸுகானுபவத்திற்கு வேண்டியதான ஞானம் இவைகளால் ஏற்பட மாட்டாது.

### 4. நித்ய ஸுகமே வேண்டும்

லோகத்தில் எல்லோரும் ஸுகம் வேண்டுமென்றும் துக்கம் வேண்டாமென்றும் அபேக்ஷிக்கிறார்கள். அதிலும் துக்கம் ஒரு பொழுதும் வேண்டாமென்றும் ஸுகம் நித்யமாயிருக்க வேண்டுமென்றும் கோருகிறார்கள். நித்திய ஸுகமில்லாமல், ஒரு நாள் ஸுகமும் ஒரு நாள் துக்கமும் ஏற்படுவதில் பிரயோஜனமில்லை. அந்த ஸ்திதியை ஒருவரும் அபேக்ஷிக்கிறதுமில்லை. ஸுகம் என்பது என்னவென்றும் சற்று யோசிக்க வேண்டும். புத்திர மித்திர களத்திராதிகளும் தனதான்யாதிகளும் ஏராளமாக இருப்பதே ஸுகம் என்று விஷயமறியாத ஸாமான்ய ஜனங்கள் நினைக்கிறார்கள். சற்று நிதானித்து விசாரித்துப் பார்த்தால் இவைகளெல்லாம் ஸுகமல்லவென்றும் மேலும்

துக்கத்திற்கே காரணமாகக் கூடியவைகளென்றும் ஸ்பஷ்டமாகத் தெரியவருகிறது. சர்க்கரை தித்திப்பாக இருக்கிறதென்றால் எல்லோருக்கும் ஒரேமாதிரியாக தித்திப்பாக இருக்கவேண்டுமே யல்லாது, ஒருவனுக்குத் தித்திப்பு, மற்றொருவனுக்கு கசப்பு, பின்னுமொருவனுக்கு காரம், வேறொருவனுக்கு புளிப்பு, இந்தமாதிரி இருக்கிறதில்லை யல்லவா ? இப்பொழுது உலகத்தில் எவ்வளவோ பேருக்கு புத்திர மித்திர களத்ரேச்சை யில்லாததையும் பார்க்கிறோம். கிருஹ ஆராமாதிகளிலுமிச்சையில்லாததையும் பார்க்கிறோம். தன தான்யாதிகளிலும் இச்சையில்லாதவர்களையும் பார்க்கிறோம். இப்பேர்ப்பட்ட பத்னீ புத்திராதி ஸாதனங்களிருந்தாலும் அதில் மிகவும் துக்கபடுகிறவர்களையும் பார்க்கிறோம். இவையெல்லாம் அநித்திய மென்றெண்ணி எல்லாவற்றையும் விலக்கிவிட்டு ஆனந்தமாக விருக்கிற ஸன்யாஸிகளும் வெகுபேர்கள் உலகத்திலிருக்கிறார்கள். அவர்களுக்கெல்லாம் புத்தியும் விவேகமுமில்லை யென்று சொல்லமுடியுமா ? பத்னீ புத்திராதிகளும் தன தான்யாதிகளும் யதேஷ்டமாக இருந்தாலும் எவ்வளவோ பேர்கள் ஸுகமாக இல்லாததை நாம் பார்க்கிறோமல்லவா ? இவைகளெல்லாம் ஸுக ஸாதனங்களாயிருந்தால் ஏன் அவர்கள் ஸுகமாக இருப்பதாகத் தெரியவில்லை. ஜகத்பூராவையும் ஆளும் ஸார்வ பௌமனை சக்கிரவர்த்திக்கு எல்லா பதார்த்தங்களுமிருக்கும். அவன் கூட நான் எப்பொழுதும் ஸுகமாக இருக்கிறேன் என்று

சொல்லிக்கொள்ள முடியாது. அவன் கூட நடுவில் நடுவில் எவ்வளவோ துக்கங்களை அடைந்ததாகவே ஏற்படும். ஏனென்றால், ஸுக துக்கம் கலப்பில்லாமல் ஜன்மாவே கிடையாது. இதையெல்லாம் யோசித்துப்பார்த்தால் ஐஹிகபோகங்கள் ஒன்றும் வாஸ்தவத்தில் ஸுக ஸாதனங்கள் அல்லவென்றும், மிகவும் க்ஷணிகமென்றும், கடைசியில் துக்கத்திற்கே ஹேது வாகிறதென்றும் ஸ்பஷ்டமாகத் தெரிந்து கொள்ளலாம்.

துக்கமில்லாமலிருக்க வேண்டுமென்றால் துக்கத்திற்கு மூலம் என்னவென்று விசாரிக்க வேண்டும். யோசிக்குமளவில், தேஹாத்ம பாவமே ஸகல துக்கத்திற்கும் மூலமாக இருக்கிறதென்பது நன்றாக புலப்படும். இந்த சரீரத்தினிடத்து ஆத்மபாவனை இருப்பதினாலேயே, இந்த சரீரத்திற்கு யார் கெடுதி செய்வார்களோ என்ற பயமும், அதன் காரணமாகவே அப்பேர்க்கொத்தவர்களிடம் த்வேஷமும் அதனால் துக்கமும் உண்டாகிறது. இத்தகைய துக்கத்திற்கு அக்ஞானமே மூலகாரணமாயிருக்கிறது. தேஹாத்ம பாவத்தால் யாரை நமக்கு சத்துருக்களென்று நாம் நினைக்கிறோமோ, அவர்களால் நமக்கு ஏற்படும் கெடுதியானது மிகவும் ஸ்வல்பமானதே. அவர்களைக்காட்டிலும் சரீராத்மபாவமுள்ள நாமே நமக்குப் பெரிய சத்துருக்களாக இருக்கிறோம். பகவத் கீதையில் நாம் தான் நமக்கு சத்துரு என்று சொல்லியிருக்கிறபடி அக்ஞானத்தோடு கூடிய நாம்தான் நமக்கு முக்கிய

மான சத்துருவே தவிர வேறு ஒருவரும் சத்துருவாக மாட்டார்கள். தேஹாத்ம பாவத்திலேயே பயமும் அதன்மூலமாக துக்கமும் உண்டாகிறதென்பதை ஸுலபமாகத் தெரிந்துகொள்ளலாம். நாம் ஜாக்ரத் அவஸ்தையிலிருக்கும்பொழுது, ஸாமான்யமான பூச்சிகள் ஏதாவது நமது ஸமீபத்தில் வந்தாலும்கூட, நாம் பயப்படுகிறோம். தூங்கும்பொழுதோ பெரிய புலியொன்று வந்து நம் பக்கத்தில் உட்கார்ந்தாலும்கூட நமக்கு பயம் ஏற்படுகிறதில்லை. ஜாக்ரத் அவஸ்தையில் சரீரமே நாம் என்று எண்ணியிருப்பதால் அந்த மாதிரி பயமும் துக்கமும் உண்டாகின்றன. நித்திராவஸ்தையிலோ இந்த சரீராத்ம பாவமில்லாததால் பயமும் துக்கமும் உண்டாவதில்லை.

## 5. அவித்யையை நீக்குவதே வித்யை

உலகத்தில் சரீராத்ம பாவம்தான் ஸகல பாபத்திற்கும் துக்கத்திற்கும் ஹேதுவாயிருப்பதால் அதற்குக் காரணமான அக்ஞானத்தை நீக்கிக்கொள்ள வேண்டியது அவசியம். அதை நீக்குவதற்கு வேதாந்த சாஸ்திரத்தால் உண்டாகும் ஞானத்திற்குத்தான் ஸாமர்த்தியமிருக்கிறது. ஸம்ஸார பந்தத்திற்கு ஹேதுவாயிருக்கிற அவித்யையை நீக்கக் கூடியதற்குத்தான் வித்யை என்ற பெயர் பொருந்தும். நியாய வைசேஷிகாதி சாஸ்திரங்களைக்கூட ஆத்ம ஞானத்திற்கு ஸாக்ஷாத்தாக ஸாதனமல்லாததால் வித்யை அல்லவென்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால்

தத்கால பள்ளிக்கூடங்களில் அப்யஸிக்கப்படும் வித்யையோ முக்கியமானதென்றும் அதனாலேயே ஸமஸ்தமான ஞானமும் ஸுகமும் ஏற்பட்டுவிடுமென்றும் நினைக்க இடமேயில்லை. வியவஹார ஸாதனமாக இந்த ராஜநீய வித்யை அவசியமென்று நினைத்து அப்யஸிந்தாலும், நித்திய ஸுகத்திற்கு ஸாதனமான வித்யையை அப்யஸிப்பதே நிச்ரேயஸகரம் என்று நிச்சயமாய் தெரிந்துகொள்ளவேண்டும். அந்த வித்யை தான் வேதாந்த சாஸ்திரமாகும். அதாவது, வேதாந்த சாஸ்திராப்பியாஸத்தால் உண்டாகும் ஞானம் ஒன்றே தான் அப்படிப்பட்ட நித்தியமான ஸுகத்தைக் கொடுக்கக்கூடியது.

அந்த ஞானம் எளிதில் வரக்கூடியதில்லை. இந்த நித்யானந்தம் உண்டாக வேண்டுமானால் அதற்குள்ள பிரதிபந்தங்கள் எல்லாம் போகவேண்டும். பிறகு ஸத்குருவினிடம் போய் ஸேவை செய்து அவருடைய அனுக்கிரஹத்திற்குப் பாத்திரராய் அவர் மூலமாய் வேதாந்த தத்வத்தை நன்கு கிரஹித்து சிரவண மனன நிதித்தியாஸனங்களினாலேயே இந்த ஞானம் அடைய வேண்டியதாயிருக்கிறது. இதர வித்யைகள் மாதிரி இந்த வித்யை கிரஹிக்கக் கூடியதில்லை. தன் தன் தர்மத்திலிருந்துகொண்டு தன் தன் வர்ணாசிரமங்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிற கர்மாக்களை சிரத்தையுடன் செய்துகொண்டு அதனால் சித்த சுத்தியையடைந்து இவ்விதமாய் பிரஹ்ம வித்யையை அடைவதற்கு யோக்கியதையை ஸம்பாதித்துக் கொள்வ

வேண்டும். பிராஹ்மண்யத்தை நிலைநிறுத்துவதற்கு அத்யந்த முக்கியமானதான ஸந்தியாவந்தனம் முதலானதுகளையாவது மிகவும் சிரத்தையுடனும் விதிப்படிக்கு ஸ்வரத்துடனும் அனுஷ்டித்தால் அவ்விதயோக்கியதை ஸம்பாதிக்க முதல் படி ஆரம்பித்ததாகும். அப்படியே மற்றவர்களும் தங்களுக்கு ஏற்பட்ட கர்மாக்களை சரிவர அனுஷ்டித்துக்கொண்டு தெய்வ பிராஹ்மணுதிகளிடத்தில் பக்தியுள்ளவர்களாய் இருந்தால் உத்தரோத்தரம் நிச்சயமாய் சிரேயஸ்ஸை அடைவார்கள் என்பதில் ஸந்தேஹமில்லை.



## அத்யாயம் 5.

## சாஸ்திரத்தின் பிரயோஜனம்.

### 1. செய்கை வீண் போகாது

இவ்வுலக ஸம்பந்தமான ஞானத்தை சிரமப்பட்டு ஸம்பாதித்து எவ்விதம் சரீர ஸௌக்கியத்தைத் தேடுகிறேமோ, அதுபோல் பரலோக ஸம்பந்தமான ஞானத்தையும் சாஸ்திரங்கள் மூலமாகத் தேடி அறிந்துகொண்டு பரலோக ஸாதகமான ஸாதனங்களையும் சாசுவதமான ஆத்மஸுகத்தை யடைவிக்கும் ஸாதனங்களையும் நன்கு அப்யஸிக்க வேண்டும். இவ்வுலகத்தில் ராஜகீய சட்டத்திற்கு விரோதமாக நடப்பவனை ராஜா தண்டிக்கிறர். ராஜாவிற்கு அனுகூல

மாக இருக்கிறவனை ஸம்மானம் செய்கிறார். இதைப் போல, புண்ணிய கர்மாக்களைச் செய்தவர்களுக்கு ராஜாங்கத்தில் பயன் தருகிறதுண்டா? பாப காரியங்களைச் செய்கிறவர்களுக்கு தண்டனையுண்டா? ராஜாங்கம் அல்லது ஜன ஸமூஹம் ஸம்பந்தமாய் உள்ள நல்ல கார்யங்களையும் கெட்ட கார்யங்களையும் ராஜா தெரிந்து அதற்கு ஸம்மானமும் சிக்ஷையும் விதிக்க முடியுமே தவிர, புண்ணிய பாப ரூபமாய் பரலோகத்தில் பலனை அளிக்கக் கூடியதாயிருக்கிற கர்மாக்களைப்பற்றி ராஜா கவனிக்கிறதில்லை. கவனிப்பது ஸாத்தியமுமில்லை. அவைகளுக்குப் பயன் தருவதற்கு ஈசுவரன் ஒருவர் இருக்கிறார் என்று அவசியம் ஏற்றுக்கொள்ள வேண்டும். ஜ்யோதிஷ்டோமம் செய்கிறவருக்கு அரசன் என்ன பயன் கொடுக்க முடியும்? ஈசுவரன்தான் கொடுக்க முடியும். இஹலோகத்தில் ஏற்படும் கியாதியே பலன் என்றால், யாகம் செய்து முடிந்தவுடன் இறந்துவிட்டால் அந்த கியாதியைத் தான் அவன் எப்படி கேட்க முடியும்? இவ்வூரில் கடன் வாங்கிக்கொண்டு ஒருவன் புதுச்சேரிக்குப் போய்விடுகிறான். அது வேறு ராஜாங்கத்தைச் சேர்ந்த இடமானதால் அங்கே போய் இந்த ராஜாங்கத்தார் ஒன்றும் செய்வதற்கில்லை. பணத்தை எடுத்துக் கொண்டு மோசஞ்செய்த இந்த மனுஷ்யனுக்கு இப்பொழுது ராஜ தண்டனை கிடைப்பதற்கில்லை. அவன் இந்த ஊரில் வஸிக்க முடியாமல் போனதே அம் மோசக் கார்யத்திற்கு தண்டனையென்போமானால்,

தன் மனைவி மக்கள் முதலிய எல்லோரையும் கூட்டிக் கொண்டு புதுச்சேரிக்குப் போய் ஸௌக்கியமாய் சிலர் இருந்துவிடுகிறார்களே? அவர்களுக்கு அது தண்டனையாகுமா? செய்தவனுக்குத் தகுந்த சிக்ஷை வேண்டுமல்லவா? இதற்காகவாவது நல்ல காரியம் கெட்ட காரியம் செய்தவர்களுக்கு எங்கு போனாலும் ஸுக துக்கங்களை அளிக்கக்கூடிய ஸர்வலோக சிக்ஷகனாக பகவான் உண்டென்று ஒப்புக்கொள்ளவேண்டும். எங்கு படிக்கிறோமோ அங்கேயே உத்தியோகம் கிடைக்கிறதா? படிக்கிறது ஒரு இடத்தில், உத்தியோகம் வேறு இடத்தில், என்பதுதான் ஸாதாரணமாயிருக்கிறது. எங்கு திருடுகிறானோ அங்கேயே சிக்ஷை கிடைக்கிறதா? வீட்டில் திருட்டு, காராகிருஹத்தில் தண்டனை. அதேமாதிரி தர்மாதர்மங்கள் செய்யும் இடம் ஒன்று, அவைகளை அனுபவிக்க ஸ்வர்க்கம் நரகம் வேறு இடம். திருடன் கையும் களவுமாக அகப்பட்டுவிட்டால் அடிபடுவதுபோல, சில அத்யுத்கடமான பாபங்களுக்கும் அத்யுத்கடமான புண்ணியங்களுக்கும் இங்கேயே பலன் உண்டு. ஆனால் ஸாதாரணமாக பலன் ஏற்படுவது வேறு லோகத்தில்தான். அப்படியே ஒரு மனிதன் செய்த கார்யத்திற்கு நாய் அனுபவிக்கக்கூடிய துக்கம் பலனாயிருக்கும்பக்ஷத்தில், அதை இந்த ஜன்மத்தில் அனுபவிக்க முடியாது. அப்படியே மற்றொரு கார்யத்திற்கு கந்தர்வாதிகள் அனுபவிக்கக்கூடிய ஸுகம் பலனாயிருக்கும்பக்ஷத்தில், அதையும் இந்த ஜன்மத்தில் அனுபவிக்க முடியாது.

ஆகையால் ஈசுவரன், லோகாந்தரம், ஜன்மாந்தரம் இம்மூன்றையும் ஒப்புக்கொள்வதுதான் நியாயமாகும். இம்மூன்றில் ஒன்றுமே கிடையாது नास्ति என்று சொல்கிறவனை நாஸ்திகன் என்கிறோம். இம்மூன்றில் ஏதாவது ஒன்று உண்டு अस्ति என்று ஒப்புக்கொண்டவனைக் கூட நாம் ஆஸ்திகனுகவே கருத வேண்டும். நாம் செய்யும் நன்மை தீமைகளை நன்கு அறிந்து அதற்குத் தகுந்தபடி பலன் அளிப்பதற்கு ஈசன் ஒருவர் இருக்கிறுர் என்று தெரிந்தாலும் நாம் ஒழுங்காய் நடந்து கொள்வோம். நாம் செய்யும் நன்மை தீமைகள் நாம் இறந்துவிட்டால், பின் துயரமாட்டாவென்று நினைக்காமல் அதற்குள்ள பலன் வேறு லோகத்திலோ வேறு ஜன்மத்திலோ அனுபவித்துத்தான் தீரவேண்டுமென்கிற ஞானம் இருந்தால் அப்பொழுதும் நாம் ஒழுங்காய் நடந்துகொள்வோம். திருடினுல் ஜெயில் வாஸம் கிடைக்குமென்ற பயமிருந்தால் திருடாமலிருக்கத் தோன்றும். நாம் அக்கிரமம் செய்தால் அரசன் கண்டிப்பான் என்று இஹலோகத்தில் ராஜ பயமிருப்பதுபோல், நாம் அதர்மமாக நடந்தால் ஈசன் பரலோகத்தில் நரகவாஸமாகிய ஜெயில் சிக்ஷை விதிப்பான் என்ற பயம் இருக்கவேண்டும்.

## 2. புண்ணிய பாபம் மனிதனுக்கே

பக்ஷிமிருகாதிகளுக்கு பாபம் புண்ணியம் என்பது கிடையாது. அவைகளுக்கு இது பாபம் இது புண்ணியம் என்று அறிந்துகொள்ளும் யோக்கியதை

கிடையாது. ஒரு பசு ஒருவன் வயலில் போய் அங்குள்ள பச்சைப் பயிர்களைத் தின்றுவிட்டால் அப்பசுவை பவுண்டில் அடைக்கிறதில்லையா? அது அதன் குற்றத்திற்கு தண்டனையில்லையா என்று கேட்டால் பவுண்டில் அடைப்பவனுடைய உத்தேசம் பசுவை தண்டிப்பதற்காக இல்லை. அப்பசு மறுபடியும் தன் வயலில் வந்து மேயாமல்படி அப்பசுவின் சொந்தக்காரன் பார்த்துக்கொள்ள வேண்டியதற்காகவும் அப்பசுவைக் கவனியாமல் இருந்துவிட்டது தவறென்று அப்பசுவின் சொந்தக்காரன் புத்தியில் பதியச் செய்ய வேண்டுமென்றும் செய்த கார்யம். பசுவுக்குப் பகுத்தறிவு கிடையாது. அதன் சொந்தக்காரனுக்குப் பகுத்தறிவு உண்டு. தன் பசுவினால் இதரர்களுடைய பொருளுக்கு நஷ்டமேற்படாமல் பார்த்துக்கொள்ள வேண்டிய கடமையை அவனுக்குப் புகட்டுவதற்காக அவனுடைய பசுவை பவுண்டில் அடைக்கிறார்கள். பசுவின் சொந்தக்காரனுக்கு பகுத்தறிவு இருப்பதினால் நாளைமுதல் தன் மாடு வயலுக்குப் போய் மேயாதபடி பார்த்துக்கொள்வான். ஆகையால் பசுவை பவுண்டில் அடைப்பதும் அப்பசுவின் சொந்தக்காரனுக்கே சிக்ஷையாகும். நல்லது கெட்டது என்னவென்று தெரியக்கூடிய சக்தியிருப்பதினால் மனிதனுக்கே பாபபுண்ணியங்கள். மனிதனுக்கே ஸேது ஸ்நாநம் தீர்த்தயாத்திரை முதலியன சாஸ்திரங்களால் விதிக்கப்பட்டிருக்கின்றன. புலிக்கு ஸேது ஸ்நாநம் உண்டா? அது பிராணி ஹிம்ஸை செய்கிறதென்

யதற்காக பிராயச்சித்தம் உண்டா? ராஜசிக்ஷை தான் உண்டா? ஆகையால் மனிதனுக்கு மாத்திரம் தான் விதிவிலக்குகள் உண்டு.

மனிதனுக்கும் அவன் செய்த குற்றங்களுக்குத் தகுந்த தண்டனை அரசனால் கொடுத்து அனுபவிக்கப் பட்டுவிட்டால் பிறகு தெய்வ தண்டனை இல்லை. இவ்வுலகத்தில் சிக்ஷை பெருதவனுக்கு தெய்வ தண்டனை நிச்சயமாக உண்டு. நெருப்பு தெரிந்து தொட்டாலும் சுடும், தெரியாமல் தொட்டாலும் சுடும், என்றிருந்தாலும் சுடும் என்று தெரிந்துகொண்டவன் நெருப்பினிடம் நெருங்கமாட்டான். அதேபோல, பாபம் செய்தால் இந்த லோகத்தில் தண்டனை ஏற்படாமல் போனாலும் பரலோகத்தில் அல்லது மறு ஜன்மத்தில் கண்டிப்பாய் ஈசன் தண்டிப்பார் என்ற அறிவுள்ளவன் பாபம் செய்யத் துணியமாட்டான். "இந்த லோகமே ஸத்தியம், வேறு புண்ணிய பாப பலனை அனுபவிக்க வேண்டிய லோகங்கள் இல்லை, என்று எவன் நினைத்துக்கொண்டிருக்கிருனோ, அவன் அடிக்கடி என்வசம் அகப்பட்டுக்கொள்கிருன்" என்று கடோபநிஷத்தில் யமதர்ம ராஜனுடைய வாக்கு. பாம்பு கடிக்கும் என்று தெரிந்தவன் பாம்பினிடம் செல்ல பயப்படுவான். பயந்து ஒதுங்கியவன் கடிபடான். அதேமாதிரி பாபகார்யங்களிலிருந்து பயந்து ஒதுங்கி நடப்பவன் பாபத்தின் பயனுகிய துன்பத்தை அநுபவிக்கமாட்டான். ஆகையால் எப்பொழுதும் பாப பயம் இருக்கவேண்டியது அவசியம்.

## 3. ஆஸ்திகர் பலவிதம்

கர்ம பலன் கொடுக்கும் ஈசன் ஒருவன் உண்டு, ஜன்மாந்தரம் உண்டு, லோகாந்தரம் உண்டு, என்று நிச்சயமான புத்தியுடன் கூடியவர்களே ஆஸ்திகர்கள் என்று சொன்னோம். ஆனால் இந்தக் காலத்தில் அந்த நிச்சய புத்தி ஸாமான்னியமாய் இருக்கிறதில்லை. "இம்மூன்றும் உண்டென்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. அது வாஸ்தவமோ என்னவோ எனக்குத் தெரியவில்லை. வெறும் பொய்யாக இருந்தாலும் இருக்கலாம். ஆனால் அவைகளில் சொல்லியபடி ஒருக்கால் வாஸ்தவமாக இருந்து ஈசுவரன் என்று ஒருவன் இருந்துவிட்டால், என்ன செய்கிறது? ஜன்மாந்தரம் இருந்துவிட்டால் என்ன செய்கிறது? லோகாந்தரம் இருந்துவிட்டால் என்ன செய்கிறது? என்று தோன்றுவதால் கூடியமட்டும் சாஸ்திர விரோதமன்னியில் ஜாக்கிரதையாய் நடந்துகொள்கிறேன்" என்று சொல்லக்கூடியவர்களே ஜாஸ்தி. சாஸ்திரத்தில் சொல்லியபடி ஈசனாவது ஜன்மாந்தரமாவது லோகாந்தரமாவது கிடையவே கிடையாது என்று துணிந்து சொல்லாததினால் அவர்களை நாஸ்திகர்கள் என்று சொல்வதற்கில்லை. அவர்களையும் ஆஸ்திகர் கோஷ்டியிலேயே ஒருவாறு சேர்த்துக்கொள்ளலாம். இரண்டு பையன்கள் ஸந்தியாவந்தனம் செய்வது கிடையாது. ஸந்தியாவந்தனம் செய்தாயா? என்று கேட்டபோது, ஒருவன் "நான் ஸந்தியாவந்தனம் பண்ணுவது கிடையாது" என்று தைர்யமாய் உண்மையைச் சொல்கிறான்; மற்

ெருரு பையன் "நான் ஸந்தியாவந்தனம் செய்துவிட்டேன்" என்று தைர்யமாய் பொய் சொல்கிருன். இவ்விரண்டு பேர்களில் யார் சிலாக்கியம் என்று கவனித்தால், இரண்டு பேர்களிடத்திலும் ஸந்தியாவந்தனம் பண்ணுத குற்றம் ஸமமாக இருக்கிறது; ஆகையால் பொய் சொன்னவனைவிட உண்மை சொன்னவனே சிலாக்கியம் என்று தோன்றும். வாஸ்தவத்தில் நன்கு கவனித்துப் பார்த்தால், ஸந்தியாவந்தனம் பண்ணவில்லை என்ற குற்றம் இரண்டு பேர்களிடமும் ஸமமாக இருந்தபோதிலும், ஸங்கோசமன்னியில் "நான் பண்ணுகிறதில்லை" என்று சொன்னவன் ஸந்தியாவந்தனம் பண்ணவேண்டியது அவசியம் என்பதை ஒப்புக்கொள்ளாதவன்; ஸங்கோசத்திஞல் "நான் பண்ணிவிட்டேன்" என்று சொன்னவன் ஸந்தியாவந்தனம் பண்ணவேண்டியது அவசியம் என்று ஒப்புக்கொண்டவன். ஆகையால் பொய் சொன்னவனையே ஆஸ்திகனைச் சேர்த்துக்கொள்ளலாம். அவனுக்கு ஸந்தியாவந்தனம் செய்யவேண்டியது அவசியம் என்கிற எண்ணம் இருப்பதால், அவன் திருந்தக்கூடியவன். மற்றவனுக்கு அந்த எண்ணம் இல்லாதபடியால் அவனைத் திருத்துவது மிகவும் சிரமம். ஆகையால் இந்தக் காலத்தில், தர்மானுஷ்டானம் செய்யாமல்போனலும், "தர்மானுஷ்டானம் செய்யவேண்டியதுதான், ஆனல் எனக்கு ஸௌகர்யப்படவில்லை" என்று சொல்லிக்கொண்டிருக்கிறவர்களையும் ஆஸ்திகர்களாகத்தான் பாவிக்க வேண்டியிருக்கிறது. இவ்

விதமாக இக்காலத்தில் ஆஸ்திகர்கள் பலவகைப்பட்டிருந்தபோதிலும் அவர்களுடைய ஆஸ்திக்யத்தின் தாரதம்யத்தினுல் பலனிலும் வித்தியாஸமுண்டு. சாஸ்திரம் வாஸ்தவமே என்று திருடமான நம்பிக்கையுடன் கர்மானுஷ்டானம் செய்கிறவர்களுக்கும், சாஸ்திரத்தில் பூரு நம்பிக்கையில்லையானுலும் அனுஷ்டானத்தை விடாமலிருப்பவர்களுக்கும், சாஸ்திரம் பிரமாணம்தான் என்று மாத்திரம் சொல்லிக்கொண்டு கர்மானுஷ்டானமே இல்லாமலிருக்கிறவர்களுக்கும் பலன் ஏக ரூபமாக எப்படியிருக்க முடியும்? சாஸ்திரம் பொய் என்று தீர்மானித்து கர்மானுஷ்டான வழிக்கே வராமலிருக்கிறவர்களைவிட இவர்கள் எவ்வளவோ மேலானவர்கள். அந்தமட்டில் அவர்கள் எல்லாரும் ஆஸ்திகர்களென்று சொன்னேம்.

சிரத்தையோடு செய்வதற்கும் சிரத்தையன்னியில் செய்வதற்கும் வித்தியாசம் நன்ருக உண்டு. தெரிந்து செய்வதற்கும் தெரியாமல் செய்வதற்கும் வித்தியாஸம் நன்ருக உண்டு. நாம் புத்தி பூர்வமாக சிரத்தையுடன் கர்மாக்களைச் செய்வதில்லை. ஆனுல் பிரமாதத்தினுல் செய்யப்படும் கர்மாவுக்கும் பலன் ஏற்படுவது நிச்சயம். நாம் புத்தி பூர்வமில்லாமல் ஏதோ தெய்வாதீனமாகச் செய்த புண்ணிய கர்மாக்களினுலேயே இப்பொழுது இந்தவிதமாக ஜீவித்து வருகிறேம் என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

### 4 சாஸ்திரமும் யுக்தியும்

பசித்தால் சாப்பிடு என்று சொல்லிக்கொடுக்க சாஸ்திரம் வேண்டாம். உடம்பு அழுக்காக இருந்

தால் ஸ்நாநம் செய் என்று சொல்லிக்கொடுக்க சாஸ்திரம் வேண்டாம். இவ்விதம் சாப்பிட்டால் நமக்கு பாபம் ஏற்படாது; இவ்விதம் சாப்பிட்டால் புண்யம் ஏற்படும்; இவ்விதம் ஸ்நாநம் செய்தால் புண்ணியம் ஏற்படும் என்று நம்மால் தெரிந்துகொள்ள முடியாதனால், அதைச் சொல்லிக்கொடுக்க சாஸ்திரம் வேண்டும். ஸ்நாநம் செய்தால் சரீரசுத்தி ஏற்படுகிறது. அந்த ஸ்நாநத்தையே சாஸ்திரத்தில் சொல்லியபடி செய்தால் புண்ணியமாகிய அதிருஷ்ட பலனும் கூடவருகின்றது. ஒரே பிரயத்னத்தில் இரண்டு பலன்கள் ஏற்படக்கூடியதாயிருந்தால், நாம் அப்பலனை உதறவேண்டாமே. இது போலவே தேவ பூஜை, ஆலயப்பிரதக்ஷிணம், ஸூர்ய நமஸ்காரம் முதலிய சாஸ்திரீய கர்மானுஷ்டானங்களினால் நமக்கு இந்த லோகத்தில் ஆரோக்யத்துடன் வாழ்வு, சரீரத்தில் நல்லபலம் முதலியவை கிடைப்பதுடன் வேறொரு புண்ணிய ரூபமான அதிருஷ்டபலனும் கிடைப்பதாகச்சொல்லுகிறார்கள். இரண்டு பலனும் நமக்குக் கிடைக்க இடமிருக்கும்போது, அவ்விரண்டில் ஒரு பலன்தான் தேவை என்று சொல்வது புத்திசாலித்தனமாகுமா? சாஸ்திரீய ஆசாரங்களை அனுஷ்டிப்பதினாலேயே நமக்கு ஆரோக்கியமும் அதிருஷ்ட பலனும் கிடைப்பதாகவிருக்க, அதைவிட்டு வெள்ளைக்காரர் போல சரீரக்லேசப்பட்டு பந்தாடித்தான் ஆரோக்கியம் பெறவேண்டும் என்ற ஆசாரம் எதற்காக? ஸதா காலமும் உத்தியோகஸ்தலத்தில் உட்கார்ந்திருப்ப

தால் ரத்தவோட்டம் இல்லாமலிருக்கலாம். நடந்து கொடுத்தால் ரத்தவோட்டம் ஏற்படுவதும் சரிதான். அதற்குப் பந்தாடித்தாறு ரத்தவோட்டம் பெற வேண்டும்? கடுமையாகப் பந்தாடுவதால் கால்கைகளில் அடியும் தலையுடைதலும்கூட ஸம்பவிக்கிறது. ஆலயப்பிரதக்ஷிணம் செய்தால் கைகால் தலை அடிபடுமா? அதனாலும் ரத்தவோட்டம் எற்படாதா? பந்தடியில் பல் உடைந்ததாகவும் கேட்டிருக்கிறோம். மந்திராக்ஷதைபோல பந்துத் தூசியையா தலையில் தரிக்கவேண்டும்? வெள்ளையர் உபதேசப்படி தானு நாம் செய்யவேண்டும்? சாஸ்திரோபதேசப்படி செய்தால் என்ன? சாஸ்திர நிஷித்தமான கார்யம்செய்து சரீர அனர்த்தத்தை ஸம்பாதிப்பதைப் பார்க்கிலும், சாஸ்திரப்படி ஸத்கர்மாக்களை அனுஷ்டித்து சரீர ஆரோக்கியம், பகவானுடைய அனுக்ரஹம், இரண்டையும் பெற்றால் என்ன? லௌகிக ஆசாரத்தில் அனர்த்தம் கலந்த ஸுகம்தான் உண்டு. புஷ்டியான ஆகாரத்தைத் தினம் சாப்பிடுவதால் சரீரத்தில் மதம் ஏற்படுகிறது. அதைத் தணிப்பதற்காக பதினைந்து நாட்களுக்கு ஒருமுறை ஒருநாள் உபவாஸம் இருந்தால் நல்லது என்று நவீனர்கள் ஒப்புக்கொள்வார்கள். அந்த உபவாஸம் எகாதசியன்றுதான் இருக்கவேண்டுமென்பதென்ன? ஏதேனும் ஒருநாள் இருந்தால் போதாதா? என்று கேட்பார்கள். ஏகாதசி மஹாவிஷ்ணுவுக்குப் பிரியமான திதி. புண்ணியகாலத்தில் நல்ல கார்யத்தைச்செய்வது நல்லதுதானே? சரீரத்

திற்கும் ஹிதம், புண்ணியமும் கிடைக்கும். முதல்நாள் உபவாஸமிருந்தால் உஷ்ணமும் பித்தமும் அதிகமா யிருக்கும், மலபந்தமும் உண்டாகும். அதுகளை நிவர்த்தி செய்து சரீரத்திற்கு ஆரோக்கியஸுகம் உண்டாவதற்காக துவாதசி பாரணையில் அகத்திக் கீரையையும் நெல்லிக்காயையும் உபயோகிக்கும்படி ஏற்படுத்தி இருக்கிறார்கள். உஷ்ணம் விளக்கெண்ணெ யால் போகட்டுமே, அகத்திக்கீரை எதற்காக? என்று கேட்பார்கள். ஆகையால் பிரத்தியக்ஷபலனை மாத்தி ரம் எதிர்பார்த்து சாஸ்த்ரீய கர்மானுஷ்டானம் செய் வதுஎன்பது உசிதமில்லை. சாஸ்திரீய கர்மங்களை விதிக் கும் சாஸ்திரத்திற்கும் பிரத்தியக்ஷபலனை மாத்திரம் வைத்து பிராமாண்யம் ஏற்பட்டதில்லை. சாஸ்திரப் படிச்செய்தால் இரண்டுவித பலனும் உண்டாகிற தென்றிருப்பதால், அதிருஷ்டபலனை உதாஸீனம் செய்வது நியாயமில்லையென்று மாத்திரம் சொன்னோம்.

ஸூர்ய நமஸ்காராதிகளுக்கு ரக்தபுஷ்டி ஆரோக் கியம் முதலான பலன்களை பிரத்தியக்ஷ பலன்களாகக் காட்டி அவைகளிலேயே சாஸ்திரத்திற்கு தாத்பர்யம் போல சொல்வது நியாயமல்ல. பிரத்தியக்ஷப் பிரயோ ஜனமே சாஸ்திரீய ஆசாரங்களின் உத்தேசம் என்று ஸ்தாபித்தால், பலவிடங்களில் சாஸ்திரத்தின் அபிப் பிராயம் நம்மால் அறியமுடியாமலிருப்பதால், அநே கம் நல்ல கார்யங்களைக் கைவிடும்படி ஏற்படும். தவிர வும், எது பிரத்தியக்ஷத்தினாலோ அனுமானத்தினாலோ

அறிய முடியாதோ, அந்த உபாயத்தைச் சொல்லிக் கொடுக்கவே சாஸ்திரம் ஒன்று இருப்பதால், பிரத்தியக்ஷப் பிரயோஜனம் ஸாக்ஷாத்தாக சாஸ்திரத்தின் உத்தேசத்தில்சேராது. அதன் முக்கிய உத்தேசம் ஒன்று; அதாவது, அதிருஷ்டபலன் என்பது. மத்தியில் அவாந்தரமாகக் கிடைக்கிற பலன்களே திருஷ்ட பலன்கள். உதாஹரணமாக, நாம் மாம்பழத்தைக் கருதியே மாவிதைகளை ஊன்றுகிறோம். இலைகளும் நிழலும் வாஸனையும் நமக்கு அவாந்தர பலனாகக் கிடைக்கின்றன. இதை சாஸ்திரங்களில் ஆனுஷங்கிக பலன் என்று சொல்வார்கள். அது தானாகவே வரும். வேண்டாமென்றாலும் வரும். தெரிந்து தொட்டாலும், தெரியாமல் தொட்டாலும் தீயின் குணம் சுடுதல் என்பதுபோல, கர்மம் செய்தால் நாம் உத்தேசித்தாலும் உத்தேசிக்காமல் போனாலும் இவ்வித ஆனுஷங்கிகமான திருஷ்டபலன்கள் ஏற்பட்டே தீரும். அவைகளுக்காக தனிப் பிரயத்தினம் அவசியமில்லை.

## 5. வேதப் பிராமாண்யம்

யாரும் ஒரு க்ஷணம்கூட வேலை செய்யாமலிருப்பதில்லை என்ற தத்வத்தை பகவான் கீதையில் எடுத்துக் காட்டுகிறார். எல்லாக் கர்மாக்களுமே கிலேசத்தைக் கொடுப்பவைதான் என்றாலும் சாஸ்திரீய கர்மாவுக்கும் அசாஸ்திரீய கர்மாவுக்கும் பலனில் வித்தியாஸமுண்டு. சாஸ்திரங்கள் விதிக்கின்ற கர்மங்களைச் செய்வோமானால் ஸுகரூபமான பலன் ஏற்படும்.

மற்றவை அவ்விதப் பிரயோஜனத்தைத் தரமாட்டா. பகவானுடைய வாக்கியமான வேதசாஸ்திரத்தை நம்பி கர்மானுஷ்டானம் செய்வோமேயானல் பகவான் நம்மிடம் பிரஸாதத்தை அடைந்து அனுக்ரஹம் செய்கிறார். இந்த வழியில் சிரமம் அதிகமென்று தோன்றினாலுங்கூட, பலனும் அதிகமென்பதை நினைத்து சாஸ்திரீய கர்மாவையே செய்யவேண்டும். மற்ற கர்மாக்களில் வாஸ்தவத்தில் சிரமம் குறைவில்லை. ஆயாஸமே பலனாகவும் ஏற்படும். ஆகையால் பகவத் பிரீதிக்கு ஸாதனமாய் நமக்கு ஸுகத்திற்கு உபாயமாயிருக்கிற சாஸ்திரீய கர்மாக்களையே நாம் செய்துவந்தால் திருஷ்டபலனாகிய ஐஹிக ஸுகங்களும் அதிருஷ்டமான புண்ணிய பலனும் நமக்கு நிச்சயமாய்க்கிடைக்கும்.

தினந்தோறும் ஸந்த்யையை உபாஸனம் செய்யுங்கள் என்று வேதம் உபதேசிக்கின்றது. வேதம் பிரயோஜனமற்றதைச் சொல்லாது. வேதம் சொல்வதைப் பொய்யென்று எவ்விதம் நிரூபிப்பது? நியாயஸ்தலங்களில் ஒருவன் சொல்வதைப் பொய் என்றும் மெய் என்றும் எவ்விதம் தீர்மானிக்கிறார்கள்? அவன் சொல்வதை முதலில் நன்கு கேட்டுக்கொண்டு, அதில் முன் பின் சொன்னவற்றில் விரோதம் காணப்படுமானாலும், வேறு விதத்தில் பிரமாணங்களால் ஸித்தமாயிருப்பதற்கு விரோதமாகவிருந்தாலும் அவன் சொன்னது பொய், அவன் பொய்யன், என்று தீர்மானிக்கிறார்கள். அதுபோல, வேதம் சொல்வது முழு

வதையும் முதலில் மனதில் வாங்கிக்கொண்டல்லவோ, பிறகு அதில் சொல்லப்படுவது முன் பின் விரோதமா, பிரமாணாந்தர விரோதமா என்று தீர்மானிக்க முடியும். வேத சாஸ்திரங்களை நாம் படிப்பதேயில்லை. பொழுதை வீணாக்கத்தக்க வர்த்தமான பத்திரிகைகளைப் படித்து காலம் போக்குகிறோம். ஆனால் வேதத்தைப்பற்றி தீர்மானமாக அபிப்பிராயம் சொல்லிவிட மாத்திரம் தயாராகிவிடுகிறோம். அவ்விதம் செய்வது கொஞ்சமேனும் நியாயமாகாது. வேதம் முதலியவைகளை முதலில் மனதில் வாங்கிக்கொண்டு, அதன் பிறகு அவைகளில் சொல்லியிருக்கும் விஷயங்கள் வேறு பிரமாணங்களுக்கேனும் அல்லது தனது வாக்கியங்களுக்கேனும் விரோதமாயிருக்கிறதா என்று தெரிந்து அவ்விதம் விரோதம் காணப்பட்டால் தள்ளிவிடுவது நியாயமாகும். ஆனால் உண்மையாக கவனிக்கும்போது தனது வாக்கியங்களாலாவது வேறு பிரமாணங்களாலாவது வேதம் பாதிக்கப்படுகிறதில்லை. இந்தப் பெருமை வேதத்திற்கு அமைந்திருப்பதால் வேதம் ஈசனால் சொல்லப்பட்டது என்று சிலர் தீர்மானிக்கிறார்கள். சொல்கிறவனுடைய யோக்கியதையைப்பொறுத்து அவனுடைய வாக்கியத்திற்குப் பிராமாண்யமேற்படுத்துகிறதென்ற நியாயத்தைக் கவனித்தாலும், ஸர்வக்ஞனை ஈசுவரனுடைய வாக்கான வேதத்தில் பொய் என்ற தோஷம் எப்படியிருக்க முடியும்? ஈசுவரனால் சொல்லப்பட்டபடியால் வேதத்திற்குப் பிராமாண்யம் என்று சொன்னாலும், வேதத்

தின் பிராமாண்யம் தானுகவே ஸித்திக்காமல் அதைச் சொல்லிய ஈசுவரனின் யோக்கியதையைப் பொறுத் திருக்கிறது என்று ஏற்பட்டுவிடும் என்று அஞ்சி வேதத்தின் பிராமாண்யம் ஸ்வதஸ்ஸித்தமே, அதா வது தானுகவே இருக்கிறதே தவிர இன்னுர் சொன்ன திஞல் ஏற்பட்டதில்லையென்று வேதத்தை அபௌரு ஷேயம், ஈசுவரன் உள்பட எவ்வித கர்த்தாவினுலும் செய்யப்பட்டதில்லை, ஈசுவரன் வெளியிட்டவரே தவிர, செய்தவரில்லை, என்று சொல்கிருர்கள். அவ் வித வேதத்தில் தோஷம் யாதொன்றும் கிடையாது என்று நிரூபிப்பதற்காக மீமாம்ஸா சாஸ்திரமானது பிரவிருத்தித்திருக்கிறது.

ஸுக ஸாதனம் தர்மம். தர்மத்தைத்தெரிவிப் பது வேதம். வேத தாத்பர்யத்தை விளக்குபவர் குரு. ஆகையால் குருவினிடம் விசுவாஸமிருந்தால் வேதார்த்தம் நன்கு விளங்கும். வேதார்த்தம் விளங்கி ஞல் தர்ம ஸ்வரூபம் நன்கு விளங்கும். தர்மம் நன்கு அனுஷ்டிக்கப்பட்டால் ஸுகம் தானே ஏற்படும். இக் காலத்தில் அன்னியர்களின் ஸஹவாஸத்திஞலோ, அல்லது வேறு காரணத்திஞலோ குருபக்தி, வேத விசு வாஸம், தர்ம சிரத்தை எல்லாம் குறைந்திருக்கின்றன. எல்லாவற்றிற்கும் பலஞக இருக்கும் ஸுகம் மாத்திரம் எப்படி ஏற்படமுடியும்? அதிஞலேயே ஜனங்கள் கஷ் டப்படுகிருர்கள். எல்லா கிராமங்களிலும் காணப்படு கின்ற கஷ்டங்களுக்கு மூல காரணம் தர்ம ஆசார லோபம் தான். குருபக்தியுடன் குரு உபதேசித்தபடி

வைதிக தர்மங்களை அனுஷ்டித்துவந்தால் ஸகல ஜனங் களுக்கும் கஷ்டநிவாரணம் ஏற்படும். எல்லோரும் ஸுகித்திருப்பார்கள்.



## அத்யாயம் 6.

## மானிடர் பெருமை.

### 1. உலகில் தாரதம்யம்.

இவ்வுலகம் ஸ்தாவரம் என்றும், ஜங்கமம் என் றும், இரு வகைப்படும். இவற்றுள் ஸ்தாவரம் மரம் முதலானவைகள். ஜங்கமம் ஸாமான்ய பிராணிகள் என்றும், மனிதர்களென்றும், தேவர்களென்றும், மூவகைப்படும். இவைகளுக்குள், பிராணிகள் மிகவும் கஷ்டப்படுகிறவைகளென்றும், தேவர்கள் மிகவும் ஸுகப்படுகின்றவர்களென்றும், மனுஷ்யர்கள் ஸுகம் துக்கம் இரண்டையும் கலந்து அனுபவிக்கிறவர் களென்றும், பிரத்தியக்ஷத்தாலும் சாஸ்திரத்தினாலும் அறியப்படுகிறது. அதிலும் மனுஷ்யர்களிடத்தில் தான், ஸுக துக்க ஞான விஷயத்திலுள்ள தாரதம் யம் பிரத்யக்ஷமாய் நன்றாக அறியப்படுகிறது.

ஆனால், காரணத்தில் தாரதம்மியம் இல்லாமல், கார்யமாகிய பலத்தில் தாரதம்மியம் ஏற்படுவது உசித மில்லையாதலால், காரணத்திலும் தாரதம்மிய வித்யா

ஸங்கள் இருந்தே தீரவேண்டுமென்பது நிச்சயம். எல்லா உலகங்களையும் படைத்த ஈசுவரன் ஸ்வதந்திரனுகையால் வேறு காரணங்கள் ஒன்றையும் அபேக்ஷிக்காமலே தானுகவே இவ்வாறு வித்யாஸங்களுடன் ஸ்ருஷ்டி செய்கிருனென்ருல், சிலரை ஸுகமுள்ளவர்களாகவும், சிலரை துக்கமுள்ளவர்களாகவும், சிலரை பண்டிதர்களாகவும், சிலரை மந்தர்களாகவும் தானே ஸ்ருஷ்டிப்பதால், பக்ஷபாதம், கருணையின்மை என்ற இரண்டு தோஷங்களுக்கு உட்பட்டவராக, நம்மைப் போல் அவரும் ஆகி, ஈசுவர பதவியையே இழக்க நேரிடும். "நான் எல்லாப் பிராணிகளிடத்திலும் ஸமமாயுள்ளவன், எனக்கு த்வேஷிக்கத் தகுந்தவனுமில்லை, பிரியனும் கிடையாது" என்னும் ஈசுவரனுடைய பிரதிக்ஞைக்கும் பாதகம் நேரிடும். அதுவோ நமக்கு இஷ்டமில்லாத கார்யம். ஒரே தாயார் தகப்பனுர்களிடத்தில் பிறந்த பிள்ளைகளுக்குள் ஞானம் முதலான விஷயங்களில் அநேகவிதமான வித்யாஸங்கள் காணப்படுகின்றன. ஹிரண்யகசிபுவின் புத்திரர்களாகிய ஹ்லாதன், அனுஹ்லாதன், பிரஹ்லாதன் முதலானவர்கள் ஒரேமாதிரி ஸ்வபாவமுள்ளவர்கள் அல்ல. தகப்பன் விஷ்ணு த்வேஷியாயிருந்தாலும், புத்திரன் பிரஹ்லாதன் விஷ்ணு பக்தனுயிருந்தான் என்று புராணங்கள் சொல்லுகின்றன. ஆகையால் ரக்தம் முதலான ஸம்பந்தத்தால் இவ்விதம் ஏற்படுகிறதென்று நிச்சயம்செய்யவும் முடியவில்லை. இனி, ஜனன கால வித்தியாஸத்தால் இவ்விதம் ஏற்படுகிற

தென்று சொல்லுவோமென்றால், அதுவும் யுக்தமில்லை. ஓரே ஸமயத்தில் பிறந்த இரட்டைக் குழந்தைகளிடத்திலும் வித்யாஸத்தை இவ்வுலகில் நேரில் காண்கிறோம். மேலும், இந்திரியங்களுக்குப் புலப்படாத காலத்தை இத்தகைய வித்தியாஸங்களையுண்டாக்கும் காரணமாக எப்படி அறியமுடியும்? பிரத்தியக்ஷத்தினலா, அனுமானத்தினலா, அல்லது சப்தத்தினலா? இந்திரியங்களுக்குப் புலப்படாத விஷயத்தில் பிரத்தியக்ஷத்திற்கே இடமில்லாததினல், இவ்வறிவு பிரத்தியக்ஷத்தினல் ஏற்பட முடியாது. பிரத்தியக்ஷத்தை முன்னிட்டுக் கொண்டுதான் அனுமானம் பிரவிருத்திக்குமாதலால், அனுமானத்தினலும் இல்லை. இனி மூன்றாவது பிரமாணமான சப்தத்தினலும் இருக்க முடியாது. சப்தமானது லௌகிக சப்தமா? அல்லது சாஸ்திரீய சப்தமா? பிரத்தியக்ஷம் முதலான பிரமாணங்களால் தெரியப்பட்டவைகளே லௌகிக சப்தத்திற்கு விஷயமாகக் கூடியதால், பிரத்யக்ஷம் முதலானவைகளுக்கு இடமில்லாத ஸந்தர்ப்பத்தில் லௌகிக சப்தம் பிரவிருத்தியாமல் தூரத் தள்ளுபட்டுப்போவதால், இவ்விஷயத்தில் லௌகிக சப்தம் பிரயோஜனமில்லை. இத்தகைய விஷயத்தில் சாஸ்திரமானது காலத்தைக் காரணமாகக் கொள்ளாததினல் சாஸ்திரீய சப்தமுமில்லை. தவிரவும், அதே காலத்தில் வேறு பக்கத்தில் பிறந்தவனிடம் இத்தகைய குணம் இல்லாததினல், காலத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மை பாதிக்கப்பட்டுவிடுகிறது. ஆகையால், இம்மாதிரி

யான நமது புத்திக்கு எட்டாத விஷயத்தில், "இந்திரி யங்களுக்குப் புலப்படாத விஷயத்தில் சாஸ்திரம் பிரமாணம்" என்கிறபடி, "புண்ணிய கர்மாவினுல் புண்ணியனுகவும், பாப கர்மாவினுல் பாபியாகவும் ஆகிறுன்", "அவரவர்களின் கர்மாவுக்கும் ஞானத்திற் கும் தகுந்தபடி சரீரமெடுப்பதற்காக சில தேஹிகள் பலவித யோனிகளையடைகிருர்கள், சிலர்கள் ஸ்தாவர ஜாதியையடைகிருர்கள்", "அவனை வித்யையும், கர் மாவும், பூர்வ வாஸனையும் துடர்கின்றன", "நல்ல ஆசரணையுள்ளவர்கள் நல்ல ஜன்மாவையும், நிந்திக்கத் தகுந்த ஆசரணையுள்ளவர்கள் நிந்திக்கத் தகுந்த ஜன் மாவையும், அடைகிருர்கள்", "பூர்வ ஜன்மத்தில் ஏற் பட்டிருக்கும் அப்யாஸத்தினுல் இப்பொழுது அவனை அறியாமலே இழுக்கப்படுகிருன்", என்பது முதலான சுருதிகளும் ஸ்மிருதிகளும் சரணமடைய வேண்டியவை களாக ஏற்படுகின்றன.

இந்தப்பிரகாரமாக தம் தம் பூர்வ கர்மத்தை யனுஸரித்து ஸ்தாவரமாகவோ, மிருகமாகவோ, மனுஷ் யனுகவோ, தேவதையாகவோ, ஜன்மத்தையடையும் ஜந்துக்களுக்குள், "புண்ணிய கர்மாவினுல் தேவத் தன்மையையடைகிருன், நிஷித்த கர்மாவினுல் கஷ் டப்படும் சரீரத்தையடைகிருன். புண்யம் பாபம் இரண்டினுலும் மனுஷ்யத் தன்மையை அடைகிருன். எல்லாம் அவன் அவசனுகவே அடைகிருன்" என்று ஸுரேசுவராசார்யார் சொல்லியிருப்பதையனுஸரித்து, தேவத்வமானது கேவலம் புண்ணியகர்மத்தின் பலன்

என்றும், ஸ்தாவரம், மிருகம் முதலிய ஜன்மங்கள் கேவலம் பாப கர்மததின் பலன் என்றும், மனுஷ்ய ஜன்மாவானது புண்ணியம் பாபம் இரண்டும் கலந்த கர்மத்தின் பலன் என்றும், நிச்சயிக்கப்படுகிறது.

## 2. மனுஷியனே அதிகாரி.

இம்மூன்றுக்குள் அதிகமான பாபத்தால் நிரம்பவும் அக்ஞானம் மூடிக்கொண்டு, அதனால் சரீரத்தைத் தவிர வேருக ஆத்மா ஒன்றிருக்கிறதென்கிற ஞானம் இல்லாமையினால், பசு முதலான பிராணிகளுக்கு சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் கர்மாக்களில் அதிகாரம் இல்லை. தேவதைகளுக்கு அத்தகைய ஞானமிருந்த போதிலும், "வேறு தேவதைகளில்லாமையால், தேவதைகளுக்கும் இல்லை" என்று சாபர பாஷ்யத்தில் சொல்லியிருக்கிறபடி, சாஸ்திரத்தில் விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்கள் இந்திரன் அக்னி முதலான தேவதைகளைக் குறித்து ஏற்பட்டிருப்பதாலும், அவர்கள் செய்யும் யாகங்களில் அவர்களை, அதாவது தங்களை உத்தேசித்தே திரவ்யத்தியாகம் செய்வது அஸாத்தியமாகையாலும், திரவ்யத்தியாகம் செய்வதற்கு அவர்களைத்தவிர வேறு தேவதைகள் இல்லாமையினாலும், தேவதைகளுக்கு கர்மத்தில் அதிகாரமில்லையென்பது ஸ்பஷ்டமாகிறது.

இதனாலெல்லாம் ஏற்படுகிறது என்னவெனில், கர்மத்தை விதிக்கும் எல்லா சாஸ்திரமும் மனுஷ்யனையே அதிகாரியாகக் கொள்கிறது என்பதுதான்.

மனுஷ்ய ஜன்மம் ஒன்றுக்குத்தான் கர்மத்திற்கு ஸாத னமாயிருத்தலும், அதற்குப் பலனுயிருத்தலும், ஆகிய இரண்டும் பொருந்தும். மற்ற ஜன்மங்களுக்கெல் லாம், கேவலம் கர்மத்திற்குப்பலனுயிருத்தல் மட்டும் தான் பொருந்தும். இதனுல், ஜீவனுனது முதலில் மனுஷ்ய ஜன்மத்தை அடைந்து, புண்ணியமோ பாபமோ அல்லது இரண்டும் கலந்தோ கர்மாக்களைச் செய்து, அதற்குத் தகுந்த ஜன்மத்தையடைகிற தென்று ஏற்படுகிறது. "மனுஷ்யன், பசு, பக்ஷி, இதரப்பிராணிகள் முதலான எண்பத்திநான்கு லக்ஷம் யோனிகளிடத்திலும், கர்மத்தால் கட்டுண்ட ஜீவன் சுற்றித்திரிந்து பல கஷ்டங்களை அனுபவிக்கிருன். அதில் கடைசியானது மனுஷ்யதேஹம்" என்று சொல் லப்பட்டிருக்கும் வாக்கியமானது, அக்ஞானியான வன் பிராரப்தமாயிருக்கும் பாபங்களின் பலனையனுப வித்து முடிந்த பிறகு மனுஷ்ய சரீரத்தையடைகிருன் என்பதைச் சொல்லவந்தது. பிரஹ்மஹத்தி முதலான மஹாபாபங்களைச் செய்தவர்கள் முடிவில் மனுஷ்ய ஜன்மம் அடைகிருர்கள் என்ற விஷயம், "பிரஹ்ம ஹத்தி செய்தவன் நாய், பன்றி, கழுதை, ஒட்டகை, மாடு, ஆடு, மிருகங்கள், பக்ஷிகள், சண்டாளன், புல் கஸன், இந்த ஜந்மங்களை அடைகிருன்" என்னும் வாக்கியத்தால் சொல்லப்படுகிறது. அதேமாதிரியாக "புண்ணியம் முடிந்ததும் மனுஷ்ய லோகத்தை அடை கிருன்" என்று விசேஷமான புண்ணியங்களைச் செய்த வர்களுக்கும் கடைசியில் மனுஷ்ய லோகப்பிராப்தி

உண்டென்று சொல்லப்பட்டுள்ளது. "கீழே விழுகிற வரையில் வஸித்து, அந்த லோகத்திலிருந்து இந்த லோகத்திற்கு மறுபடியும் கர்மத்திற்காக வருகிறான்," என்னும் வேத வாக்யங்களும் முடிவில் மனுஷ்ய ஜன்மத்தையடைவதாகவே கூறுகின்றன. ஆகையால் இப்பொழுதுதான் நம்மால் இந்த மனுஷ்ய ஜன்மம் அடையப்பட்டிருக்கிறது என்ற பிரமம் வேண்டாம்.

மேற்சொன்ன யுக்தியினாலேயே பிராணிகளிடத்தில் காணப்படும் ஸுக துக்க வித்யாஸங்களுக்கு ஸமாதானம் கூறும்பொழுது, முன் ஜன்மத்தில் செய்த கர்மத்தின் வித்தியாஸத்தை அங்கீகரித்தபடியால், முந்திய முந்திய ஜன்மங்களில் செய்த கர்மங்களை அனுஸரித்து பிந்திய பிந்திய ஜன்மங்களில் பலன் அனுபவிக்கப்படுகிறது என்ற நியாயப்படி, பிறப்பு இறப்பு, பிறப்பு இறப்பு என்றிருக்கும் பிரவாஹ ரூபமான ஸம்ஸாரமானது அநாதி என்று ஏற்படுகிறது. இத்தகைய அநாதியான ஸம்ஸாரத்தில் எண்ணிறந்த மனுஷ்ய ஜன்மத்தையடைந்த நம்மால் என்ன ஸாதிக்கப்பட்டது? ஸுகமே ஸ்திரமாயிருக்கும்படி செய்து கொண்டோமா? துக்கத்தை வேர்ப்பிடுங்காகப் பிடுங்கித் தொலைத்தோமா? இது கலியுகமானதால் கலி புருஷனால் நம் மனது அழுக்கடைந்திருக்கிறதென்று சொல்லிக்கொண்டோமேயானால், கிருதயுகம் முதலான புண்ணிய யுகங்களில் நாம் சரீரத்தை அடையவில்லையா? ஈசுவராம்சர்களான மஹா புருஷர்களை நாம் பார்க்கவில்லையா? இதற்கு கிருதயுகம் வரையில்

தான் போவானேன், இந்த கலியுகத்திலேயே ஈசுவ ராம்சமாக உண்டான மஹான்களை நாம் தர்சிக்க வில்லையா? மஹத்தான ஸங்கடங்களாகிற முதலைக் கூட்டங்களால் அடர்ந்திருக்கிற ஸம்ஸார ஸமுத்திரத் தில் நன்ருக மூழ்கியிருக்கும் ஜனங்களை கரையேற்று வதற்குத் தெப்பக்கட்டை போலுள்ளதும், அமிருதத் தைப்போல் மதுரமாயுள்ளதும், இனிப்பானதுமான அம்மஹான்களுடைய முகாரவிந்தத்திலிருந்து வெளிப் பட்ட வாக்கியங்களை நாம் கேட்கவில்லையா? அப் படிக்கிருந்தும் கிருதார்த்தர்களாகும் தன்மையை அடைந்தோமா? மனம் போனபடியெல்லாம் போகும் போக்கின் வேகத்தைத் தடுத்தோமா? அவர்கள் கூறிய வழியை நம்மால் கூடியமட்டில் அனுஸரித் தோமா? அப்படியெல்லாம் ஒன்றும் செய்யாமல் ஸதாஸர்வகாலமும் பிறந்தமேனிக்கு இருந்துகொண்டு ஸ்வர்ண ஆசை பிடித்து நாலா திக்குகளிலும் ஓடித் திரிந்தோம். நமக்கு ஏற்பட்ட ஜாதி, நீதி, குலம், ஆசிரமம், ஒன்றையும் கவனியாமல் இஷ்டப்படி அலைந்தோம். கோபத்தினல் சீறிக்கொண்டிருக்கும் ஸர்ப்ப ராஜனுடைய படத்தின் நிழலுக்கு ஸமமான நிழலோடு கூடிய விஷயங்களை, ஸுகத்தைக் கொடுக் கக்கூடியவைகள் என்று எண்ணி அண்டினேம். ஸாக்ஷாத் பகவானுடைய வாக்கியத்தை நேரில் கேட்டும் யாதொரு பயனுமடையாத துர்யோதனன் கக்ஷியில் சேர்ந்தவர்களாக ஆனேம்.

## 3. மனிதன் ஏன் மேலானவன்?

இந்தப் பிரகாரம் யதேச்சையாய் திரிந்துகொண் டிருந்தோமேயானுல், எவ்வாறு நமக்கு பந்தத்திலிருந்து நிவிருத்தியுண்டாகும்? எவ்விதம் நமக்கு சாசுவத மான ஆனந்தம் கிட்டும்? எதற்காக நாம் இந்த மனுஷ்ய ஜன்மத்தை அடைந்தது? "மனுஷ்ய ஜன் மத்தை யடைந்து எவர்கள் ஞானியாகவில்லேயோ, அவர்கள் பசுவாயிருத்தலே மேலாம். ஏனெனில், அவைகளுக்கு தோஷமென்பதும் பிராயச்சித்தம் என் பதும் கிடையாது," "ஏராளமான புண்ணியத்தைக் கிரயமாகக் கொடுத்து, இந்த சரீரமென்ற ஓடமானது உன்ஞல் வாங்கப்பட்டிருக்கிறது; அது உடைந்து போவதற்குள் துக்க ஸமுத்திரத்தைத் தாண்டி அக் கரை போய்ச்சேர்," "எவனெருவன் அடைவதற்கரி தான மனுஷ்ய தேஹத்தை அடைந்து, அதிலும் புருஷ ஞகவும் பிறந்து தனக்கு ஆகவேண்டிய கார்யத்தில் கவனமில்லாமல் ஆலஸ்யமாக இருந்து விடுகிருனே, அவனேக்காட்டிலும் பெரியமுட்டாள் யார் இருக்கி ருர்?" என்பது முதலான வசனங்களே கவனிக்கும் போது துக்க ஸமுத்திரத்தின் அக்கரை பிரஹ்மமே யாகும். இப்பொழுது நாம் விரும்பியடைகிற ஸுக மும் தாத்காலிகமாயிருக்கும் துக்க நிவிருத்தியும் பசு முதலானவைகளுக்கும் நமக்கும் ஸமானமாதலால், இவைகளே நமக்கு பரமப்பிரயோஜனமாயிருந்தால், பசு முதலானவைகளேக்காட்டிலும் நமக்கு ஒருவித விசேஷமும் இருக்காது. நமது ஆசார்ய பகவத்பாதர்

அவர்களும் "எவ்விதம் சப்தம் முதலானவைகள் காது முதலான இந்திரியங்களில் ஸம்பந்தப்படும்பொழுது, பசு முதலான பிராணிகள் அந்த சப்தம் முதலானவைகள் பிரதிகூலமானவை என்று அறிந்தால் அவைகளினின்று விலகியும், அனுகூலமானவை என்று அறிந்தால் அவைகளை அணுகியும், செல்லுகின்றனவோ; எவ்விதம் பசுக்கள் கையில் தடியை ஏந்திக்கொண்டிருக்கும் புருஷனை எதிரில் கண்டதும், இவன் தன்னை அடிக்கவருகிறான் என்று ஓடவாரம்பிக்கின்றனவோ; கை நிறைய பசும்புல்லுள்ளவனைக்கண்டால் அவனை அணுகிச்செல்லுகின்றனவோ, அவ்வாறே புருஷர்களும், எவ்வளவு படித்தவர்களாக இருந்த போதிலும், பயங்கரமான பார்வைகளுடன் கூடிய பலிஷ்டர்களை ஒரு க்ரோச தூரத்திற்கப்பால் கண்டமாத்திரத்தில் அவ்விடமிருந்து விலகுகிறார்கள், அவ்விதமில்லாதவர்களை எதிர்நோக்கிச் செல்லுகிறார்கள்" என்று சொல்லி ஆத்ம ஸாக்ஷாத்காரமில்லாதவர்களை பசுவிற்கு ஸமானமாகக் கருதுகிறார்கள்.

பிராணிகளுக்குள் மனுஷ்யர்களை மிகவும் சிரேஷ்டமாகச் சொல்லியிருக்கிறது. "ஜீவ ஜந்துக்களுக்குள் பிராணிகள் சிரேஷ்டமானவைகள், பிராணிகளுக்குள் புத்தியினால் பிழைக்கிறவர்கள் சிரேஷ்டமானவர்கள், புத்தியுள்ளவர்களுக்குள் மனுஷ்யர்கள் சிரேஷ்டர்கள், மனுஷ்யர்களுக்குள் பிராஹ்மணர்கள் சிரேஷ்டர்களாக எண்ணப்படுகிறார்கள். பிராஹ்மணர்களுக்குள் வித்வான்களும், வித்வான்களுக்குள் நிச்சய புத்தி

(ஆத்மஞானம்) உள்ளவர்களும், சிரேஷ்டர்கள்" என்று சொல்லியிருப்பதால், பசுக்களுக்கும் நமக்கும் ஸமானமாயுள்ள ஸுகமும் துக்க நிவிருத்தியும் மாத்திரமே நாம் அடையும் பிரயோஜனம் என்று இருந்தால், மேற்கூறிய சிரேஷ்டத்தன்மை எவ்விதம் பொருந்தும்? புத்தியினால் பிழைக்கும் தன்மை என்பதில் இரண்டிடத்திலும் விசேஷமில்லை. மிகவும் பலத்தோடு கூடிய யானை முதலான மிருகங்களை தன்னுடைய புத்தியினால் வசப்படுத்துவதால், மனுஷ்யர்களுக்கு சிரேஷ்டத்தன்மை வாய்ந்துள்ளது என்போமானால், தன்னுடைய மனதையே வசப்படுத்திக்கொள்ள முடியாதவன் இதரர்களை வசப்படுத்துவது என்பது, சாம்பலில் செய்யும் ஆஹுதியையே ஒக்கும். மேலும், இத்தகைய பலத்தோடு கூடிய மிருகங்களை அடக்கும் ஸாமர்த்தியம் பிராஹ்மணரல்லாதவர்களிடத்திலேயே அதிகமாகக் காணப்படுகிறபடியால் பிராஹ்மணர்களுக்கு சிரேஷ்டத்தன்மை எவ்வாறு கிடைக்கும்? ஆதலால், சாஸ்திரத்தின் அர்த்தத்தை நன்கு அறிந்து, சாஸ்திரத்தில் சொல்லியிருக்கும் கர்மாக்களை நன்கு செய்து, அதில் விலக்கிய கர்மாக்களை தூரத் தள்ளி, இஷ்டப்படிக்கு ஸுகத்தை ஸம்பாதித்துக் கொள்ளவும், எல்லா துக்கத்தையும் அடியோடு பரிஹரித்துக் கொள்ளவும், ஸாமர்த்தியம் மனுஷ்யர்களுக்குத்தான் இருக்கிறது என்ற இந்த அபிப்பிராயத்தைக்கொண்டே மேற்கூறிய பிரமாணங்கள் பிரவிருத்தித்திருக்கின்றன. இத்தகைய சாஸ்திரங்

கள் பிராஹ்மணர்களுடைய அதீனமாயிருப்பதால், பிராஹ்மணர்களே மற்றவர்களைக் காட்டிலும் சிரேஷ்டர்களென்பது மிகவும் பொருந்துகிறது. மனுஷ்ய ஜன்மத்தையும் அடைந்து சாஸ்திரத்தில் விதித்திருப்பதைச்செய்யாமல், நிந்தித்திருப்பதையும் ஒருவன் செய்வானேயாகில், அப்பொழுது கர்மத்தில் அதிகாரம் பெறுமலிருக்கிற பசுவே அவனைவிட சிரேஷ்டம் என்று முன்னமேயே சொன்னோம். ஏனெனில், பசுக்களுக்கு தோஷமும் பிராயச்சித்தமும் கிடையாது. மேலும், உலகத்தில் விதிவிலக்குகளெல்லாம் மனுஷ்யனுக்குத்தான். பசு முதலானவைகளுக்குக் கிடையாது. ராஜகீய அதிகாரிகள் துஷ்டனை மனுஷ்யனை தண்டிப்பதுபோல், துஷ்டப்பசுவை தண்டிப்பதில்லையல்லவா? தண்டனையென்பது ஏற்பட்டிருக்கும் தோஷத்தைப் போக்கடிப்பதற்குத்தானே? பசுக்களை எவ்வளவு தண்டித்தாலும் தன் தோஷத்தை விலக்கிக் கொள்ள அவைகளுக்கு சக்தியில்லையல்லவா? சாஸ்திரமும் பசு பிராஹ்மணன் முதலானவர்களைக் கொன்ற புலி முதலான துஷ்ட ஜந்துக்களுக்குப் பிராயச்சித்தம் விதிக்கவில்லையல்லவா? ஆதலால், விதிவிலக்கு சாஸ்திரங்களெல்லாம் பொதுவாக மனுஷ்யனைக்குறித்தே ஏற்பட்டிருக்கின்றன.



# அத்யாயம் 7.

## மானிடர் கடமை

### 1. ஸுக துக்க ஸாதனங்கள்.

எது ஹிதாஹிதங்களைப் போதித்து நம்மை சுயேச்சையாக கார்யங்களைச் செய்யவிடாதோ, அது தான் சாஸ்திரம் என்று சொல்லப்படுகிறது. ஒவ்வொரு பிராணிக்கும், ஹிதத்தை ஸம்பாதித்துக் கொள்கிற விஷயத்திலும் அஹிதத்தை நிவிருத்தி செய்துகொள்கிற விஷயத்திலும் ஸ்வபாவமாகவே பிரவிருத்தி ஏற்பட்டிருப்பதால், அந்த விஷயத்தில் சாஸ்திரம் என்ன செய்யக்கிடக்கிறது என்று தோன்றலாம். நாமாகவே, ஹிதம் இன்னதென்றும் அஹிதமின்னதென்றும் அறிந்து, ஹிதத்தை ஸம்பாதிக்கவும் அஹிதத்தைவிடவும் நமக்கு ஸாமர்த்தியமிருந்தால், சாஸ்திரங்கள் ஏற்பட்டே இருக்கமாட்டா. உலகத்தில், மனுஷ்யர்களுக்கு இஷ்டமான அல்ப விஷயங்களைக்கூட தங்கள் புத்தியினுல் தங்களிஷ்டம்போல ஸம்பாதித்துக்கொள்ள ஸாத்தியப்படுகிறதில்லை என்பது அனுபவத்தில் நிச்சயமாகிறது. அப்படியிருக்க ஹிதாஹிதங்களைப் போதிக்கிற சாஸ்திரங்களினுல் மஹான்கள் அனுக்கிரஹிக்காமல் இருந்திருந்தால், லோகாந்தரத்தில் அடையக்கூடிய ஸுகத்திற்குள்ள ஸாதனங்களை தங்கள் புத்தியைக் கொண்டு எப்படி நிச்சயித்து அந்த ஸுகத்தை மனுஷ்யர்கள் எப்படித் தான் அடையமுடியும்?

இந்த விஷயத்தை நன்ருய் விசாரம் செய்தால், மனுஷ்யன் தன் புத்தியினுல் தனக்குவேண்டிய ஸுகத்தை ஸம்பாதித்துக்கொள்ளவும் துக்கத்தை நீக்கிக்கொள்ளவும் ஸாத்தியப்படமாட்டாது என்று லோகானுபவம் கொண்டே அறியலாம். "மூவுலகி லும் யாரும் ஸௌக்கியத்தை உத்தேசித்தே யத்தினம் செய்கிருர்கள், யாரும் துக்கத்தை உத்தேசித்து யத்தினம் செய்வதே கிடையாது" என்று பெரியோர்கள் சொல்லியபடி, எல்லாக்காலங்களிலேயும் ஸுகம், துக்க நிவிருத்தி இவைகளுக்காகப் பிரயத்தினம் செய்கிற புருஷன் தன்னுடைய பிரயத்தினத்திற்குத் தகுந்த ஸுகத்தை அனுபவிக்கவேண்டியதல்லவா? அப்படி அனுபவத்தில் காணுததினுல், அந்த விஷயத்தில் காரணம் தேடவேண்டியது அவசியம். ஒரு கார்யத்தை உத்தேசித்து ஸாதனத்தை நன்ருய் அனுஷ்டித்தும் அந்தக்கார்யம் ஸித்திக்கவில்லை என்பது விரோதம். மனிதர்களுக்குள் அவர்களால் செய்யப்படும் யத்தினத்தினுல் சில வேளை ஸுகமும் அடைகிருர்களே, சிலவேளை துக்க நிவிருத்தியும் ஏற்படுகிறதே என்ருல், எப்பொழுதும் ஸுகத்திற்காகவே யத்தினம் செய்கிற மனுஷ்யன் எக்காலத்திலும் ஸுகத்தையனுபவிக்காமல் ஏதோ ஒரு காலத்தில் கார்யம் ஸித்தித்த மாத்திரத்தால் அவனுக்கு எல்லாகாலத்திலும் ஸுகம் அனுபவிக்க வேண்டுமென்கிற ஆசை எப்படி பூர்த்தியாகும்? எப்பொழுதும் ஸுகத்திற்காக பிரயத்தினப் படும்பொழுது, என்ன காரணத்தினுல் ஏதாவதொரு

ஸமயம் மாத்திரம் அது கிடைக்கிறது? ஏதோ ஒரு காலத்தில்மட்டும் ஏற்படும் ஒரு அல்ப ஸுகத்தை, மனிதனுல் செய்யப்படும் மஹாப்பிரயத்தினத்திற்குப் பிரயோஜனமாகச் சொல்லுவது உசிதமா? அதுவும், இவன் இப்பொழுது செய்த பிரயத்தினத்தின் பலன் தான் என்பது நிச்சயம் தானு? ஒரு கார்யத்தை உத்தேசித்துச்செய்த பிரயத்தினத்தையே வேருெரு காலத்தில் செய்தால் அதே ஸுகத்தை அடைவான் என்பது நம்புவதற்கில்லை. அப்படிச்செய்யும் பிரயத்தினத்திலுல் துக்கமே வந்தாலும் வரலாம். அது எப்படி என்ருல், ஒரு வியாபாரி ஆரம்பத்தில் விசேஷ அனுபவமில்லாமல் வியாபாரம் செய்து லாபத்தை அடைகிருன். அதே மனுஷ்யன் நாளடைவில் வியாபாரத்தில் விசேஷ அனுபவத்தை அடைந்தும் கூட அதே வியாபாரத்திலுலேயே மற்ருெரு ஸமயத்தில் அதிக நஷ்டத்தை அடைகிருன். இந்த வியாபாரம் மாத்திரமே வரும்படிக்குக் காரணமாயிருந்தால் துவக்கத்தில் விருத்திக்கும் முடிவில் ஒடுக்கத்துக்கும் காரணம் என்ன? "பூமியை ஒரே மாதிரிதான் உழுகிருர்கள். சாஸ்திரங்களை ஒரே மாதிரிதான் அப்பியாஸம் செய்கிருர்கள். ஆனுல் தைவமென்ற ஒன்றின் சேஷ்டையால் சிலர்கள் மேல் கிளம்புகிருர்கள். சிலர்கள் அமிழ்ந்து விடுகிருர்கள்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆதலால், ஸுகத்திற்கும் துக்க நிவிருத்திக்கும் ஸாதனம் இன்னதென்று சாஸ்திரம் அன்னியில் நம்மால் அறியப்படுவது முடியாத கார்யம். உலகத்தில்

சாஸ்திரத்தை அனுஸரிக்காத மனுஷ்யன் ஒருவன் இது தான் ஸுகத்திற்கும் துக்க நிவிருத்திக்கும் ஸாதனமென்று தானாகவே தீர்மானம் செய்திருக்கிறதாகத் தெரியவில்லை. அப்படிச்செய்திருந்தால், அந்த ஸாதனத்தைக்கொண்டு ஸுகத்தையே அனுபவிப்பார்களே தவிர ஒருகாலத்திலும் துக்கப்படமாட்டார்கள். ஆகையால் ஸுகம், துக்க நிவிருத்தி இவைகளுடைய உபாயங்களை சாஸ்திர மூலமாக அறிய வேண்டியதே தவிர ஸ்வய புத்தியினால் அறியமுடியாதென்பது ஸித்தம்.

## 2. ஸ்வரூப ஸுகம்.

பிரத்யக்ஷம், அனுமானம், லௌகிகசப்தம், இம்மூன்று பிரமாணங்களும் எல்லா ஜனங்களுக்கும் ஸாமான்யமாகையால், இந்தப் பிரமாணங்களாலேயே ஸுகத்துக்கும் துக்க நிவிருத்திக்கும் ஸாதனங்கள் இன்னவை என்று தெரிந்து கொள்வது ஸாத்தியமாயிருந்தால், அந்தப் பிரமாணங்களில் மிகவும் ஸமர்த்தர்களாயுள்ளவர்களால் அத்தகைய ஸாதனங்கள் அவசியம் சொல்லப்படவேண்டும். சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம், இவ்வைந்துமே ஸுகத்திற்குக் காரணம் என்று அவர்களால் நிர்த்தாரணம் செய்யப்பட்டும் சொல்லப்பட்டும் இருக்கிறது என்றால், அந்த விஷயத்தில் கொஞ்சம் விசாரம் செய்து பார்ப்போம். அவைகள் ஐந்தும் சேர்ந்து ஸுகத்திற்கு காரணமா? ஒவ்வொன்றும் தனித்தனியே ஸுகத்திற்குக் காரணமா? முதல் பக்ஷம் இருக்கமுடியாது. ஏனென்

ருல், இவ்வைந்திற்குள் ஒவ்வொன்றையும் தனித் தனியே அனுபவிக்கிற காலத்திலேயும் ஸுகானுபவம் ஏற்படுகிறதினுலும், ஒவ்வொன்றையும் நாம் தெரிந்து கொண்டபிறகே ஸுகம் ஏற்படுகிறதால் ஏககாலத் தில் ஐந்தினுடைய ஞானம் ஏற்படாததினுலும், ஐந்தும் சேர்ந்து ஸுகத்திற்குக்காரணம் என்று சொல்லமுடியாது. தனித்தனியே ஸுகத்திற்குக் காரணமாயிருக்கலாம் என்ருல், அதுவுமில்லை. ஏன் என்ருல், மனிதனுக்கு துக்க காலத்தில் அவைகள் ஸுகத்தைக் கொடுக்காதபடியினுலும், அதற்கு நேர் விரோதமாக வெறுப்பை உண்டுபண்ணுகிறதினுலும். கவலைகளால் மிகக்கலங்கியுள்ள மனதையுடையவன் வீணைகானம் முதலானதை விரும்புகிறதில்லை, அதில் வெறுப்பையும் அடைகிருன். உண்மையான ஸுக காரணத்தில் வெறுப்புண்டாகிறது சரியல்ல. ஸுகத் திற்குக்காரணமென்று இப்பொழுது பிரஸ்தாபித்துக் கொண்டிருக்கிற விஷயங்கள் யாதொன்றுமில்லா மலேயே, ஸுஷுப்திகாலத்தில் துக்க ஸம்பந்தமில் லாத ஸுகத்தை அனுபவித்து வருவதால், விஷயங்கள் சேர்ந்தாவது, தனித்தனியாகவாவது, ஸுகத்திற்குக் காரணமில்லை என்பது தெளிவாகிறது. கார்யம் உண் டாவதற்கு முந்தி எது அவசியமாக இருந்தே தீரவேண் டுமோ, எது இல்லாமலிருந்தால் கார்யம் உண்டாகிற தில்லையோ, அதுவேதான் காரணம் ஆகும். மேலே சொன்னபடி பிரியமான வஸ்துவின் வியோகம் முத லான காரணங்களால் ஏற்பட்ட துக்கத்தை அனுப

விக்கும் காலத்தில் சப்தாதி காரணங்கள் இருந்தும் ஸுகரூபமான கார்யம் உண்டாகாததினுலும், இந்த காரணங்கள் இல்லாமலிருந்தாலும் ஸுஷுப்தி ஸமாதி இவைகளில் நிரதிசயமான ஸுகரூப கார்யம் உண்டாகிறதினுலும், சப்தாதி விஷயங்களுக்கு ஸுகத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மை எப்படி பொருந்தும்? "அக்ஞானிகளுக்கு ஸுஷுப்தி காலத்தில் தோன்றுவது நிரதிசயமான துக்கத்தின் கலப்பில்லாத, ஆனந்தம். இத்தகைய நிராமயமான ஆனந்தம் இல்லாவிடில் யார்தான் சேஷ்டிப்பான்? யார் தான் ஜீவிப்பான்?" என்று விஷயானந்தத்தைக்காட்டிலும் ஸுஷுப்தி காலத்திய ஆனந்தத்திற்குச் சிறப்பு கூறப்பட்டிருக்கிறது. ஸுகத்திற்குக் காரணங்களாக த்தெரிந்து கொண்டிருக்கும் எல்லா விஷயங்களையும் ஒதுக்கித்தள்ளிவிட்டு ஸுஷுப்தியை ஜனங்கள் அபேக்ஷிக்கிறுர்கள் என்பது எல்லோருக்கும் தெரிந்த விஷயமே. மேலும், நன்ருய் தூங்கிக்கொண்டிருக்கிற மனுஷ்யனை அவனுக்கு மிகவும் பிரியமுள்ளவர்கள் எழுப்பினுலும் அவர்கள் விஷயத்தில் அவனுக்குக் கோபம் உண்டாகிறதைப் பார்க்கிறேமல்லவா? இதனுலேயும் அந்தக் காலத்தில் விஷய ஸம்பந்தமில்லாமல் தோன்றும் ஸுகம் மிகவும் சிரேஷ்டமானது என்பது நன்ருய் விளங்கும்.

ஸுஷுப்தி காலத்தில் விஷய ஸம்பந்தமில்லாமல் ஸுகானுபவம் ஏற்பட்டாலும், அந்த ஸுகம் அக்ஞானத்துடன் கலந்திருக்கிறதாகவே சாஸ்திரஸித்தாந்

தம். இம்மாதிரி அக்ஞானத்துடன் சேர்ந்திருக்கிற ஸுஷுப்தி ஸுகமானது விஷய ஸம்பந்தமில்லாமையி ஞல் லௌகிக ஸுகத்தைக்காட்டிலும் மேலான தென்று சொல்லும் பக்ஷத்தில், திரைபோல் மூடிக் கொண்டிருந்த அக்ஞானமானது ஆத்ம ஸாக்ஷாத் காரத்திஞல் விலக்கப்பட்டு ஸமாதிகாலத்தில் ஏற்படும் ஸ்வரூப ஸுகத்தின் மேன்மையையும் எல்லையில்லாத் தன்மையையும் சொல்லவும் வேண்டுமோ? மேகங்க ளால் மூடப்பட்ட ஸூர்யப்பிரகாசமே சந்திராதிப் பிரகாசங்களைக் காட்டிலும் அதிகமென்று ஏற்பட்டி ருக்கும்போது, மேகங்களால் மூடப்படாத ஸூர்யனு டைய பிரகாசத்தைப்பற்றிக் கேட்பானேன்? ஆகை யால் நம்முடைய ஸ்வரூபமே ஸுகமாதலால் அது நம் மிடம் எப்பொழுதும் ஸித்தமாயிருந்தும்கூட அதை அறியாமல், வீட்டினுள்ளிருக்கும் புதையலை யறியாத தரித்திரன்போல, நாம் வெளியிலுள்ள விஷயங்களில் ஸுகமிருப்பதாக எண்ணி மோஹிக்கிருேம் என்பதில் கொஞ்சமேனும் ஸந்தேஹமில்லை.

### 3. விஷயஸுகம் ஸுகமேயல்ல

மேற்சொன்ன பிரமாணங்களும் யுக்திகளும் தவிர வேறே யுக்திகளாலும் சப்தாதி விஷயங்கள் ஸுகத் திற்குக் காரணமாகமாட்டாதென்று அறியலாம். "விஷயம்" என்ற பதத்தின் அர்த்தத்தை விசாரித் தாலே "எது விசேஷமாக கட்டுப்படுத்துகிறதோ அதுவே விஷயம்" என்று ஏற்படுகிறது. இதே அர்த்-

த்தை "சப்தம் முதலான ஐந்து விஷயங்களுக்குள் ஒவ்வொரு விஷயத்தை ஸுகத்திற்கு காரணமென்று பிரமித்து அதில் அகப்பட்ட மான், யானை, விட்டில், மீன், வண்டு, இவைகள் துக்கப்படுகிறபோது, ஐந்து விஷயங்களுமே ஸுகத்திற்குக்காரணம் என்று பிர மித்து அவைகளில் அகப்பட்டிருக்கிற மனிதனுக்கு ஸுகம் எப்படிக்கிடைக்கும்?" என்று ஸ்ரீமத் பகவத் பாதாள் விவேக சூடாமணியில் சொல்லியிருக்கிறார் கள். ஆகையால் மனிதர்கள் நன்றாய் விசாரம் செய் யாமல், துக்கத்திற்குக் காரணங்களாக இருப்பவை களை ஸுகத்திற்குக் காரணங்கள் என்று பிராந்தி கொண்டு, அந்த விஷயங்களை ஸம்பாதிக்க யத்தினம் செய்கிறார்களே தவிர விசாரம் செய்து ஸுகத்தின் வாஸ்தவமான ஸாதனம் இன்னதென்று அறிந்து அதை ஸம்பாதிக்க யத்தினம் செய்வதில்லை.

மேலும், ஸுகம் என்பது இன்னதென்று அறியா மல், சப்தாதி விஷயங்களை விரும்பி, அந்த விருப்பத் தைப்பூர்த்தி செய்வதையே ஸுகம் என்று நினைத்து, யத்தினம் செய்கிறது லோக ஸித்தமாயிருக்கிறது. பர்த்ருஹரியும் இதையே "தாகத்தினால் நாக்கு வறண்டுபோனவன் குளிர்ந்த மதுரமாயுள்ள ஜலத் தைப்பானம் செய்கிறான். பசியினால் பீடிக்கப்பட்ட வன் பருப்பு முதலியது கலந்த நல்ல அன்னத்தை சாப்பிடுகிறான். காமாக்னியால் தஹிக்கப்படுபவன் ஸ்திரீயை கெட்டியாய் ஆலிங்கனம் செய்து கொள்ளு கிறான். இப்படி அவ்வப்பொழுது உண்டாகும் வியா

திக்குச் செய்யும் சமனத்தை ஸுகமென்று தப்பாகக் கருதுகிறார்கள்" என்று எடுத்துக்காட்டியிருக்கிறார். வாஸ்தவத்தில் குளிர்ந்ததும் மதுரமாயுமுள்ள ஜலத்தைக் குடித்தல் முதலானவைகளே ஸுகத்தை உண்டு பண்ணுவனவாயிருந்தால், எப்பொழுதும் ஸுகத்தை விரும்புகின்றவர்கள் அந்தந்த ஸாதனங்களை எப்பொழுதும் அனுஷ்டானம் செய்துகொண்டு, ஸுகத்தில் போதும் என்ற எண்ணம் இல்லாமலே, இருக்க வேண்டும். அப்படிச்செய்து விட்டால், அவைகளே இதற்கு முன் இல்லாத அநேக ரோகங்களை உண்டாக்குவது லோகப்பிரஸித்தமே. எப்படி பகவானை தியானம் செய்தல் முதலான கார்யங்களை அதிகமாகச் செய்யச்செய்ய அதிகமான ஸுகத்திற்குக் காரணமாகிறதோ, அப்படியே விஷயங்களையும் அதிமாக அனுபவிக்க அனுபவிக்க ஸுகமும் அதிகமாக வேண்டியது அவசியமாயிருக்க, அதற்கு மாறுதலாக துக்கத்திற்குக்காரணமாக ஏன் அது ஆகிறது? என்று கேட்போமேயானால், எதிர்கக்ஷிக்காரன் பதிலுரைக்க மாட்டாமல் ஊமையாகவே இருக்க வேண்டிவரும். அதுவே நாம் முன் சொல்லிய அர்த்தத்தை உறுதிப் படுத்துகிறது.

## 4. ஞான ஸாதனங்கள்.

எப்பொழுதும் ஆத்மாவினிடத்தில் லயித்தவர்கள், விஷயத்தில் மனதைச் செலுத்தாதவர்கள், என்பது தெரிந்த விஷயமே. ஆகையால் சுருதியில் காண்பிக்கப்பட்டிருக்கும் திருஷ்டாந்தத்தை அனு

ஸரித்து ஆத்ம ஸ்வரூபம்தான் ஸுகம் என்று ஒப்புக் கொள்ளவேண்டியது அவசியமாதலால், அந்த ஆத்ம ஸ்வரூபத்தை மறைக்கும் அக்ஞானத்தை நிவிருத்தி செய்து கொள்ளாமல் ஆத்மலாபம் உண்டாகமாட்டா தாகையால், அந்த அக்ஞான நிவிருத்திக்காக யத்தினம் செய்யவேண்டியது புருஷனுடைய கடமை. ஞானத்தைத்தவிர்த்து வேறொன்றுக்கும் அக்ஞானத்தைப் போக்கடிக்கும் யோக்கியதை இல்லாததாலும், இப்பொழுது எல்லோரிடத்திலுமுள்ள வெறும் ஆத்ம ஞானத்தால் அது நிவிருத்தியாகாததினாலும், சாஸ்திரத்தாலுண்டான பரோக்ஷஞானவான்களுக்கும் பசு முதலிய பிராணிகளுக்கும் விசேஷமில்லாததினாலும், நித்யமாயும் சுத்தமாயும் புத்தமாயும் முக்தமாயும் உள்ளதும் பிரத்யகாத்மாவைக் காட்டிலும் வேறில்லாததும் அத்விதீயமாயுமுள்ள பிரஹ்ம தத்வத்தின் ஸாக்ஷாத்காரம் தான் அக்ஞான நிவிருத்திக்குக்காரணமென்று "तमेव विदित्वा अतिमृत्युमेति" முதலான நூற்றுக் கணக்கான சுருதிகள் கோஷிக்கின்றன.

அந்த ஞானத்தை எவ்வாறு ஸம்பாதிக்கலாமென்றால், சிரவணம், மனனம், நிதித்யாஸனம் இவைகளை அதற்குக்காரணமாக சுருதியானது தாயாரைப்போல் விதித்துச்சொல்கிறது. "ஸன்யாஸம் செய்து கொண்டு சிரவணம் செய்யவேண்டும்" என்னும் வாக்கியத்தால் சிரவணம் என்பது ஸன்யாஸத்துக்குப் பிந்திய காலத்தியதாகத் தெரிகிறது. "எந்த தினத்தில் வைராக்யம் ஏற்படுகிறதோ, அந்த தினத்திலேயே

ஸன்யாஸம் செய்துகொள்ளவேண்டும்" என்று சொல்லியிருப்பதால், வைராக்யம் வந்த பிறகுதான் ஸன்யாஸத்திற்குக் காலம் என்று ஏற்படுகிறது. ஆகையால் சிரவணம் செய்வதற்காக ஏற்படும் ஸன் யாஸத்திற்கு "விவிதிஷா ஸன்யாஸம்" என்று பெயர். நமக்கு விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்களை ஈசுவரார்ப் பண புத்தியோடு அனுஷ்டித்தால், அவ்வித அனுஷ்டா னமே "விவிதிஷா" அதாவது ஞானம் அடையவேண்டு மென்ற ஆசைக்கு ஸாதனமென்று "तमेतं ∗.. ब्राह्मणा विविदि-षन्ति" என்ற வாக்கியத்தினுல் தெரியவருகிறது. எவ் வாறு தீவ்ரமான பசியுள்ளவன் சாப்பாட்டைத் தவிர வேமுென்றையும் அபேக்ஷிக்கிறதில்லையோ, சாப்பாட் டிலும் தாமதத்தை ஸஹிக்கிறதில்லையோ, அவ்வாறே பிறப்புக்குக் காரணங்களான கர்மாக்களில் மிக வெறுப்பும், ஞான ஸாதனங்களான சிரவணம் முத லான கர்மாக்களில் அதிகவேகமும், எவனுக்கு ஏற்படு கிறதோ அவனுக்கே "விவிதிஷா" ஏற்பட்டதாகக் கொள்ளவேண்டும். அத்தகைய விவிதிஷையுள்ள வனுக்கே ஞான ஸாதன விசாரத்துக்கு ஸாதனமான ஸன்யாஸத்தில் அதிகாரம் ஏற்படும். அத்தகைய விவிதிஷையானது பார்க்கப்படுவதும் கேட்கப்படுவது மான விஷயங்களில் அசைவற்ற வெறுப்பன்னியில் ஏற்படாது. ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்யப்படு கிற சாஸ்திரீயமான கர்மாக்கள் பாபக்ஷயம் என்று சொல்லப்படும் சித்தசுத்திமூலமாக வைராக்யத்திற் குக்காரணமாகின்றன என்று "தர்மத்தினுல் பாபத்

தைப்போக்குகிறுன்", "யோகிகள் ஆத்ம சுத்திக்காக ஸங்கத்தைவிட்டு கர்மத்தைச்செய்கிறுர்கள்" என்னும் வாக்கியங்கள் சொல்கின்றன. இந்த சுருதி ஸ்மிருதிவாக்கியங்களால் தர்மத்திற்கு பாபத்தைப் போக்கடிக்கும் தன்மை உண்டென்று தெரிகிறது. பாபத்தால் அழுக்கடையாத சித்தத்தை உடையவனுக்கே வஸ்துதத்வத்தை விசாரம் செய்வதில் ஸாமர்த்தியம் ஏற்படும். பாபத்தைத் தொலைத்த மனுஷ்யனுக்கு வஸ்துதத்வ விசாரத்தால் ஏற்படக் கூடிய, தேகம் முதல் பிரஹ்மா வரையிலுள்ள அநித்தியங்களான அனுபவிக்கக்கூடிய வஸ்துக்களினிடத்தில் வைராக்யமானது ஸுலபமாகக் கிடைக்கிறது.

## 5. மனிதனே ஞானத்தில் முக்கிய அதிகாரி.

ஆதலால், கர்மத்தில் அதிகாரமுள்ளவனுன மனுஷ்யனுலேதான் சாஸ்திரத்தில் விதித்திருக்கிற கர்மாக்களை சரிவரச் செய்து, சித்தத்தை நன்ருக சுத்தி செய்துகொண்டு, விஷயங்களில் விரக்தியடைந்து, கர்மாக்களை விட்டுவிட்டு, ஆத்மவிசாரம் ஒன்றிலேயே ஆஸக்தியாயிருக்கும் தன்மையை அடைந்து, சிரவண மனன நிதித்யாஸனங்களை அப்யஸித்து, ஆத்மாவை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் ஸாக்ஷாத்கரித்து, அஞ்ஞானத்தை முறித்து, சாசுவதமான ஆனந்தத்தை அடையக்கூடும். கொஞ்சமேனும் அறிவில்லாத பசு பக்ஷி மிருகாதிகளும், நிரந்தரமான விஷய ஸுகானுபவத்தால் வைராக்யமேற்படாதவர்களான தேவர்

களும், கர்மத்தில் அதிகாரிகள் இல்லாதபடியால், அவர்களால் மேலே சொன்னபடி படிப்படியாய் யத்தினம் செய்து ஆத்மானந்தத்தை அனுபவிக்க முடியாது. ஆகையால்த்தான் மனுஷ்யஜன்மம் சிலாக்கியமென்று பிரமாணங்களால் கொண்டாடப்படுகிறது. அதிலும் கீழான ஜன்மத்தையடைந்தவர்கள் தங்களுக்கு மேலான ஜன்மத்தை யடைந்தவர்களிடத்திலும் தெய்வத்தினிடத்திலும் பக்தி செய்தால், மேன்மேலும் உயர்ந்த ஜன்மாவை அடைந்து அதன் மூலமாக மேற்கூறிய ஸகலவிதமான ஞான ஸாதனங்களான ஸாமக்ரியைகளையும் ஸம்பாதித்து முடிவில் ஞானத்தை அடைகிறதற்கு சக்தர்கள் ஆகிறார்கள்.

இவ்விதமாக, துக்கத்திற்கு தேகம் உண்டானதே காரணமாதலாலும், தேகமும் கர்மாயத்தமாயிருப்பதாலும், கர்மாவானது ராக த்வேஷங்களுக்கு அதீனமானதாலும், ராக த்வேஷங்கள் சோபனமாயும் அசோபனமாயுமுள்ள அத்யாஸத்தால் ஏற்படுவதாலும், அத்தகைய அத்யாஸமானது த்வைதஞானத்தால் பரவுதலாலும், அந்த த்வைதக்ஞானத்தின் விருத்தி அத்விதீயமான ஆத்ம தத்வத்தை அறியாமையால் உண்டாவதாலும், அத்தகைய மூலகாரணமான அறியாமை ஆத்மஞானம் உண்டானதும் நாசம் அடைவதாலும், அறியாமையிலிருந்து பரம்பரையாக உண்டாகும் துக்கத்திற்கும் அடியோடு நாசம் ஏற்படுவதாலும், ஆத்மதத்வஞானமே ஆத்யந்திகமான துக்க நிவிருத்திக்குக் காரணம் என்று ஏற்படுகிறது.

அத்தகைய ஞானம் உண்டாகக்கூடிய இடம் இந்த லோகமும் பிரஹ்மலோகமும் தான். இதில் விசேஷ கர்மோபாஸனைகளால் அடையவேண்டிய பிரஹ்மலோகமானது துர்லபமாயிருத்தலால், மனுஷ்ய லோகத்திலேயே ஞானத்தை ஸம்பாதிக்க வேண்டும். ஸ்வர்க்கமும் கந்தர்வாதி லோகங்களும் ஞானஸாதன பூமியல்லவென்று சுருதி சொல்கிறது. மனுஷ்ய தேகம் போய், பசு முதலான தேகங்கள் கிடைத்த ஸமயத்தில், தன் சரீரத்தில் ஸாமான்ய ஞானம் கூட இல்லாத பொழுது பரமார்த்த வஸ்துவின் ஞானத்தைக் குறித்து அங்கு பேச்சுக்கு இடமேது? இந்த சரீரத்திலேயே எவர்களுக்கு பரமாத்மாவின் ஞானமுண்டாகவில்லையோ, அவர்களுக்கு இந்த சரீரத்தை விட்டபிறகு பிரஹ்மமானது இன்னும் அதிகதூரமாய் விடுகிறது என்பதாக அங்கங்கே அநேக பிரமாணங்கள் இருக்கின்றன.

நித்யமான ஆனந்தத்தை அடைவதென்பது தூரத்திலிருக்கட்டும். பிரமத்தால் நாம் ஸுகம் என்று தெரிந்துகொண்டிருக்கும் ஸுகத்தை அடைவதற்குக்கூட தர்மமன்னியில் முடிகிறதில்லை. உலகத்தில் "அவனுக்கு ஸுகத்திற்கு வேண்டிய எல்லா ஸாதனங்களுமிருக்கின்றன, ஆனால் அவைகளை அனுபவிப்பதற்குப் புண்ணியமில்லை" என்று சொல்வது வழக்கமில்லையா? இதனால் சாஸ்திரத்தில் விதித்திருக்கும் கர்மாவினால் உண்டாகும் புண்ணியம் இருந்தால் தான் லௌகிக ஸுகம் கூடக் கிடைக்கும் என்று நன்கு

அறியக்கூடியதாயிருக்கிறது. ஆதலால்தான் தன் புத்தி யால் எவ்வளவு பிரயத்தினம் செய்தாலும் தன் இஷ் டத்தை அடைகிறதில்லை, துக்கத்தையும் விலக்குகிற தில்லை. ஆதலால்தான் சாஸ்திரமும் ஆசையோடு கூடிய ஜனங்களுடைய ஹிதத்தைக் கருதி ஐஹிகங்க ளாயுள்ள புத்திரன் பசு முதலான அல்ப பலன்களுக்கு ஸாதனமாயுள்ள காம்ய கர்மாக்களைக்கூட விதித் திருக்கிறது. அப்படிப்பட்ட பலனைத் தானுகவே ஸம் பாதித்துக்கொள்ள மனுஷ்யனுக்கு சக்தியிருந்தால் எதற்காக அதன் உபாயத்தை வேதமானது தெரியப் படுத்த வேண்டும்? "பிரத்யக்ஷத்தினுலாவது அனு மானத்தினுலாவது எந்த உபாயம் அறியப்படுகிற தில்லையோ அதை வேதத்தால் அறிகிறுர்கள். அதனுல் தான் வேதத்திற்கு வேதத்தன்மை" என்றல்லவா வேதத்தின் லக்ஷணம்? ஆகையால் லோகஸித்தமான ஸுகமோ, சாஸ்திர ஸித்தமான ஸுகமோ, எதுவா யிருந்தாலும் தர்மமன்னியில் அடைவது ஸாத்திய மில்லை என்பதை அறிந்து, எல்லோரும் சாஸ்திரத்தை சரணமடைந்து, அதில் சொல்லியிருக்கும் கர்மாக்களை விதிப்படி அனுஷ்டானம் செய்து தாங்கள் அபேக்ஷிக் கும் ஸுகத்தை அடையவும், சாஸ்திரத்தில் நிஷேதம் செய்திருப்பவைகளை விலக்கி துக்கத்தை பரிஹரித்துக் கொள்ளவும், கூடும்.



# அத்யாயம் 8.

## சித்த சுத்தி.

### 1. அத்யாஸம்.

அபார கருணாமூர்த்தியான பகவான் வேதம் மூலமாகவும் குருரூபமாகவும் நமக்கு எவ்வளவோ விதத்தில் நம்முடைய ஹிதத்திற்கு ஸாதனங்கள் இன்ன இன்ன என்று வியக்தமாய் எடுத்துச்சொல்லியிருந்தும் நாம் அவைகளை அனுஷ்டானம் செய்யாததற்கு காரணம் என்ன என்று கொஞ்சம் விசாரிப்போம். ஸகல ஜீவர்களுக்கும் சிரேயஸ் வேண்டும் என்றும் அசிரேயஸ் கூடாது என்றும் அபிப்பிராயமிருந்தபோதிலும் வேண்டுமென்கிற சிரேயஸ் ஏற்படுவதில்லை, வேண்டாமென்கிற அசிரேயஸ் ஏற்பட்டுக்கொண்டேயிருக்கிறது. ஸாதனானுஷ்டானம் சரியாயிருக்கும் விஷயத்தில் பலன் அவசியம் கைகூடும் என்று முன்னமேயே சொல்லப்பட்டது. ஆனால் ஒருபலனை உத்தேசித்து விதித்திருக்கும் கர்மாவை அனுஷ்டானம் செய்தாலும், சில வேளை பலன் கிடைக்காமல் போகிறது. ஆகையால் விஹித கர்மாவும் பலனைக்கொடுக்க வேண்டுமானால் பலன் உண்டாவதற்குத்தடையாய் நிற்கிற சில தோஷங்களையும் நிவர்த்தித்தால்தான் நினைத்தபடி பலன் கைகூடும் என்று தெரிகிறது. இப்படி இருப்பதால்தான் அநேகம் பேர்கள் வேதாந்த

சிரவணுதிகள் செய்தாலும் அவர்களுக்கு ஞானம் ஏற்படாமல் போகிறது. சிரவணுதிகள் ஞானஸாதனமாய் இருந்தாலும், ஞானேத்பத்திக்குப் பிரதிபந்தகமாக பலவித தோஷங்கள் சித்தத்தில் இருந்துவருகிறபடியால் ஞானம் ஏற்படாது. ஆகையால் சித்தசுத்தியேற்பட்டிருக்கும் ஜீவர்கள் சிரவணுதிரூபமான நிவிருத்தி தர்மத்தை அனுஷ்டித்து ஞானமடைந்து நிச்ரேயஸமாகிய மோக்ஷத்தை அடைகிருர்கள். சித்தசுத்தி ஏற்படாதவர்கள் ஸத்கர்மானுஷ்டானரூபமான பிரவிருத்தி தர்மத்தைஅனுஷ்டானம் செய்து ஸாமான்ய சிரேயஸ்களையும் சித்தசுத்தியையும் அடைகிருர்கள். ஸத்கர்மானுஷ்டானத்தையும் பலத்தில் ஆசையுடன் செய்துவந்தால் வாஸனையே விருத்தியாவதால் சித்தசுத்தியேற்படாது. நதியில் பிரவாஹம் மேல்மேல் வந்துகொண்டேயிருந்தால் எப்படி நதி வற்றிப்போக முடியாதோ, அதேமாதிரி ஸம்ஸாரத்திற்குக்காரணமாகிய கர்மத்தை மேல்மேல்செய்து கொண்டேயிருந்தால் ஸம்ஸாரத்திற்கு முடிவே கிடையாது.

ஆத்மா "விபு", அதாவது எங்கும் நிறைந்தவனுக இருப்பதால், வாஸ்தவத்தில் அவனுக்குக் கர்மா இருக்கவே நியாயமில்லை. கர்மா என்பது குறுகிய பதார்த்தத்தில் காணப்படுமே தவிர வியாபகமான பதார்த்தத்தில் இருக்காது. வாயுவில் சலனம் இருக்கலாமேதவிர, வாயுவைவிட வியாபகமான ஆகாசத்தில் சலனம் ஒருநாளும் கிடையாது. ஒருகுடம் நிறைய ஜலமிருந்தால் அந்த ஜலத்திற்கு சலனம் இல்லையென்

றும், கொஞ்சம் குறைந்தாலும் சலனம் ஏற்படும் என்றும், எல்லாரும் அறிந்த விஷயம். இதனாலே பூர்ண மான வஸ்துவிற்குக் கிரியை இருக்கக்கூடியதில்லை என்று தெரிந்து கொள்ளலாம். அதே மாதிரியாக ஜகத்து முழுமையும் வியாபித்திருக்கும் ஆத்மாவுக்கு கிரியை இருக்க நியாயமில்லை. அப்படியிருக்க ஆத்மா வுக்கு கர்மஸம்பந்தமும் அதனால் ஸம்ஸாரமும் எப்படி ஏற்பட்டது என்று கேட்டால், ஆசார்யாளே விவேக சூடாமணியில் சொல்கிறார்கள்.

अज्ञानयोगात्परमात्मनस्तव
ह्यनात्मबन्धस्तत एव संसृतिः ।
तयोर्विवेकोदितबोधवह्नि-
रज्ञानकार्यं प्रदहेत्समूलम् ॥

"பரமாத்ம ஸ்வரூபமாகவேயிருக்கிற உனக்கு அக்ஞானஸம்பந்தத்தினால் அநாத்ம பந்தமும், அதினால் ஸம்ஸாரமும் ஏற்படுகிறது. ஆத்மா, அநாத்மா, இவைகளுடைய விவேசனத்தினாலேற்படும் ஞானாக்னி யானது வேறுடன் அக்ஞான கார்யத்தை எரித்து விடும்."

ஆகாசாதிகளுக்குக் காரணமாகிய ஆத்மாவைக் குறித்தே பின்னால், அதே ஆத்மாதான் அன்னரஸ மயன் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அதினால் உத்கிருஷ்டமான ஆத்மாவுக்கு நிகிருஷ்டமான சரீராதிகளி

டத்தில் அத்யாஸம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. உத்க்ருஷ்டனுக்கு நிக்ருஷ்ட விஷயமாக அத்யாஸம் ஏற்படலாமோ என்றால், சக்கிரவர்த்தியாயிருந்த நளன் கர்ம ஸம்பந்தத்தினால் பாஹுகனாகவில்லையா? அப்படியே, ஆத்மாவிடத்திலும் அநாத்மாத்யாஸம் அதாவது ஆத்மா ஜடம் என்பது முதலான தோற்றங்களும் ஏற்படலாம். அதேமாதிரி, அநாத்மாவான சரீராதிகள் சேதனம் என்பது முதலான தோற்றங்களும் ஏற்படலாம். அதுவும் அத்யாஸம் தான். இவ்விரண்டுஅத்யாஸங்களுக்குள் ஆத்மாவை அநாத்மா என்று நினைத்தால்கூட அவ்வளவு பாதகம் இல்லை. அநாத்ம பதார்த்தங்களை ஆத்மா என்று நினைத்து அவைகளுக்கு ஏற்படுகிற ஸுகதுக்காதிகளை தன்னுடையதாக பாவிப்பதுதான் ஜாஸ்தி அனர்த்தம். விவேக சூடாமணியில்

अतस्मिंस्तद्बुद्धिः प्रभवति विमूढस्य तमसा
विवेकाभावाद्वै स्फुरति भुजगे रज्जुधिषणा ।
ततोऽनर्थव्रातो निपतति समादातुरधिकं
ततो योऽसद्ग्राहः स हि भवति बन्धः शृणु सखे ॥

என்று ஆசார்யாள் சொல்லியிருக்கிறார்கள். கயிற்றில் பாம்பு என்ற பிரமம் ஏற்பட்டால், கொஞ்சம் பயம் நடுக்கம் ஏற்படுமே தவிர வேறு கெடுதல் வராது. பாம்பில் கயிறு என்ற பிரமம் ஏற்பட்டு அதை கையில் எடுத்தால் கடித்துவிடும், பிராணஹானியும்

ஏற்படும் ஆகையால் சரீராதிகளில் ஏற்பட்டிருக்கும் ஆத்மாத்யாஸத்தை நிவர்த்தித்துக் கொள்வதே நமக்கு முக்கியமான கார்யம்.

அந்த அத்யாஸம் நிவிருத்தியாவதற்கு ஒருவழி தான் உண்டு. அத்யாஸம் ஆத்மாவின் ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் இல்லாததினால் ஏற்பட்டிருக்கிறபடியால், அத்யாஸம் நிவிருத்தியாவதற்கு ஆத்ம தத்வ ஞானமே ஸாதனம். கயிற்றில் தோன்றிய பாம்பு நசிக்கவேண்டுமானால், கம்பை எடுத்து அடித்தால் நசிக்காது. வேறு என்னவிதமான கிரியை செய்தாலும் போகாது. கயிறு என்ற வாஸ்தவ ஞானம் ஏற்பட்டால்தான் போகும்.

आविद्यो ह्येष बन्धो विरमति न विना वेदनं कर्मजालैः
मालोद्भूताहिरस्तं व्रजति किमु नमस्कारमन्त्रौषधाद्यैः ।

ஸம்ஸாரம் அவித்யையினால் ஏற்பட்டிருக்கிறபடியினால், ஞானத்தினால்தான் நிவர்த்திக்கமுடியும், கர்மாக்களால் முடியாது. மாலையில் தோன்றின ஸர்ப்பம், நமஸ்காரம், மந்திரம், மருந்து முதலானதுகளால் நிவிருத்தியாகுமா? அவித்யைக்கு எதிரிடையான வித்யையினால்த்தான் அது போக வேண்டும். ஞானம் ஏற்படாமல் எத்தனை கர்மாக்கள் செய்தாலும் பந்தம் போகாது, என்று சொல்கிறார்கள்.

**2. சித்தம் சுத்தமாகும்வரை கர்மா அவசியம்.**

இந்த வார்த்தையைக் கேட்டவுடன் ஸம்ஸார

நிவிருத்திக்குக் கர்மம் தேவையில்லை என்று தெரிகிற படியால், வர்ணுசிரமாதி தர்மங்களை அனுஷ்டானம் செய்வது அனுவசியம், என்று உடனே நவீனர்கள் ஸ்வபாவமான ஆலஸ்யத்திறைல் தீர்மானம் செய்துவிடு வார்கள். ஆனுல் சாஸ்திர ஸித்தாந்தம் அப்படியல்ல. இவ்விதமாக சாஸ்திர விஷயமாய் விபரீத புத்தி ஏற் படுமென்று பயந்துதான், கேட்பவன் அதிகாரியா வென்று கவனித்து சாஸ்திரார்த்தங்களைச் சொல்ல வேண்டும், அங்கே ஒரு வார்த்தை இங்கே ஒரு வார்த்தை கேட்டுக்கொண்டு சாஸ்திரார்த்தம் இப் படித்தான் என்று நினைக்கக்கூடியவர்களுக்கு மேலான தத்வங்களை சொல்லாதே, என்று சாஸ்திரங்களே சொல்லுகின்றன. அப்படிச் சொல்லிவிட்டால், அவர்கள் மேலான தத்வங்களை சரியாக கிரஹிக்க சக்தியற்றவர்களாக இருப்பதால், அந்த தத்வங்களை உள்ளபடி கிரஹிக்கமாட்டார்கள், கீழ்ப்பட்ட தத்வங் களில் அசிரத்தை மாத்திரம் ஏற்படும், இரண்டுமில்லா மல் கெட்டுப்போய்விடுவார்கள். அனதிகாரிகளுக்கு மேலான விஷயங்களை உபதேசிப்பவன் அவர்களை வேண்டுமென்று நரகத்தில் தள்ளினவனுவான்.

अज्ञस्यार्धप्रबुद्धस्य सर्वं ब्रह्मेति यो वदेत् ।
महानिरयजालेषु तेनायं हि प्रवेशितः ॥

அதை உத்தேசித்துத்தான் குரு அவசியம் என்று அடிக்கடி வற்புறுத்தப்படுகிறது. அப்படியே, சாஸ் திரார்த்தம் நன்ருய்த் தெரிந்து அனுபவத்திற்குக்

கொண்டுவந்திருக்கிற ஸத்புருஷர்களின் ஸஹவாஸமும் அவசியம் வேண்டுமென்றும் சொல்லப் படுகிறது.

அவித்யையினால் ஏற்பட்ட அத்யாஸமும் அதன் கார்யமான ஸம்ஸாரமும் நிவிருத்தியாவதற்கு கர்மா ஸாதனமில்லை என்று சொன்னது, ஸாக்ஷாத்தாக ஸாதனமில்லை என்று அர்த்தமே தவிர, பரம்பரையாய் கூட ஸாதனமில்லை என்று சொல்ல வரவில்லை. ஞானம் ஏற்படும்படியான யோக்கியதை, அதாவது சித்த சுத்தி ஸம்பாதிக்கும் வரையில், அந்த சித்தசுத்தி ஏற்படவேண்டியதற்காக கர்மாவை கட்டாயம் அனுஷ்டானம் செய்துதான் தீரவேண்டும். विधिना कर्मबन्धं विधूय "விதிப்படி கர்மபந்தத்தை விட்டு விட்டு" என்று சொல்லப்பட்டிருக்கிறது. நம் இஷ்டப்படி நினைத்தபோது விட்டுவிடலாம் என்றால் "விதிப்படி" என்ற வார்த்தை போட்டிருக்கவேண்டாம். விதிப்படி விடுகிறது, விதியன்னியில் விடுகிறது, இரண்டும் விடுகிறது தானே, என்ன வித்தியாஸம்? என்று கேட்கக் கூடாது. ஒரு ஸர்க்கார் உத்தியோகஸ்தர் இத்தனை வருஷம் வேலை பார்த்தால் பிறகு அவருக்கு இவ்வளவு உபகாரச்சம்பளம் கொடுத்து வீட்டுக்கு அனுப்பி விடுகிறது என்று ஒரு நியமம் இருக்கும். அப்படி அவர் பூருவும் சரியாய் வேலை பார்த்தாய்விட்டால் உபகாரச்சம்பள ஸஹிதம் ஸர்க்காரின் பிரீதியுடன் வீட்டில்போய் ஸுகமாய் தன் பாக்கி ஆயுட்காலத்தைக் கழிக்கலாம். "அவர் உத்தியோகத்தை விட்டுவிட்டு

வீட்டில்வந்து தானே உட்காருகிறூர், அதேமாதிரி நானும் வீட்டுக்கு வந்துவிடுகிறேன் " என்று சொல்லிக் கொண்டு, உத்தியோகத்தில் இருப்பவன் ஒருவன், திடீரென்று ஸர்க்கார் அனுமதியின்றி தன் காரியங்களையெல்லாம் அப்படியே போட்டுவிட்டு, வீட்டுக்கு வந்து விட்டால், அவனிடம் ஸர்க்காருக்கு பிரீதி ஏற்படுமா? உபகாரச்சம்பளம்தான் கிடைக்குமா? ஸர்க்காரின் அப்ரீதி ஏற்பட்டு தண்டனைகூட ஏற்படும். ஏனென்ருல், இவன் விதிப்படி உத்தியோகத்தை விடவில்லை. அதேமாதிரி, சித்தசுத்தி ஸம்பாதிக்கும்வரையில் கிரமமாய் கர்மானுஷ்டானம் செய்து அப்பால் கர்மத்தைவிட்டுக்கேவலம் ஞான மார்க்கத்தில் பிரவேசிக்கலாமேதவிர, அதற்கு முன்ஞல் விட்டால் உபய பிரஷ்டனுவானேயொழிய ஒரு வித பிரயோஜனத்தையும் அடையமாட்டான். ஈசுவரனின் கோபத்திற்கும் ஆளாவான். அப்படியே சித்தசுத்தி ஸம்பாதித்த பிறகு கர்ம ஜாலங்களை விட்டுவிட வேண்டியது. அப்பொழுது விடாமலிருந்தாலும் பிசகு. ஒரு நிலம் சாகுபடி செய்யவேண்டியதற்காக பூமியை பரிஷ்காரம்செய்ய கலப்பையைக் கொண்டு உழுது பக்குவம் செய்தபிறகு, அக்கலப்பையை தூரவைத்துவிடவேண்டும், பயிரிடும் காலத்திலாவது அறுப்புக்காலத்திலாவது கலப்பையைவிட மாட்டேன் என்று கையில் வைத்துக்கொண்டிருந்தால், அவன் எவ்வளவு புத்திசாலியோ அவ்வளவு புத்திசாலிதான் சித்தசுத்தி ஏற்பட்டபிறகு கர்மத்தை விடாதவன்.

## 3. உள்சத்துருவை ஜயிக்கவேண்டும்.

ஞான சாஸ்திரம் தவிற மற்ற எல்லா சாஸ்திரங் களுமே இந்த சித்த சுத்தியை ஸம்பாதித்துக் கொடுப்ப தற்காகத்தான். சித்தத்தை சுத்தி செய்வதென் ருல், அதிலிருக்கிற அசுத்தியை நிவிருத்தி செய்வது தான். காமம் என்பது தான் முக்கியமான அசுத்தி. ஆத்மா நிரதிசயானந்த ஸ்வரூபி என்று தெரிந்து கொள்ளாததால் அநாதியான அவித்யா வாஸனை யினுல், நமக்கு ஆனந்தம் கொடுக்கக்கூடிய பதார்த் தங்கள் நமக்கு வெளியிலிருப்பதாக பிராந்தியால் நினைத்து, அவைகள் நமக்குக் கிடைக்க வேண்டுமென் கிற எண்ணமே காமமாகும். நமக்குச் சொந்தமான ஸ்வாராஜ்யம் கிடைக்கவேண்டுமாகுல், பாஹ்ய விஷ யங்களை ஸம்பாதிப்பதினுலாவது மற்றவர் எடுத்துக் கொண்டு போகாமல் பாதுகாப்பதினுலாவது ஏற் படாது. பாஹ்ய சத்துருக்களை எவ்வளவு ஜயித் தாலும் ஆந்தர சத்ருவான இந்த காமத்தை ஜயிக் காதவன் ஸ்வாராஜ்யம் அடைந்ததாகச் சொல்ல முடியாது. நமக்கு மித்திரன் மாதிரித் தோன்றிக் கொண்டு ஆபத்தில் கொண்டுபோய் விடுகிருன் இந்தக் காமன். நமக்கு இஷ்டமில்லாத கார்யங்களில் கூட நம்மை பிரவிருத்திக்கச் செய்து அனிஷ்டத்தை ஸம் பாதித்துக் கொடுக்கிருன். அர்ஜுனன் இதையே "தனக்கு இஷ்டமில்லாமல் போனுலும் யாரோ ஒரு வனுல் பலாத்காரம் செய்து ஏவப்படுகிறவன்போல மனுஷ்யன் பாபத்தைச்செய்கிருனே, அவன் யார்?"

என்று கேட்கும்போது பகவான் "அவனே காமன், அவனே குரோதன். ரஜோகுணத்திஞல் உண்டான வன். பெருந்தீனிக்காரன், மஹாபாபி. அவனையே இங்கு சத்துருவாக அறி" என்று பதில் சொல்லியி ருக்கிருர். காம்யமான பதார்த்தம் நமக்குக் கிடைப் பதற்கு யாராவது பிரதிபந்தகமாக இருந்தால் அந்தக் காமம் கோபமாக மாறும். அப்படியே மதம் மாத் ஸர்யம் முதலியவைகளும் காமத்திஞலேயே ஏற்படுவ தால் எல்லாமே நமக்குச்சத்துருக்கள் என்ற முறையில் அவைகளுக்கு "அரி ஷட் வர்க்கம்" என்று சொல் வார்கள். இந்த சத்துருக்களை ஜயித்து சித்தத்தை நிஷ்காமமாகச் செய்துவிடும் பக்ஷத்தில் சித்த சுத்தி ஏற்படும். அதற்காகத்தான் சித்த சுத்திக்கு ஸாதன மாக நிஷ்காம கர்மானுஷ்டானத்தை விதித்திருக் கிருர்கள்.

ஞானம் ஏற்படும்வரை சரீராதிகளில் அத்யாஸம் இருக்குமாதலால், கர்மம் செய்யாமல் இருக்க முடி யாது. அதை சாஸ்திரீய கர்மாவாகச் செய்தால் சிரேயஸ் உண்டு. அதையும் ஈசுவரார்ப்பண புத்தி யுடன் செய்கிற விஷயத்தில் சித்த சுத்தி ஏற்பட்டு ஞானத்தில் அதிகாரியாவான். அதுவரை அதாவது சித்த சுத்தி ஏற்படும்வரை, கர்மங்களின் பலன்களுக்கு மாத்திரம் பரித்யாகமும், சித்த சுத்தி ஏற்பட்ட பிறகு, கர்மங்களுக்கு ஸ்வரூப பரித்யாகமும், செய்ய வேண்டும் என்று நிஷ்கர்ஷை செய்திருக்கிருர்கள்.

இந்த விஷய விபாகம் தெரிந்துகொள்ளாமல்.

அதிகாரி தாரதம்யம் கவனிக்காமல், எல்லாம் தர்மம் தானே என்று சொல்லிக்கொண்டு, ஜாதிபேதம் வேண்டியதில்லை, எல்லாரும் ஒரே மாதிரி இருக்க வேண்டும், அப்படி இருந்தால் தான் தேச க்ஷேமம் உண்டு, என்று பலவாறாக நவீனர்கள் சிலர் சொல்ல ஆரம்பித்து, அவர்களிடத்தில் பிராமாண்ய புத்தி வைத்துக்கொண்டிருக்கிற மற்றவர்களும் சாஸ்திர நிஷித்தமான வழிகளில் இறங்கி, வர்ண ஸங்கரத் திற்கும் அதர்ம விருத்திக்கும் பிரவிருத்தி செய்து வருகிறார்கள். தர்மம் குறைந்து அதர்மம் ஓங்கும் காலத்தில் அவதாரம் செய்கிறேன் என்று பகவான் சொல்லி யிருப்பதை வைத்து, சீக்கிரம் ஈசுவரன் அவ தாரம் எடுத்து வரவேண்டுமென்பதற்காக அவர்கள் இவ்விதம் பிரவிருத்தி செய்கிறார்களோ என்று கூடத் தோன்றுகிறது.

வாஸ்தவத்தில் பிரமாணங்கள் எது எது, யார் யார் சிரேஷ்டர்கள், யார் யார் ஆப்தர்கள், என்று கூட விவேசனம் செய்ய ஜனங்கள் சக்தியற்று இருக் கிறார்கள். முன் யுகங்களில் ஹிரண்யகசிபு, ராவணன், முதலியவர்களுடைய ஹிம்ஸையை நிவிருத்தி செய் வதற்காக பகவான் அவதரித்ததாகப் புராணங்களி லால் தெரிகிறது. ஆனால் அவர்கள் நம்மைவிட எவ் வளவோ மடங்கு யோக்கியர்கள். அவர்கள் பிரத் யக்ஷமோ, அனுமானமோ, சப்தமோ, ஏதாவது ஒரு பிரமாணத்தை அவலம்பித்து வியவஹாரம் செய் தார்கள். தவிறவும் ஈசுவரனால் வெளியிடப்பட்ட

வேதத்தில் பிராமாண்ய புத்தியுடன் அதில் கண்டபடி தீவிரமான தபஸ்களை அனுஷ்டித்து ஸித்திபெற்ற வர்கள். ஈசுவரனை ஒப்புக்கொண்டு அவரிடம் த்வேஷம் செலுத்தினவர்கள். தபோமஹிமையினால் அபாரமான சக்திவாய்ந்தவர்கள். நமக்கு அவர்களுடைய துஷ்டத்தனம் மாத்திரம் இருக்கிறதே தவிர, அவர்களுடைய ஸாமர்த்தியமாவது பிராமாண்ய புத்தியாவது தீவிரப் பிரயத்னமாவது உத்ஸாஹமாவது மற்றும் எவ்வித நல்ல குணமாவது கிடையாது. பகவான்தான் நமக்கு நல்ல புத்தியைக்கொடுத்துக் காப்பாற்றவேண்டும். கொஞ்ச நாட்களுக்குமுன் வர்ணாசிரம தர்மம் கொஞ்சமேனும் உலைவு கொடுக்காமல் இருந்துவந்த காலத்தில் நம்தேசம் மற்ற தேசங்களை விட ஐஹிக ஸம்பத்திலும்கூட மேன்மையடைந்திருக்கவில்லையா? ராணி விக்டோரியாவின் பௌத்திரன் இங்கிலாந்து சக்ரவர்த்தியும், தௌஹித்திரன் ஜர்மனி சக்ரவர்த்தியும் ஸஹபங்க்தி போஜனம் செய்யவில்லையா? ஒரே ஜாதி, ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களல்லவா? பரஸ்பரம் விவாஹாதி ஸம்பந்தங்கள் செய்துகொண்டவர்கள் இல்லையா? அப்படியிருக்க அவர்கள் ஏன் கோரமாய் யுத்தம் செய்தார்கள்? ஆகையால் ஐகமத்தியத்திற்கும் ஜாதி பேதம் முதலிய தர்மவியவஸ்தைக்கும் யாதொரு விரோதமும் இல்லை என்று வியக்தமாய்த் தெரிந்துகொள்ளலாமே? ஆனால் அதற்குவேண்டிய விசாரம்தான் யார் செய்கிறார்கள்?

## 4. சித்த சுத்தி உபாயங்கள்.

சித்த சுத்திக்கு ஸாதனமாக கர்மாவை முன்பு சொன்னோம் ஸாதாரணமாக ஸம்ஸ்கிருத பாஷா ஞானம் ஏற்பட வேண்டுமென்று கருதி நமக்கு பால்யத்தில் காவ்ய பாடங்கள் சொல்லிக்கொடுக்கிறார்கள். அதுவே புருஷார்த்தம் என்று நினைத்து ஆயுள்முடிய காவ்ய நாடகங்களிலேயே காலத்தைக் கழித்து விட்டால் ஜன்மம் வியர்த்தமாய்ப் போய்விடுமென்று நினைத்து, காவ்யம் வாசிக்கக்கூடாதென்று काव्यालापांश्च वर्जयेत् என்ற நிஷேத சாஸ்திரம் வந்தது. ஆலங்காரிகர்கள் இந்த நிஷேதம் அஸத்காவ்யங்களைக்குறிக்கிறது என்று வியாக்கியானம் செய்கிறார்கள். ஆனால், எல்லா காவ்யங்களையுமே நிஷேதிப்பதில்தான் முக்கிய தாத்பர்யம். பாஷாக்ஞானம் ஏற்பட்ட பிறகு காவ்ய பாடங்களை நிறுத்திக்கொள்ளத்தான் வேண்டும். பாஷாக்ஞானம் மாத்திரம்போதாது, விஷயக்கிரஹணத்திற்கு வேண்டிய யோக்யதையை ஸம்பாதித்துக் கொள்ள ஊஹாபோஹ விசக்ஷணனாய், அதாவது யுக்திவாதம் செய்யக்கூடிய புத்திக் கூர்மையுடன் இருக்கவேண்டியது அவசியமாயிருப்பதால், தர்க்க சாஸ்திரம் அப்யஸித்துக்கொடுக்கிறார்கள். அதையே புருஷார்த்தமாக நினைத்து, காலத்தைக் கழித்துவிடக் கூடாதென்று நினைத்து, எவ்வளவு தூரம் யுக்தியினாலே கண்டுபிடிக்க யத்தனப்பட்டாலும் ஆத்மா உன் கேவல யுக்திக்கு எட்டாத பதார்த்தம் என்று காட்டுவதற்காக नैषा तर्केण मतिरापनेया என்ற சுருதி பிரவிருத்தித்

திருக்கிறது. அப்படியே கர்ம ஸ்வரூபத்தைப்பிரதி பாதிக்கவந்த பூர்வ மீமாம்ஸா சாஸ்திரத்தையும் அப் யாஸம் செய்வது உசிதமாயிருந்தாலும், கர்மத் திலேயே ஆத்யந்திக துக்கநிவிருத்தி ஏற்படுமென்று நினைக்காதே என்று சொல்வதற்காக ப்லவா ஹ்யேதே அத்ருடா யஜ்ஞரூபா: என்ற சுருதி பிரவிருத்தித்திருக்கிறது. இதேமாதிரி ஒவ் வொரு சாஸ்திரமும் அவசியமாயிருந்தாலும், முக்கிய புருஷார்த்தமான மோக்ஷ ஸ்வரூபத்தை பிரதிபாதிக் கிற வேதாந்த 'சாஸ்திரத்திற்கு எவ்வளவு தூரம் உப யோகப்படுகிறதோ, அதுவரை அவைகளை உபயோகப் படுத்திக்கொண்டு அப்புறம் அவைகளை பரித்தியாகம் செய்வதுதான் உசிதம். இவ்விதமாக சித்தத்தை சுத்தி செய்வதற்கு மேலேகண்ட சாஸ்திரங்களும் அவை களின் அப்யாஸத்தின் பிரயோஜனமான நிஷ்காமகர் மானுஷ்டானமும் முக்கியமான ஸாதனமாகும்.

கண்ணுடியில் ஏறியிருந்த அழுக்கை நன்ருய்த் துடைத்து சுத்தி செய்தாலும்கூட, கண்ணுடி சஞ்சல மாயிருக்கும் விஷயத்தில் பிரதிபிம்பத்தைக் கிரஹிக்க முடியாது. அதேமாதிரி, சித்தத்தில் உள்ள தோஷங் களை கர்மானுஷ்டானத்தினுல் நிவிருத்திசெய்தாலும், சாஞ்சல்யதோஷம் நிவிருத்தியாவதற்கு ஐகாக்ர்யம் ஸம்பாதித்துக்கொள்ள வேண்டும். நிஷ்காம கர்மா னுஷ்டான காலத்திலேயே ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்யவேண்டுமென்று சொன்னபடியால், அந்த ஈசு வரனிடத்திலேயே மனதை நிறுத்தி ஐகாக்ர்யம் ஸம் பாதித்துக்கொள்வது ஸுலபமாகும். அதற்காகத்

தான் யோக சாஸ்திரம் பிரவிருத்தித்திருக்கிறது. ஈசு வர விஷயமாக சித்தத்தை நிறுத்தும்படி செய்கிற உபாயத்தைத்தான் பக்தி என்று சொல்லுகிறார்கள். இவ்விதமாக நிஷ்காம கர்மானுஷ்டானத்தினால் நைர் மல்யமும் பக்தியினால் அசாஞ்சல்யமும் ஏற்பட்டுவிட் டால், சித்தம் முழுமையும் சுத்தியடைந்துவிடுவதால், ஞானோபதேசம் செய்யும்போது உடனே ஆத்ம ஸ்வ ரூபத்தைக்கிரஹிக்கும். ஆகையால் ஆத்யந்திக ஸுக ரூபமான ஸ்வரூபானந்தத்தை அடையவேண்டுமானால் மேலே சொன்னபடி கர்மம், பக்தி, ஞானம், இம் மூன்றுமே அவசியம். வேறு உபாயம் கிடையாது.

योगास्त्रयो मया प्रोक्ता नृणां श्रेयोविधित्सया ।

ज्ञानं कर्म च भक्तिश्च नोपायोऽन्योऽस्ति कुत्रचित् ॥

ஆகையால் இம் மூன்றையும் அவரவர்கள் அதிகார ஸம்பத்துக்குத் தக்கபடி அனுஷ்டானம் செய்து எல் லாருமே நிரதிசயானந்த ஸ்வரூபமான மோக்ஷ பதவியை அடையவேண்டுமென்பது சாஸ்திரத்தின் கருத்து.



## அத்யாயம் 9.

## ஸந்தோஷமடையும் வழி.

### 1. பிரதிபிம்ப திருஷ்டாந்தம்.

நம்முடைய உபநிஷத் ஸித்தாந்தத்தில் நித்ய சுத்த புத்தமுக்த ஸ்வபாவமுள்ள பரமாத்மதத்வமே உபாதி

ஸம்பந்தத்தால் ஜீவர்களாகத்தோன்றுகிறது என்று சொல்லப்படுகிறது. ஏகமாக இருக்கிற பரமாத்மாவிற்கு உபாதி ஸம்பந்தம் ஏற்படும்போது, அந்த உபாதிக்கு அதீனமாயிருப்பவன் ஜீவன் என்றும், உபாதிக்கு அதீனமில்லாமலிருக்கும் சைதன்யம் ஈசுவரன் என்றும், சொல்லப்படுகிறது. ஆகாசம் நிரந்தரமாய் ஏகமாயிருந்தாலும், ஒரு குடம் ஏற்பட்டவுடன் அதற்குள்ளிருக்கும் ஆகாசத்திற்கு கடாகாசம் என்றும், வியாபகமான ஆகாசத்திற்கு மஹாகாசம் என்றும், வியவஹாரம் ஏற்படுவதுபோல ஒரே ஆத்மாவில் ஜீவன் என்றும் ஈசுவரன் என்றும் வியவஹாரம் ஏற்படுகிறது.

இதே விஷயத்தை மற்றொரு திருஷ்டாந்தத்தாலும் சொல்லலாம். அதாவது, ஒரு முகம் கண்ணாடியில் பிரதிபலிக்கும்போது அந்த முகத்திற்கு பிம்பம் என்றும், கண்ணாடியில் பிரதிபலிக்கும் முகத்திற்கு பிரதிபிம்பம் என்றும், வியவஹாரம் ஏற்படுகிறது. அந்தக்கண்ணாடி இருக்கும்வரையில்தான், அந்த வியவஹாரம். கண்ணாடியை எடுத்துவிட்டால் பிரதிபிம்பம் கிடையாது. முகத்திற்கு பிம்பம் என்கிற வியவஹாரமும் கிடையாது. பிரதிபிம்பம் தோன்றிக்கொண்டிருக்கும்போதுகூட அதற்குத்தனியான ஸத்தை அதாவது இருப்புக்கிடையாது. அதன் ஸத்தை பிம்பத்தின் ஸத்தையைத்தவிர வேறில்லை. இதேமாதிரி, ஈசுவரனை பிம்பம் என்றும், ஜீவனை பிரதிபிம்பம் என்றும், மத்தியில் பிரதிபலனத்திற்குக் காரணமான

அந்தக்கரணத்தை கண்ணாடிபோலுள்ள உபாதி என்றும் சொல்கிறார்கள்.

இந்த திருஷ்டாந்தத்தினால் நாம் ஒரு விசேஷம் தெரிந்துகொள்ளலாம். கண்ணாடியில் தோன்றும் பிரதிபிம்பமுகத்தில் ஒரு திலகம் போடவேண்டுமென்று நாம் நினைத்தால், கண்ணாடிக்குள் கையைவிட்டு பிரதி பிம்பத்தில் திலகம் போடமுடியாது. கண்ணாடிக்குள் கையை விட முடிந்தாலும், உடனே கண்ணாடி உடைந்து பிரதிபிம்பமே நசித்துவிடும். பிரதிபிம்ப முகத்தின் நெற்றிக்கு நேராக கண்ணாடியில்வேண்டுமா னால் ஒரு திலகம் போடலாம். ஆனால், நாம் நேராக நிற்காமல் கொஞ்சம் தள்ளிநின்று பார்த்தால், பிரதி பிம்பமும் நகரும். கண்ணாடியில்போட்ட திலகம் மாத் திரம் அப்படியே கண்ணாடியில்போட்ட இடத்திலேயே இருக்கும். ஆகையால் இப்பொழுது பிரதிபிம்பத்தின் கன்னத்திலேயோ அல்லது அதற்கு வெளியிலேயோ திலகம் இருப்பதாகத் தோன்றும். பிரதிபிம்பத்தில் இந்த திலகம் ஸம்பந்தப்படவில்லை என்று தெரிவ துடன் எந்தஇடத்தில் போடக்கூடாதோ அந்த இடத்தில் போட்டிருப்பதாகவும் தோன்றும். இப்படி பிரதிபிம்பத்தில் திலகம் ஸாக்ஷாத்தாகப்போட ஸாத் யப்படாமலும், கண்ணாடியில் போட்டால் பிரயோ ஜனமில்லாமலும், போவதால் பிரதிபிம்பத்திற்கு எவ் விதத்திலும் திலகம்போடுவது ஸாத்தியமில்லை என்றே தீர்மானிக்கும்படி நேரிடும். ஆனால் பிரதிபிம்பத்திற்கு எப்படியாவது திலகம் போட்டுத்தான் தீரவேண்டும்

என்று நமக்கு எண்ணம் இருக்கும் பக்ஷத்தில், அது விஷயமாகக்கொஞ்சம் யோசிக்கவேண்டும். புத்தி சாலியாயிருந்தால் அதற்கு ஒரே வழிதான் உண்டு. அதாவது, பிரதிபிம்பத்திலாவது கண்ணாடியிலாவது திலகம் போடுவதற்காக செய்யும் வீண் பிரயத்தினங்களை நிறுத்திக்கொண்டு, பிம்பபூதமான வாஸ்தவமான முகத்தில் அந்தத்திலகத்தைப் போட்டுவிட்டால் அந்த திலகமும் உடனே பிரதிபிம்பமுகத்திலும் பிரதிபலிக்கும். அப்படிப் பிரதிபலிக்கிற திலகத்தைத் துடைத்து அழிக்கவும் முடியாது. ஸாக்ஷாத்தாக நெற்றியிலேயே ஒட்டியிருக்கும். இதைத்தவிர வேறு ஒருவிதத்திலும் பிரதிபிம்பமுகத்தில் திலகம் போட முடியாதென்று நன்ருய் விளங்கும். அதுமாத்திரமல்ல. பிம்பமுகத்தில் திலகம் போட்டுவிட்டு பிரதிபிம்ப முகத்தில் திலகம் பிரதிபிம்பிக்கக் கூடாதென்று நாம் எவ்வளவு பிரயத்தினப்பட்டாலும் பிரயோஜனப்படாது. பிரதிபிம்பத்திலும் திலகம் தோன்றவே தோன்றும். ஆகையால் பிரதிபிம்பத்திற்கு அலங்காரம் பண்ணவேண்டுமானுல் பிம்பத்திற்கு அலங்காரம் பண்ணினுலொழிய வேறுவழியில்லையென்றும், பிம்பத்திற்கு அலங்காரம் செய்தால் பிரதிபிம்பத்திற்கு நாம் வேண்டாமென்று சொன்னுலும் அலங்காரம் ஏற்பட்டுத்தான் தீரும் என்றும் வியக்தமாகத்தெரியலாம்.

## 2. ஈசனை ஸந்தோஷப்படுத்தவேண்டும்

நம்மெல்லாருக்குமே பொதுவாக எப்பொழுதும் ஸந்தோஷம் வேண்டும், ஒருபொழுதும் துக்கம் வரக்

கூடாது, என்ற எண்ணம் நிரந்தரமாக இருந்து கொண்டேயிருக்கிறது. அப்படி எண்ணமிருப்பதுடன் மாத்திரமில்லாமல், ஸதாகாலமும் ஸந்தோஷம் அடைவதற்காகவும் துக்கத்தை நீக்கிக்கொள்வதற்காகவும் ப்ரவிருத்தி செய்துகொண்டேயிருக்கிறோம். அப்படி இருந்தும் நமக்கு ஸந்தோஷம் கிடைக்கிறதில்லை, துக்கம் நீங்குகிறதுமில்லை. அதற்கு என்ன காரணம் என்று விசாரிக்கவேண்டும். முன் சொன்ன திருஷ்டாந்தத்தைக் கவனித்தால் காரணம் உடனே தெரியும். ஜீவர்களாகிய நாம் ப்ரதிபிம்பர்களாக இருந்துகொண்டு ஸந்தோஷம் வேண்டுமென்று நினைத்து, ப்ரதிபிம்ப முகத்தில் ஸாக்ஷாத்தாக திலகம் போடவேண்டுமென்று நினைத்தவன்போலும் கண்ணாடியில் திலகம் போடுகிறவன்போலும், ப்ரவிருத்திக்கிறோம். அதினால்தான் போடுகிற திலகம் ப்ரதிபிம்பத்தின் நெற்றியில் விழமாட்டேன் என்கிறது. நாம் ஸ்வதந்திரமாக நேராக ஸந்தோஷம் அடைந்துவிடலாமென்று நினைப்பது ஸாத்தியமில்லாத கார்யம். ஏன் என்றால் நாம் ப்ரதிபிம்பர்கள்தான். ஆனதால் நமக்கு ஸந்தோஷம் ஏற்படவேண்டுமென்றிருந்தால், முன் சொன்ன யுக்தியைத்தவிர வேறு வழி கிடையாது. அதாவது, பிம்பமுகத்தின் நெற்றியில் திலகம் போடவேண்டும். ப்ரக்ருதத்தில் பிம்பபூதனான ஈசுவரனுக்கு ஸந்தோஷம் ஏற்படுத்தவேண்டும். அவனுக்கு ஸந்தோஷம் ஏற்பட்டால், ப்ரதிபிம்பமான நமக்கு உடனே ஸந்தோஷம் ஏற்பட்டுவிடும். அவனுக்கு ஸந்

தோஷம் ஏற்பட்ட பிறகு நமக்கு ஸந்தோஷம் ஏற்படக்கூடாதென்று எவ்வளவு தடுத்தாலும் பிரயோஜனப்படாது. நமக்கு ஸந்தோஷம் ஏற்பட்டே தீரும். அவனுக்கு ஸந்தோஷம். ஏற்படுத்தாமல் நமக்கு ஸந்தோஷம் ஏற்படுத்திவிடலாம் என்பது அஸாத்தியமான கார்யம். ஆகையால் மேலே சொல்லிய திருஷ்டாந்தத்திலிருந்து நாம் தெரிந்துகொள்ள வேண்டியது என்னவென்றால், நம்முடைய ஸந்தோஷப் பிராப்திக்கு ஈசுவரனை ஸந்தோஷப்படுத்துவதைத் தவிர வேறுவழியில்லை யென்பதே. இதைத் தெரிந்து கொண்டு ஈசுவர பரிதோஷணத்திற்காக பிரயத்தினப் படவேண்டியதைத்தவிர, ஸாக்ஷாத்தாக நம்முடைய ஸந்தோஷத்திற்குப் பிரயத்தினம் செய்வது அநாவசியமும் நிஷ்பிரயோஜனமும் என்று நன்கு உணர வேண்டும். இதைத்தான் ஆசார்யார் மனதைப்பார்த்துச் சொல்வதுபோல்,

त्वत्प्रभुजीवप्रियमिच्छसि चेन्नरहरिपूजां कुरु सततं
प्रतिबिम्बालंकृतिधृतिकुशलो बिम्बालंकृतिमातनुते ।

“ஹே மனமே, உன் யஜமானனான ஜீவனுக்கு பிரியம் செய்யவேண்டுமென்று நீ எண்ணினால், ஸதாகாலமும் நரஹரியை பூஜை செய். பிரதிபிம்பத்திற்கு அலங்காரம் செய்யவேண்டுமென்கிற புத்திசாலி பிம்பத்திற்குத் தான் அலங்காரம் செய்வான்” என்று வெகு அழகாக எடுத்துக்காட்டி யிருக்கிறார்கள்.

### 3. ஈசனை எப்படி ஸந்தோஷப்படுத்துவது.

இதற்குமேல், ஈசுவரனுக்கு எவ்விதமாக ஸந்தோஷத்தை ஏற்படுத்துவது, என்ற கேள்வி ஏற்படுகிறது. ஸந்தோஷம் என்பது ஒருவனுக்கு மிகவும் பிரியமான வஸ்து கிடைத்தால் ஏற்படும், அல்லது அவனிடமிருந்த துக்க ஜனகமான தோஷம் நிவிருத்தியானாலும் ஏற்படும். தவிரவும், அந்த பிரியமான வஸ்து முன்னமே தன்னிடமிருந்து, அதையே ஒருவன் எடுத்துக்கொடுத்தால் ஸந்தோஷம் ஏற்படாது. பிரியமாயிருப்பதுடன் அடையப்படாததாகவும் இருக்க வேண்டும். ஈசுவரன் எவ்வித தோஷமுமற்றவன், அபஹதபாப்மா, விசோகன், என்று வேதங்களெல்லாம் கோஷிக்கிறபடியால் அவரிடத்தில் நம்மால் நீக்கக்கூடியதாக என்ன துக்கமிருக்கிறது? அவர் ஸத்யகாமன், ஆப்தகாமன், என்றும் அதே வேதங்கள் சொல்வதால் அவருக்குப் பிரியமாயும் அடையப்படாததாயும் உள்ள பதார்த்தம் எது? அப்படியே அவரிடம் துக்கமிருந்தால், அதை நீக்கிவைக்க நமக்கு சக்தி ஏது? அப்படியே அவருக்கும் அகப்படாததாக ஒருபதார்த்தம் இருந்ததேயானால், அதை ஸம்பாதித்துக்கொடுக்க நம்மிடம் சக்தி ஏது? இவ்விதமிருக்கையில் நாம் எதை அவரிடம் கொடுத்து அவரை ஸந்தோஷிப்பிக்க முடியும்? நிரதிசயமான ஐசுவர்யம் அவரிடம் ஸ்வபாவ லக்ஷணமாக இருக்கும்போது அவரிடம் இல்லாத வஸ்து எது?

மூர்த்தித்ரயத்தில் உமாபதியான பரமேசுவரனை கவனித்துப் பார்ப்போம். நம்மிடம் இருக்கும் தங்கத்தை அவரிடம் கொடுத்து அவரை ஸந்தோஷப் படுத்துவோமென்றால், ஸ்வர்ணமயமான மேருபர்வதத்தையே அவர் திரிபுர ஸம்ஹாரகாலத்தில் வில்லாக வளைத்து கையில் ஏந்தியவர். அவருக்கு நாம் கொடுக்கக்கூடிய ஸ்வர்ணம் எம்மட்டு? அவருக்கு எதற்கு? அதினால் அவருக்கு ஸந்தோஷம் எப்படி ஏற்படும்? என்னவோ திரிபுர ஸம்ஹார காலத்தில் கையில் பிடித்திருக்கலாம், இப்பொழுது அவரிடம் என்ன இருக்கிறது, வெள்ளியையாவது கொடுப்போம் என்றால், அவர் வாஸஸ்தலமே வெள்ளியால் செய்த கைலாஸ பர்வதம். நவ நிதிகளுக்கும் அதிபதியான குபேரன் ஸமீபத்தில் அத்யந்த மித்ரனாகவும் தாஸனாகவும் காத்துக்கொண்டிருக்கிறான். எவ்வளவோ சிரமப்பட்டு அமிருத மதனம் செய்த காலத்தில் கிடைத்த கல்பக விருக்ஷம், காமதேனு, சிந்தாமணி, இவைகளை தனக்கு வேண்டும் என்று இந்திரன் எடுத்துக்கொண்டான். அந்த இந்திரனும் எந்த அஷ்டமூர்த்தி ஸ்வரூபனான ஈசுவரனுக்கு ஏகதேசமோ, எவருடைய பிரபாவத்தால் ஸகல தேவதைகளும் ஹாலாஹல விஷஜ்வாலையிலிருந்து விடுவிக்கப்பட்டு தன் நிலையை அடைந்தார்களோ, அந்த பகவானுடைய கிருஹத்தில் ஒரு கல்பக விருக்ஷம்தானா உண்டு? ஒரு காமதேனுதானா உண்டு? ஒரு சிந்தாமணிதானா உண்டு? கணக்கிலடங்காமல் கூட்டம் கூட்டமாக இருக்கும். ஒரு கல்பக விருக்ஷம்

இருந்தால் போதும், ஒரு காமதேனு இருந்தாலும் போதும், ஒரு சிந்தாமணி இருந்தாலும் போதும், நமக்கு வேண்டியதெல்லாம் கிடைக்கும். இந்த மூன்றும் சேர்ந்திருப்பது மாத்திரமில்லாமல் எண்ணிக்கைக்கு அடங்காமல் கூட்டம் கூட்டமாக ஒருவன் கிருஹத்தில் இருந்தால் அவனுக்குக் கிடைக்காத பதார்த்தம் எது? அப்பேர்பட்டவனுக்கு தரித்திர சிகாமணிகளான நாம் எதைக்கொடுத்து ஸந்தோஷிப்பிக்கலாம்? பாஹ்யமான ஸுகஸாதனங்கள் எத்தனை இருந்தாலும் மனம் குளிர்ந்திராதவரை ஸந்தோஷம் ஏற்படாது. அதற்காக நாம் ஏதாவது செய்து கொடுத்து அவருக்கு குளிர்ச்சி உண்டு பண்ணுவோமே என்று நினைக்கலாம். சீத கிரணனுகவும் மனதுக்கு அதிதேவதையாகவும் இருக்கிற சந்திரனையே அவர் சிரஸில் தரித்துக்கொண்டிருக்கும்போது நாம் அவருக்குச்செய்யக்கூடிய உபசாரம் என்ன? தவிரவும், ஜகத்தில் ஏற்படக்கூடிய ஸகல மங்களங்களும் அவருடைய பாதாரவிந்த ஸேவையினுலேயே ஏற்பட வேண்டியிருப்பதால், அவருக்கு மங்களம் உண்டு பண்ண நமக்கு சக்தி ஏது? ஸ்வரூபத்திலும், தான் மங்கள மூர்த்தியாகவே இருப்பதால் சிவன் என்ற நாமதேயத்தையும் தரித்திருக்கிறுர். அவரிடம் இல்லாத ஒரு மங்களத்தை நாம் உண்டுபண்ணி அதனுல் அவருக்கு ஸந்தோஷமேற்படும்படிச் செய்கிறோம் என்று நினைப்பது மூடத்தனம். இப்படியெல்லாம் யோசித்துப் பார்க்கும்போது எந்த பதார்த்தத்தை

நாம் கொடுக்கிறது? ஈசுவரனிடத்தில் இல்லாத பதார்த்தம் ஒன்றுமில்லாததால் அவருக்கு ஒன்றைக் கொடுத்து திருப்தி செய்து ஸந்தோஷம் அடையப் பண்ணி அதன்மூலமாக பிரதிபிம்ப பூதர்களான நமக்கு ஸந்தோஷம் எப்படி ஏற்படுத்திக் கொள்ளமுடியும், அஸாத்தியமான கார்யமாகத் தோன்றுகிறதே, என்று தோன்றும். அப்படியே இருந்துவிட்டால், ஈசுவர னுக்கு ஸந்தோஷம் ஒரு காலத்திலும் எவ்வகையிலும் ஏற்பட ஹேதுவில்லாமல் போய்விடும். நமக்கும் ஸந் தோஷம் ஏற்பட ஹேதுவில்லாமல் போய்விடும். ஆகையால் நாம் மறுபடியும் ஆலோசனை செய்ய வேண்டும்.

### 4. ஈசன் அபேக்ஷிக்கும் பதார்த்தம்.

ஈசுவரனிடம் இல்லாததும், அவருக்குப் பிரிய மானதும், அவர் தனக்குக் கிடைக்க வேண்டுமென்று இச்சைப்படுவதும், நம்மிடம் இருப்பதும், நாம் கொடுக்கக் கூடியதுமான பதார்த்தம் ஏதாவது இருக் கிறதாவென்று கண்டுபிடிக்க வேண்டும். அதை அவ ரிடம் அர்ப்பணம் செய்தாலொழிய நமக்கு ஸந்தோ ஷம் ஏற்பட வழியில்லையென்று தெளிவாய்த் தெரிவ தால், அந்தப் பதார்த்தம் என்னவென்று கட்டாய மாய்த் தெரிந்துகொள்ள வேண்டும். அவ்விதமான பதார்த்தம் நம்மிடம் கிடையவே கிடையாது என்று அதைர்யப்பட வேண்டாம். நம் ஆசார்யரே கருணை கூர்ந்து அப்பதார்த்தத்தை நமக்குக் காட்டிக்கொடுத் திருக்கிறார்கள். அப்பதார்த்தமே நம் மனஸ் ஆகும்.

करस्थे हेमाद्रौ गिरिश निकटस्थे धनपतौ
गृहस्थे स्वर्भूजामरसुरभिचिन्तामणिगणे ।
शिरस्थे शीतांशौ चरणयुगलस्थेऽखिलशुभे
कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥

நம்முடைய மனது ஈசுவரனிடத்தில் இல்லை என்பது நமக்கெல்லோருக்கும் பிரத்யக்ஷமாய்த் தெரிந்த விஷயம். நம் மனது அவரிடம் இருந்ததேயானால் நமக்கு துக்க லேசமும் ஏற்பட நியாயமில்லாததினாலும், நமக்கு துக்க ஸம்பந்தம் பிரத்யக்ஷமாய்த் தெரிகிற படியாலும், நம் மனது ஈசுவரனிடமில்லை என்று அனுமானத்தினாலும் தெரிந்துகொள்ளலாம். 'இவன் தன் மனதை என்னிடம் வைக்கமாட்டான்' என்று மிகவும் ஆவலுடன் கருணாமூர்த்தியான ஈசுவரன் ஸதா எதிர்பார்த்துக்கொண்டிருப்பதால், நம் மனதை அவருக்கு அர்ப்பணம் செய்யும் விஷயத்தில் அவருக்கு ஸந்தோஷம் நிச்சயம் ஏற்படுமென்று தெரிகிறது. ஆகையால் ஈசுவரனுக்கு பிரியமானதும் அடையப் படாததுமான இந்த நம் மனதை அவருக்குக் கொடுத்துவிட்டால், அவருக்கு ஸந்தோஷம் ஏற்படு மென்பதிலும், அதன் மூலமாக பிரதிபிம்பர்களான நமக்கும் ஸந்தோஷம் ஏற்படும் என்பதிலும், கொஞ்சமேனும் ஸந்தேஹம் கிடையாது.

தவிரவும், ஒருவனுக்கு ஒரு பதார்த்தம் பிரியமாயிருந்தாலும் அது அவனுக்கு ஸுலபமாய் அகப்படக் கூடியதாயிருந்தால் அதனிடத்தில் அலக்ஷ்ய புத்தி

ஏற்படக் கூடியது ஸகஜம். அப்படியே அதிகமாகக் கிடைக்கக் கூடியதாக இருந்தாலும் ஸந்தோஷம் குறைவுதான். எப்படியென்ருல், ஒருவனுக்குப் பணம் தேவையென்று தோன்றும்போது நிஸ்ஸந்தேஹமாய் கேட்டனுப்பிய இடத்திலிருந்து கிடைக்கும் என்ற தைரியமிருந்தால், அந்தப் பண விஷயமாக அவனுக்கு பிரியமிருந்தாலும் ஆவல் இராது. அப்படியே, கேட்ட வுடன் கொடுக்கக் கூடியவர்களாக பத்துப் பேர்கள் இருந்துவிட்டாலும், அது விஷயத்தில் விசேஷ ஸந்தோஷத்திற்கு இடம் கிடையாது. ஆனல், ஒரு தரித்திரன், தான் யாரிடம் கேட்டனுப்பினலும் கொடுக்கமாட்டார்கள், அப்படி யாரேனும் கொடுத் தாலும் மிக உதார குணமுள்ள யாராவது ஒருவன் கொடுத்தால் உண்டு, என்றிருக்கும் ஸமயத்தில் எதிர் பாராமல் ஒருவன் கொண்டுவந்து கொடுத்துவிட்டால், அந்த தரித்ரனுக்கு விசேஷமான ஸந்தோஷம் ஏற்படு மென்பதில் என்ன ஸந்தேஹம்? அதேமாதிரி, ஈசுவரன் எத்தனையோ தடவை ஜகத்திலுள்ள எல்லோரிடத் திலும் "தங்கள் மனதை என்னிடம் கொடுங்கள், கொடுங்கள்" என்று வற்புறுத்திக் கேட்டும்கூட ஒரு வரும் கொடுக்கத் தயாராக இல்லாமலிருக்கும்போது, யாரோ ஒருவன் பூர்வ புண்ணிய பரிபாகத்தினல் அவ் விதம் தன் மனதை அவரிடம் அர்ப்பணம் செய்தால் ஈசுவரனுக்கு விசேஷமான ஸந்தோஷம் ஏற்படுமென் பதில் என்ன ஸந்தேஹம்? அநேகர்கள் ஸம காலத் தில் அப்படி அர்ப்பணம்செய்து அதனல் ஈசுவரனுக்கு

அதுவிஷயமாக அனுதரவு ஏற்பட்டுவிடுமோ என்ற ஸந்தேஹம் கொஞ்சமேனும் இந்தக் காலத்தில் வேண்டியதில்லை. ஆகையால் போட்டிக்கு இடமன்னியில் இருப்பதால், நம் மனதை அவரிடம் அர்ப்பணம் செய்வதற்கு இதுவே சரியான காலம்.

### 5. இதுவே நல்லகாலம்.

நாம் லோகவியவஹாரத்தில் கூடப்பார்த்திருக்கிறோம். விசேஷமான பரீக்ஷைகளில் தேறினவர் தத்காலம் அநேகர் இருப்பதால், அவர்களுக்குள் தெரிந்தெடுத்து உத்தியோகம் கொடுக்க ஸாத்தியமில்லாமல், இன்னும் விசேஷ யோக்யதை ஸம்பாதிக்க வேண்டும் என்றும் மற்றவர்களுக்கு உத்தியோகமில்லையென்றும், ஸர்க்காரில் சொல்லும்படி ஏற்பட்டிருக்கிறது. கொஞ்ச நாட்களுக்குமுன் பரீக்ஷையில் தேறினவர்கள் இவ்வளவு பேர் கிடையாது. ராஜபாஷை தெரிந்தவர்கள் மிகவும் குறைவு. ஆகையால், தத்காலம் விசேஷ யோக்யதை பெற்றவர்களுக்குக்கூட அகப்படாத உத்தியோகத்தை யெல்லாம் அவர்களுக்கு அப்பொழுது கொடுத்திருக்கிறார்கள். அதற்குக்காரணம் உத்தியோகத்தை அபேக்ஷிக்கிறவர்கள் அந்தக்காலத்தில் மிகவும் குறைவு. ஸர்க்காருக்கு எப்படியாவது கார்யம் நடக்கவேண்டியிருந்தது. அதனால் விசேஷமான பரீக்ஷைகளன்னியிலேயே அவர்களை நியமித்துக் கொண்டார்கள். அதேமாதிரி, ஈசுவரனுடைய கிருபைக்குப்பாத்திரர்களாக கிருத, திரேதா, துவாபர யுகங்களில் அநேகம்பேர்கள் இருந்திருந்தார்கள்.

ஆகையால் அவர்களுள் இன்னும் விசேஷமான யோக்யதை ஸம்பாதித்துக் கொண்டவர்களுக்குத் தான் ஈசுவரானுக்ரஹம் பூர்ணமாகக் கிடைக்கும் என்று தெரிந்து, அவர்கள் விசேஷமான தபஸ், யாகம் முதலானவைகளைச்செய்து ஈசுவரனை ஸந்தோஷிப்பித்தார்கள். இந்தக்காலத்தில் ஈசுவரானுக்ரஹம் வேண்டுமென்று அபேக்ஷிக்கிறவர்களே மிகவும் ஸ்வல்பம். ஆகையால் யாராவது ஒருவன் அபேக்ஷித்தால், முன்மாதிரி இந்த யோக்கியதை வேண்டும், அந்த யோக்கியதை வேண்டும், என்று பகவான் எதிர் பார்த்தால், அந்த ஒருவனும்கூட ஸமீபத்தில் வரவே மாட்டான். அதை உத்தேசித்து இந்தக்கலியுகத்தில் இன்னது இன்னது செய்தால் போதும் என்று பகவான் மிகவும் ஸங்கிரஹப்படுத்திவிட்டார்.

அப்படி ஸங்கிரஹப்படுத்தி இருக்கும்போதும் ஒருவரும் அவரிடம் நெருங்கமாட்டேன் என்று சொன்னால், தயாமூர்த்தியான அவருக்கு எவ்வளவு வருத்தம் இராது? இப்படியிருக்கும் காலத்தில் யாரேனும் ஒருவன் மனப்பூர்வமாய் அவரை அண்டினால், அவருக்கு ஏற்படக்கூடிய ஸந்தோஷத்திற்கும் அளவு உண்டோ? ஆகையால் விசேஷ யோக்கியதை யன்னியில் அதிகமான சிரமமன்னியில் ஈசுவரனுடைய பிரஸாதத்தை அடைய இதுவே சரியான காலம். இதையும் நாம் உபயோகப்படுத்திக் கொள்ளாமல் போனால் நம்மைவிட மூடர்கள் கிடையாது. ஆகையால் நம் மனதை ஈசுவரனுக்கு அர்ப்பணம் செய்து

அவரை ஸந்தோஷிப்பித்து அதன் மூலமாய் நாமும் ஸந்தோஷம் அடையவேண்டும். இதைத்தவிர வேறு வழி கிடையாது. ஈசுவரனும் நாம் செய்யும் அர்ப்பணத்தை ஒப்புக்கொண்டு, நமக்கு அப்யுதயமோ நிச்ரேயஸமோ, ஸகலவித புருஷார்த்தங்களையும் கொடுக்க ஸித்தமாயிருக்கிறார்.



## அத்யாயம் 10.

## பக்தி.

### 1. பக்தியில் முதல்படி

பக்தி அல்லது பகவத்சரணாகதி என்பதை ஸ்ரீமது ஸூதன ஸரஸ்வதி ஸ்வாமிகள் மூன்று படிகளாகப் பிரித்துக்காட்டியிருக்கிறார்கள்.

'तस्यैवाहं, ममैवासौ, स एवाहं, इति त्रिधा।'

"நான் பகவானைச் சேர்ந்தவன்," "பகவான் என்னுடையவர்," "நானே அவர்," என்று சொல்லுகிறார்கள். பகவானிடம் நெருங்க நெருங்க மனோபாவம் பலப்பட்டு இம்மூன்று விதமான பாவனைகளும் கிரமமாக ஏற்படுகின்றன. ஒருவீட்டில் தகப்பனார் சொன்னபடி கேட்டுக்கொண்டு பயந்து நடந்துகொண்டிருக்கிற பையன், கொஞ்சநாளான பிறகு இவனுடைய நல்ல குணங்களையும் யோக்கியதையையும் கண்டு இவனிடமே குடும்பப் பொறுப்புகளை அநேகமாய் தகப்ப

ஞர் விட்டுக்கொடுத்துப் பார்க்கச் சொல்லும்போது, நான் சொல்வதற்கு அன்னியதாவாக தகப்பனார் சொல்லமாட்டார், நான் செய்வதே ஸரியென்று ஒப்புக்கொள்வார், என்ற எண்ணம் அதே பையனுக்கு வந்துவிடும். இன்னம் கொஞ்சம் பெரியவனுகி எல்லாப் பொறுப்புகளையும் குறைவன்னியில் இவனே நிர் வஹிப்பானென்ற எண்ணம் தகப்பனாருக்கு வந்து விட்டதேயானுல் தான் இனி ஒரு கார்யத்திலும் தலை யிடாமலிருந்துகொண்டு எல்லாக் கார்யங்களையும் பையனையே பார்க்கச்சொல்லி குடும்பத்திற்கே பையன்தான் யஜமானன் என்று தோன்றும்படி ஏற் பட்டு விடுகிறதில்லையா? பராதீனமாயிருக்கும் ஸ்திதி யில் "நான் அவனைச்சேர்ந்தவன்" என்றும், ஸ்வாதீ னம் ஏற்பட்டும் பேதபுத்தியிருக்கும் வரையில் "அவன் என்னைச் சேர்ந்தவன்" என்றும், ஸ்வாதீனம் பூர்ண மாக ஏற்பட்டு பேதபுத்தி நிவிருத்தியாகும்போது "அவனே நான்" என்றும் அனுபவம் ஏற்படும். இந்த மனுேபாவங்களையே ஈசுவர விஷயமாக ஏற்படும் போது வரிசையாக கர்மயோகம் என்றும் பக்தியோகம் என்றும் ஞானயோகம் என்றும் சாஸ்திரக்காரர்கள் வியவஹரிக்கிருர்கள்.

நாம் இப்பொழுதிருக்கிற நிலைமையில் ஈசுவரனை நம்மைச்சேர்ந்தவன் என்று ஸ்வாதீனம் பாராட்டவா வது, அதற்கும் மேல்படியான ஈசுவரனே நான் என்ற பாவனை வைத்துக்கொள்ளவாவது. கொஞ்சமேனும் அர்ஹர்களாக இல்லை. ஆகையால் நாம் பக்திமார்க்

கத்தில் பிரவிருத்திக்கத் தலைப்பட்டால் முதலாவது படியில் வேண்டுமானால் கொஞ்சம் கால் வைத்துப் பார்க்கலாமே தவிர அதற்குமேல் ஆசைப்படுவது பிரயோஜனமில்லை.

இந்த முதலாவது படியான பக்தியைத் தான் ஸ்ரீமத் ஆசார்ய பாதர்கள்

सत्यपि भेदापगमे नाथ तवाहं न मामकीनस्त्वम् ।
सामुद्रो हि तरङ्गः क्वचन समुद्रो न तारङ्गः ॥

என்கிற சுலோகத்தில் சொல்லியிருக்கிறார்கள். அதாவது, ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதமில்லையென்று சொன்னாலும், ஜீவன் ஈசுவரனைச் சேர்ந்தவன் என்று சொல்லலாமே தவிர, ஈசுவரன் ஜீவனைச் சேர்ந்தவன் என்று சொல்வது நியாயமில்லை. அலை ஸமுத்திரத்தைச் சேர்ந்ததென்று சொல்லலாமே தவிர ஸமுத்திரம் அலையைச் சேர்ந்ததென்று யாரும் சொல்ல மாட்டார்கள். ஜீவன் ஈசுவரனுக்கு அம்சமேயொழிய ஒருக்காலும் ஈசுவரன் ஜீவனுக்கு அம்சமாகமாட்டான். ஏனென்றால் எப்பொழுதுமே கார்யம் காரணத்தைத்தவிர வேறில்லை என்று சொன்னால் ஸரியாகுமேயொழிய, காரணம் கார்யத்தைத்தவிர வேறில்லை என்று சொல்வது நியாயமாகாது. வியாஸ ஸூத்திரத்திலும் ஜகத்துக்கு பிரஹ்மத்துடன் "அநந்யத்வம்" வேற்றுமையின்மை சொல்லப்பட்டிருக்கிறதே தவிர, பிரஹ்மத்திற்கு ஜகத்துடன் "அநந்யத்வம்" வேற்றுமையின்மை சொல்லப்படவில்லை. வியாபகம் காரணம்

வியாப்யம் கார்யம். ஆகையால் காரணமன்னியில் கார்யம் இருக்கமுடியாது. கார்யமன்னியில் காரணம் இருக்கமுடியும். வாஸ்தவத்தில் ஜீவனுக்கும் ஈசுவரனுக்கும் பேதம் தோன்றுவது உபாதியினுல்தான். ஜீவனுக்கு லக்ஷணம் மலின ஸத்வ உபாதி விசிஷ்டன் என்றும், ஈசுவரனுக்கு லக்ஷணம் சுத்த ஸத்வ உபாதி விசிஷ்டன் என்றும், சொல்வார்கள். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் ஸாதனங்களை அனுஷ்டானம் செய்து மலின தோஷத்தைப் போக்கடித்துவிட்டால் மலின ஸத்வமாயிருந்த உபாதியே சுத்த ஸத்வமாகி விடும். அவித்யையே மாயையாகிவிடும். ஆகையால் தோஷரஹிதமான ஜீவனே ஈசுவரன் என்று சொல்வதில் பிசகில்லை. ஆனுல் நமக்கு ஸாதாரணமாய் ஸ்தூலமாயிருக்கிற சரீராதிகளிலேயே நான் என்னுடையது என்ற அபிமானம் திருடமாக இருந்து மேலிட்டு நிற்கும் ஸ்திதியில் உபாதிகளுக்கு அதீதமான ஜீவனின் நிலமையோ அவனுக்கும் பிரஹ்மத்திற்கும் உள்ள அபேதமோ எப்படித்தோன்றமுடியும்? சரீராதிகளில் அஹங்கை மமதை தீவ்ரமாயிருக்கும்போது நான் ஈசுவரனைச் சேர்ந்தவன் என்ற முதல்படியே ஸித்திக்காது. அஹங்தை மமதை தளரவாரம்பித்து நம்முடைய சரீராதிகள் நம்மைச் சேர்ந்ததல்ல, ஈசுவரனையே சேர்ந்ததென்று ஒரு வித த்ருடமான மனுேபாவம் ஏற்பட்டால்த்தான் நாம் பக்தியின் முதலாவது படியில் கால்வைக்க யோக்கியதையுள்ளவர்களாவோம்.

நாமே ஸ்வதந்திரர்கள், நாம் யாருக்கும் பராதீனர்கள் இல்லை, என்ற பாவனை நமக்கு இருந்துவருகிறது. ஒருவன் சிரமப்பட்டு ஸம்பாத்தியம் செய்து வீட்டுக்கு வேண்டிய ஸாமான்களைத் தட்டன்னியில் வாங்கிக் கொடுத்து வேலைக்கு அநேகம் பரிசாரகர்களை வைத்துக்கொண்டிருந்தாலும் சில வேளைகளில் போஜனம் தயாராகாமல்போனால் காத்துக்கொண்டிருக்க வேண்டியதாய்த்தானிருக்கிறது. இந்த விஷயத்தில் கூட நினைத்தபடி நடத்திக்கொள்ள ஸாமர்த்தியமில்லாத நாம் எந்த முறையில் ஸ்வதந்திரர்களென்று சொல்லிக் கொள்ள முடியும்? தனக்கு ஏதோ ஸ்வாதந்திரியமிருப்பதாக நினைப்பது சுத்தப் பிரமமே தவிர வேறு இல்லை. ஸுகப் பிராப்தி வேண்டுமென்றும் துக்கம் நிவிருத்தியாக வேண்டுமென்றும் நமக்கு தீவிரமாய் அபிப்பிராயமிருந்தும், அதற்காக எவ்வளவோ விதமாக பிரயத்தினம் செய்தும், பலன் ஏற்படாமல்போகிறது. அதினாலேயே நமக்கு ஸ்வாதந்திரியம் கிடையாதென்று நன்கு தெரிந்துகொள்ள வேண்டாமா? இவ்விதமாக நமக்கு ஸ்வாதந்திரியம் இல்லையென்று ஏற்பட்டால், நாம் யாருக்கு பராதீனம் என்று ஆலோசிக்கும்போது ஸர்வ ஜகந் நியந்தாவான ஈசுவரனுக்கே பராதீனம் என்ற எண்ணம் உசிதமாகும். ஆகையால் நமக்கும் ஈசுவரனுக்கும் ஒருவித ஸம்பந்தமுண்டு, நாம் ஸ்வதந்திரர்கள் இல்லை, அவர் நியந்தா, நாம் நியம்யர்கள், அவர் யஜமானன், நாம் வேலைக்காரர்கள், அவர் வியாபகர், நாம் அம்சங்கள், என்று இவ்விதமான

ஸம்பந்தமிருப்பதாகத் தெரிந்துகொண்டு அனுபவத்திற்குக் கொண்டுவருவதே நமக்கெல்லாம் இப்பொழுது அவசியமானதும் முக்கியமானதுமான கார்யம். அதையேதான் "நான் அவனைச் சேர்ந்தவன்" என்ற முதல்படியாக மேலே சொல்லப்பட்டது. இதையே கர்மயோகம் என்பார்கள்.

## 2. பக்தியில் மூன்று விதம்.

"இது ஈசுவரனுடைய ஆக்ஞை, நாம் அவருக்கு தாஸர், அவருடைய ஆக்ஞையை நிறைவேற்ற நாம் கட்டுப்பட்டவர்கள், ஆகையால் கர்மாவைச் செய்கிறோம், இதனால் ஏற்படும் பலன் எனக்காக இல்லை" என்கிற எண்ணம் வேண்டும். எண்ணத்திலுள்ள தாரதம்யத்தை வைத்து இப்பக்தியையும் மூன்று விதமாக பிரித்திருக்கிறார்கள். தாமஸ பக்தி, ராஜஸ பக்தி, ஸாத்விக பக்தி, என்று சொல்வார்கள். பகவான் ஒருவர் இருக்கிறார் என்று நம்பி, அவரிடம் தனது சத்துருக்கள் கெடுதலடைய வேண்டுமென்று தேங்காய் உடைத்துப் பிரார்த்திப்பது தாமஸ பக்தி. அது கொஞ்சமேனும் நல்லதல்ல. சத்ருவுக்கும் நல்லபுத்தி உண்டாகவேண்டுமென்று பிரார்த்தித்துக் கொள்ளட்டுமே! சத்ருவுக்கும் நல்லபுத்திவந்தால் அவன் தனக்கு மித்திரனாகி ஸஹாயமும் செய்வானே! அவன் தனக்கு அனுகூலமாயிருந்தால் போதுமல்லவா! அவன் கெடவேண்டுமென்று நினைப்பதால் இவனுக்கே புத்தி கெடுகிறதல்லவா? ஆகையால் தாமஸ பக்தி அதமம், மிகவும் இகழத்தக்கது.

சொந்தப் பிரயோஜனத்தையே கருதி பலத்தில் ஆசையோடு பகவானிடம் பக்தி செலுத்துவது ராஜஸ பக்தியாகும். அதையே காம்ய பக்தி என்றும் சொல்வார்கள். இந்த காம்ய பக்தியில் நஷ்டம் அதிகம். விதிமுறை தவறி உபாஸித்தால், உத்தேசித்த பலன் கிடையாது. நிர்பந்தம் மிகுதி. அத்துடன் ஏதேனும் ஒரு அம்சத்தில் குறை ஏற்பட்டுவிட்டால் விபரீத பலனும் உண்டாகும். பகவானை உபாஸித்து எனக்கு பசு வேண்டும், புத்திரன் வேண்டும், பணம் வேண்டும், என்று ஸாமான்யமான லௌகிக வஸ்துக்களைக் கேட்பது ஸரியல்ல. ஸ்வர்க்க ஸுகம் பெறவேண்டும் என்ற ஆஸ்தையுடன் ஜ்யோதிஷ்டோமம் முதலான யாகம் செய்து உபாஸிப்பதும் இந்த மத்யம பக்தியில் தான் சேரும். இந்த பலன்கள் எல்லாம் வந்தாலும் எத்தனை நாளிருக்கும்? இவைகளுக்கு தீர்க்காயுஸ் உண்டா? உடனுக்குடன் அழியக்கூடியவைகளே. திரும்பத் திரும்ப ஈசனிடம் இவைகளை கேட்டுக் கொண்டே இருக்க வேண்டும். அவ்விதமே கேட்பதாக வைத்துக்கொள்வோம். நமக்கு எவ்வளவு பொருள்கள் தேவையென்பதை நாம் கணக்கிட்டு வைத்திருக்கிறோமா? நமக்கு வரக்கூடிய விபத்துக்குத் தான் ஒரு கணக்கு உண்டா? எதெதுகள் வேண்டும் என்று கேட்டுக்கொள்ள முடியும்?

ஆதலால் நாம் பகவானிடம் கெட்டதை நீக்கி நல்லதுகளையெல்லாம் பெற்றுக்கொள்வதற்கு வேறொரு வழியிருக்கிறதா என்று கவனிக்க

வேண்டும். அதுதான் ஸாத்விக பக்தி மார்க்கம். ஸாத்விக பக்தியினால் திருப்தியடையும் ஈசுவரன் எல்லா விஷயத்திலும் அனுக்ரஹம் செய்கிறார். மஹாராஜாவினிடம் போய் ஒவ்வொரு பொருளாகக் கேட்டுக்கொள்வதைப் பார்க்கிலும், ஒரு குறிப்பிட்ட சம்பளத் தொகைக்காக வேலை செய்வதைப் பார்க்கிலும், அவருடைய தயவுமட்டும் கிடைக்கும்விதமாய் ஸேவிப்பதே நல்லது. அதினாலேயே ஸகல லாபமும் கைகூடும். சம்பளத்திற்காக ஸேவிப்பவன் ஒருநாள் சிறிது தவறினாலும் அபராதமுண்டு. அதுபோலவே முன்சொன்ன ராஜஸ பக்தியில் ஈசுவர அபராதமுண்டு. ராஜாவின் அனுக்ரஹத்திற்காக மாத்திரம் வேலை செய்வோனுக்கு எவ்வித நிர்பந்தமும் ஸங்கடமும் கிடையாது. செய்த மட்டில் அரசன் திருப்தியடைவான். அதேமாதிரி காமனையன்னியில் பிரயோஜனத்தை எதிர்பாராமல் பகவானை வழிபடுவோர்களுக்கு ஒருவித ஸங்கடமும் ஏற்படாது, எப்பொழுதும் ஸுகமாயிருக்கலாம். எவ்விதப் பிரயோஜனத்தையும் கேளாமல் தினந்தோறும் அரசனிடம் சென்று அவருக்குப் பிரீதிகரமாக நடந்து வருகின்ற மனிதன் ஒருநாள் எக்காரணத்தாலேனும் அரசனிடம் போகாதிருப்பின், அரசன் உடனே தனது ஆளை அனுப்பி அவன் என்ன காரணத்தால் தன்னிடம் வரக்கூடவில்லை என்பதை விசாரிக்கச் செய்வார். அவனுக்கு சரீரத்தில் நோயுண்டானால் தனது ராஜாங்க வைத்தியர்களை அனுப்பி ஸௌக்கியமுண்டாக்கச் செய்வார். அதுபோலவே ஈசனிடமும்

நாம் பிரீதியுடன் ஸாத்விக பக்தி முறையில் பழகி ஒரு விதப் பிரயோஜனத்தையும் எதிர்பாராமல் நடந்து கொண்டால் நமக்கு ஒருநாளும் ஒரு குறையும் ஏற்படாது. அவரே நமக்கு வேண்டிய ஸௌகர்யங்களைச் செய்து கொடுப்பார். நாம் வேண்டாம் என்றாலும் நமது நன்மையிலேயே அவருடைய திருஷ்டி இருக்கும். "பிறசிந்தனைகளை விட்டு என்னிடமே மனம் செலுத்தியவர்களாக எவர்கள் என்னை இடைவிடாமல் உபாஸிக்கிறார்களோ, அவர்களுடைய யோக க்ஷேமத்தை நானே வஹிக்கிறேன்" என்று கீதையில் பகவான் வியக்தமாக வாக்களித்திருக்கிறார்.

### 3. நிஷ்காம உபாஸனை

உலகத்தில் ஸாமான்யனான ஒரு ராஜா தன்னிடம் ஸேவித்துவருகிற ஒரு மனிதனுக்கு தினம் படியளக்கிறான்; அவனது குடும்பத்தில் நடக்கிற கல்யாணம் முதலியவைகளுக்கு வேண்டிய பொருளுதவி செய்கிறான், மற்றும் எல்லாவித ஆதரவும் செய்கிறான். ஸர்வேசுவரனையே ஸேவிப்பவனுக்கு எது தான் கிடைக்கமாட்டாது? ஆதலால் ஸர்வேசுவரனிடத்தில் பிரயோஜனத்தை எதிர்பாராது எவ்வித பற்றுதலுமன்னியில் நிஷ்காமமாக பக்தி செய்வதே உத்தம பக்தியாகும்.

பலனில் ஆசைவைத்துச் செய்யும் ராஜஸ பக்திக்கும் இந்த ஸாத்விக பக்திக்கும் செய்யும் காலத்திலேயே வித்தியாஸம் உண்டு. ராஜஸ பக்தியில் மன

தில் பரபரப்பும் அவஸரமும் ஏற்படும், பொறுமை இராது. ஸாத்விக பக்தியில் ஸமாதானமும் பொறுமையும் இருக்கும். உலகத்தில் ஸந்தானத்தை விரும்பிய ஸ்திரீகள் அசுவத்த விருக்ஷத்தை பிரதக்ஷிணம் செய்தால் அபீஷ்ட ஸித்தியுண்டாகும் என்ற வாக்கியத்தை நினைத்துக்கொண்டு, ஒவ்வொரு பிரதக்ஷிணத்திலும் வயிற்றைத் தொட்டுப் பார்த்துக்கொண்டால் அப்பொழுதே ஸந்தானம் கிடைக்குமா? காலாந்தரத்தில்தான் ஏற்படும். அவஸரப்பட்டுப் பிரயோஜனமில்லை. அப்படியிருந்தாலும், ராஜஸ பக்தியுள்ளவர்கள் தாங்கள் நினைத்த பலன் உடனே கிடைக்கவில்லையே என்றுதான் அடிக்கடி நினைப்பார்கள். ஸத்கர்மாக்களை மனஸ்ஸமாதானத்துடன் செய்ய வேண்டுமென்பதே அவர்களுக்கு புலப்படாது. பலன் கிடைக்கவில்லையே என்று நினைத்து அடிக்கடி அசிரத்தையும் மேலிடும். சாஸ்திரங்களில் சொல்லியிருக்கிற கிரமப்படிப் பொறுமையுடன் செய்யமாட்டார்கள். உபதேசம் பெற்ற மந்திரங்களை ஏகாக்ரமான மனதுடன் ஜபிக்கமாட்டார்கள். உபதேசம் பெற்று எட்டு நாட்கள் ஆயினவே, இன்னும் பலிக்கவில்லையே, என்று நினைப்பார்கள். ஜபம் செய்யும்போது மனது மாத்திரம் எங்கேயோ போயிருக்கும். எப்படி ஸித்தி ஏற்படும்? மந்திரம் பலிக்கவில்லை என்று மாத்திரம் நினைத்து வெறுப்படைவார்கள்.

व्यग्रचित्तेन यज्जप्तं तज्जप्तं निष्फलं भवेत् ।

ஒருமைப்படாத சித்தத்துடன் செய்யும் ஜபம் நிஷ்

பலமேயாகும் என்பது சாஸ்திரத்தின் தீர்மானம். இதை ராஜஸ பக்தியுள்ளவர்கள் நன்கு கவனித்தால், ஸித்தியேற்படாத குற்றம் சாஸ்திரத்தைச் சேர்ந்த தல்லவென்று உணர்வார்கள்.

ஸாத்விக பக்தியில் உழைப்பு ஒரு நாளும் வீணாகப் போவது கிடையாது. அங்கு எல்லாம் அன்புடன் செய்யப்படுகிறது. எந்த அம்சமும் வீணாகப் போவது கிடையாது. ஏதேனும் தவறுதல் அகஸ்மாத்தாக ஏற்பட்டு விட்டாலும் தோஷமில்லை.

नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।

स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥

ஆகையால் ஈசனிடம் ஒன்றையும் கேளாமல் அனுக்ரஹம் மாத்திரம் போதும் என்று கேட்டுக்கொள்கிற ஸாத்விக பக்தனுடைய நிலையே மிகவும் மேலானது. அவ்வித மனோபாவம் வைத்துக் கொள்வது தான் புத்திசாலித்தனமுமாகும். எல்லாம் அதிலேயே அடங்கும். எல்லாம் அதினாலேயே கிடைக்கும். ஆனால் இந்த ஸந்தர்ப்பத்தில் ஒரு விஷயத்தில் வெகு கவனமாயிருக்கவேண்டும். ஸகாமமாக பகவானை உபாஸிப்பதைவிட நிஷ்காமமாக உபாஸிப்பது மேலாக இருப்பது மாத்திரமன்றி, அதனால் எல்லாப் பிரயோஜனங்களும் ஏற்பட்டே தீரும், **ஆகையால்** நிஷ்காமமாக உபாஸிக்கிறேன் என்று ஒருவன் நினைத்தானேயானால் இவ்வுபாஸனை நிஷ்காமமே யாகாது. வாஸ்தவமாக கவனித்தால் இவனுடைய காமம் ஸகாம

னுடைய காமத்தைவிடப் பெரிதானது. சம்பளம் பேசிக்கொண்டு ஒரு யஜமானனிடம் வேலை செய்கிறதைவிட, சம்பளம் பேசாமலே வேலை செய்தால் சம்பளம் பேசிக்கொள்கிறவன் அடையும் ஸௌகர்யங்களையும் அடைந்து ஜாஸ்தியான ஸௌகர்யங்களையும் அடையலாமென்று நினைத்து, சம்பளம் பேசிக்கொள்ளாமல் வேலை செய்பவனை ஜாஸ்தி ஆசைபிடித்தவன் என்றே சொல்லவேண்டும். அதேமாதிரி ஸகாம கர்மத்தைவிட பலன் நிஷ்காமகர்மத்திற்கு ஜாஸ்தியாக இருக்கிறதென்று தீர்மானித்துக் கொண்டு நிஷ்காமகர்மா செய்தால் அது நிஷ்காமகர்மாவே ஆகாது. அவ்விதம் செய்பவன் ஈசுவரனையே ஏமாற்றி விடலாமென்று நினைக்கிற அயோக்கியனே யாவான். ஆகையால் பொதுவாக ஈசுவரானுக்ரஹத்தைத் தவிர வேறு ஒருவித பலனிலும் நோக்கம் இருக்கக் கூடாது. ஈசுவரானுக்ரஹம் கிடைக்கவேண்டுமானால் நம்மிடம் பாபம் இருக்கக் கூடாது. இதை உத்தேசித்துத்தான் நமக்கு ஏற்பட்டிருக்கும் நித்ய கர்மாக்களை "எனக்கு ஏற்பட்டிருக்கிற ஸகல பாபங்களும் போய் ஈசன் பிரீதி யடைவதற்காக"

'ममोपात्तसमस्तदुरितक्षयद्वारा श्रीपरमेश्वरप्रीत्यर्थं'

என்ற ஸங்கல்ப புரஸ்ஸரமாக ஏற்படுத்தியிருக்கிறார்கள். பாபக்ஷயம் ஈசுவரானுக்ரஹம் இந்த இரண்டும் நமக்குக் கிடைத்தால் போதாதா? அதைக்கொடு, இதைக்கொடு, என்று எதற்காக கேட்கவேண்டும். உண்மையான பக்தர் முன்புக்கு பகவான் பிரஸன்ன

ராகி என்ன வேண்டுமென்று கேட்கும் ஸமயத்தில் 'எந்த ஜன்மத்தை யடைந்தாலும் உமது சரணரவிந்தங்களில் அசையாத பக்தி ஒன்றையே வேண்டுகிறேன்'' என்று கேட்டிருக்கிறார்கள்.

### 4. உத்தம பக்தி.

அந்த பக்தி ஈசனுக்காக இல்லை. நமக்காகத்தான். நம்முடைய சிரேயஸ்ஸை உத்தேசித்துத்தான் பக்தி செய்யவேண்டுமே தவிற அதினால் அவருக்கு ஆக வேண்டிய கார்யம் ஒன்றுமில்லை. பகவானை பசுபதி என்ற நாமத்தால் அழைத்து பக்தியை பசுமாடாக கல்பித்து நமது ஆசார்யார் சிவாநந்தலஹரியில் அழகாக ஒரு சுலோகம் சொல்லியிருக்கிறார்கள்.

अमितमुदमृतं मुहुर्दुहन्तीं
विमलभवत्पदगोष्ठमावसन्तीम् ।
सदय पशुपते सुपुण्यपाकां
मम परिपालय भक्तिधेनुमेकाम् ॥

வீட்டில் கறக்கின்ற பசு வேளைக்கு ஒருபடி இரண்டு படி கறக்கலாம். அமிதமாக அதாவது அளவற்று கறக்காது. கறந்தாலும் குறித்த காலத்தில்தான் கறக்கும். வேண்டுமென்கிறபோதெல்லாம் அடிக்கடி கறக்காது. கறந்தாலும் பால்தான் கிடைக்குமே தவிர ஸந்தோஷமாகிற அமிருதம் கிடைக்காது. மாட்டுத்தொழு அதிசீக்கிரம் குப்பையினாலும் மலத்தினாலும் வெறுக்கக் கூடிய ஸ்திதியில் வந்துவிடும்.

பக்தி என்ற பசுமாடு அளவற்ற ஸந்தோஷாமிருதத்தையே அடிக்கடி கறந்துகொண்டேயிருக்கும். அதைக் கட்டிவைக்க வேண்டிய இடம் பகவானுடைய நிர்மலமான பாதாரவிந்தங்களே யாகும். பசுமாடு வேண்டுமானுல் நாற்பது, ஐம்பதுரூபாய் கொடுத்தால் கிடைக்கலாம். இந்த பக்தியாகிற பசு கிடைக்கவேண்டுமானுல் அநேக ஜன்மங்களில் செய்த புண்ணிய விசேஷத்தினுல் கிடைக்கும். அதினுல் ஏற்படும் ஸந்தோஷாமிருதத்தைப் பருகவேண்டுமானுல் மிகவும் புண்ணியசாலியாக இருக்கவேண்டுமென்று சொல்லவும் வேண்டுமோ? அவ்வபூர்வமான பசு கிடைத்தாலும் கூட நாமாகவே அதை பரிபாலித்துவிடலாமென்று நினைப்பது பிசகு. பகவத் பாதாரவிந்தத்தில் கட்டிவைத்து அதை கிரமப்படி பரிபாலிக்கவேண்டிய பொறுப்பையும் பகவானே தான் வஹிக்கவேண்டும். அவ்விதம் பொறுப்பு வஹிப்பதில் பகவானுக்கு எவ்விதப் பிரயோஜனமும் கிடையாது. அவர் தயாமூர்த்தியாக இருப்பதினுலே நம் பிரார்த்தனைக்கிணங்கி அவர் நமக்காக இந்த பரிபாலனப்பொறுப்பை ஏற்றுக்கொள்வார். ஆகையால் நாம் "தான்" "தனது" என்ற எண்ணமன்னியில் எல்லாப்பொறுப்பும் பகவானுக்கே யென்ற பாவனையுடன் இருந்து வந்தோமேயானுல் அவரே நம் சிரேயஸ்ஸை கவனித்துக்கொள்வார். இவ்வித பாவனையே உத்தம பக்தியாகும். அதுவே ஸாத்விக பக்தி. நிஷ்காம கர்மாவினுல் மனது சுத்தமாகி நிஷ்காம பக்தியினுல் மனது ஸ்திரப்பட்டதேயானுல் ஆத்ம விஷயமான ஞானம் ஸுலபமாக அம்மனதில் பிரதிபலிக்கும்

# அத்யாயம் 11.

## உண்மையான ஞானம்.

### 1. அவித்யையே ஸம்ஸார காரணம்.

எல்லா தானங்களுக்கும் மேலானதாக ஞான தானத்தைச் சொன்னோம். அந்த ஞானமே ஸகல விதமான துக்க நிவிருத்திக்கும் காரணம் என்றும் சொன்னோம். அந்த ஞானம் என்பது என்ன என்று கொஞ்சம் விசாரிப்போம். பொதுவாக, ஞானம் என்பது அக்ஞானத்தை போக்கடிப்பது எதுவோ அது என்று சொல்லலாம். ஜகத்தில் நமக்குத் தெரியாத விஷயங்கள் எத்தனையோ இருக்கின்றன. நமக்கு முன் தெரியாத அநேக விஷயங்களையும் ஸமாசாரங்களையும் சொல்வதாக விருத்தாந்தப் பத்திரிகைகள் பிரதி தினமும் பிரசுரமாகிக்கொண்டு வருகின்றன. நமக்குத் தெரியாததைப் போதிப்பதால் இவையெல்லாம் ஞானம் என்று சொல்லலாமா? அக்ஞானத்தைப் போக்கடிக்கும் தன்மையிருப்பதால் இவையும் ஞானம் என்று சொன்னால் பிசகாகாது. ஆனால் அந்த அக்ஞானத்தைப் பற்றியாவது அந்த ஞானத்தைப்பற்றியாவது நமக்கு விசாரம் கிடையாது. எந்த அக்ஞானமிருந்தால் நமக்கு பாதகமோ அதை நிவிருத்தி செய்யக்கூடிய ஞானத்திற்காகத்தான் புத்திசாலியாய் இருப்பவன் பிரவிருத்தி செய்வான். விருத்தாந்தப் பத்திரிகைகள் மூலமாக நிவிருத்தியாவதாகச்

சொல்லப்படும் அக்ஞானம் நமக்கு இருந்துவருவதால் ஒருவித நஷ்டமுமில்லை. அவ்வித அக்ஞானத்தை நிவிருத்தி செய்துகொள்கிறவர்களுக்கு மற்றவர்களை விட யாதொரு விசேஷப் பிரயோஜனமும் ஏற்படுவதாகவும் தெரியவில்லை. ஆகையால், எவ்வித அக்ஞானமிருப்பதால் நமக்கு நஷ்டம் ஏற்பட்டு வருகிறது, எதை நிவிருத்தி செய்தால் நமக்கு துக்க ஹானியும் ஸுகப் பிராப்தியும் ஏற்படும், என்று கவனிக்க வேண்டியிருக்கிறது. அதுதான் ஆத்ம விஷயமான அக்ஞானம். அதையே அவித்யை என்றும் சொல்வார்கள். இந்த அவித்யைதான் ஸகலவித துக்கத்திற்கும் காரணம், அதை நிவிருத்தி செய்தாலொழிய நமக்கு துக்க நிவிருத்தி ஏற்படாது.

ஆத்ம ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாததே பெரிய பாபமாகவும் அதுவே ஸகல பாபங்களுக்கும் காரணமென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

योऽन्यथा सन्तमात्मानमन्यथा प्रतिपद्यते ।
किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

ஆத்மாவையே திருடின திருடனால் செய்யப்படாத பாபம் எது? என்று கேட்கிறார். திருட்டுத்தனம் என்றால், ஒருவன் சாமானை அவனுக்கு இஷ்டமில்லாத இடத்தில் சேர்ப்பிவித்தல், என்று சொல்லலாம். அப்படியே, ஆத்மாவிற்குச் சொந்தமான ஸத், சித், ஆனந்தம், என்கிற ஸ்வரூப குணங்களை ஆத்மாவிடமிருந்து எடுத்து அநாத்ம பதார்த்தங்களாகிய சரீராதி

களிடம் சேர்ப்பித்து அவைகளிடத்தில் ஆத்மபாவனை செய்தால், அவன் ஆத்ம சோரன் என்று சொல்வதில் என்ன ஸந்தேகம்? திருடின ஒருவனைப் பார்த்து "நீ திருடினுயா?" என்று கேட்டால், 'இல்லை' என்று பொய்தான் சொல்வான். அவனை யாராவது கண்டு பிடித்துவிடுவார்கள் என்று தெரிந்தால், அவர்களிடத்தில் கோபம் துவேஷம் ஏற்பட்டு கொலை வரை ஹிம்ஸைக்கும் தயாராய் விடுவான். ஆகையால் திருட்டுத்தனம் ஒன்றிருந்தால் மற்ற பாபங்களும் கூடவே வரும். அதேமாதிரி ஆத்ம விஷயமான திருட்டு அதாவது அக்ஞானம் இருந்துவிட்டால் ஸகலவித பந்தங்களும் தானே ஏற்பட்டுவிடும். இந்த அவித்யை தான் ஸகலவித அனர்த்தங்களுக்கும் விதை என்ற விஷயத்தை விஸ்தாரமாக விவேக சூடாமணியில் ஆசார்யார் எடுத்துச் சொல்லியிருக்கிறுர்கள்.

बीजं संसृतिभूमिजस्य तु तमो देहात्मधीरङ्कुरो
रागः पल्लवमम्बु कर्म तु वपुः स्कन्धोऽसवः शाखिकाः ।
अग्राणीन्द्रियसंहतिश्च विषयाः पुष्पाणि दुःखं फलं
नानाकर्मसमुद्भवं बहुविधं भोक्ताऽत्र जीवः खगः ॥

இந்த சுலோகத்தில் ஸம்ஸாரத்தை ஒரு விருக்ஷமாகக் கல்பிக்கப்படுகிறது. அந்த ஸம்ஸார விருக்ஷத்திற்கு பீஜம் விதை, தமஸ் அதாவது அக்ஞானமாகும். இந்த ஸம்ஸாரம் என்கிற விஷ விருக்ஷத்திற்கு விதை அக்ஞானம் என்று சொல்லப்படுகிறதே தவிர, அவ்விதம் விதை ரூபமாயிருக்கிற அக்ஞானம் அஜ்ஞி

என்று தான் சொல்லவேண்டும். நித்ய முக்தனும் சைதன்ய ஸ்வரூபியாயிருக்கிற ஆத்மாவுக்கு அக்ஞானத்தின் ஸம்பந்தம் எப்பொழுது ஏற்பட்டது என்று விசாரித்தால், பரமார்த்த திருஷ்டியில் எப்பொழுதுமே ஏற்பட்டிருப்பது கிடையாது என்று சொல்லுகிறோம். வியவஹார தசையில் அக்ஞானம் இருக்கிறதென்று சொல்லும்போது கூட, அதற்கு ஆதி எப்பொழுது என்று சொல்ல ஸாத்தியமில்லை. ஒரு ஞானம் எப்பொழுது ஆரம்பித்தது என்று சொல்ல முடியுமே தவிற, அதற்கு முன்னுள்ள அக்ஞானம் எப்பொழுது ஏற்பட்டது என்று சொல்லமுடியாது. சொல்லமுடியாது என்றால் நமக்குத் தெரியாது என்று அர்த்தமில்லை. வஸ்து ஸ்திதியிலேயே அனாதிதான். ஒரு குடத்தைப் பார்த்தால் அதன் ஞானம் இப்பொழுது உண்டாயிற்று என்று சொல்லலாம். அதற்கு முன்னிருந்த அந்த குடவிஷயமான அக்ஞானம் எப்பொழுது ஏற்பட்டது என்ற கேள்வியே அஸங்கதம். அதாவது, அந்த அக்ஞானத்தை அனாதி என்று தான் வியவஹரிக்க முடியும். அதேமாதிரி, ஸம்ஸார பீஜமாகிய அக்ஞானத்திற்கும் ஆதி யென்று ஒரு காலம் கிடையாது. முடிவு மாத்திரம் ஞானம் உதயமானவுடன் நிச்சயமாய் உண்டு.

தார்க்கிகர்களும் மற்றும் சில மத வாதிகளும் ஸம்ஸாரத்திற்குக் காரணம் அவித்யை என்று ஒப்புக்கொள்கிறதில்லை. ஆனால் அனாத்மாக்களான சரீராதிகளில் ஆத்மா என்ற பிரமம் ஸம்ஸாரத்திற்குக் கார

ணம் என்று சொல்கிறுர்கள். அவர்கள் சொல்லுகிற பிரமம் என்பதற்குக் காரணம் என்ன என்று கவனித்தால், அவித்யை என்றே முடிவாகும். ஒரு பதார்த்தத்தின் வாஸ்தவ ஸ்வரூபம் தெரிந்திருந்தால், அது விஷயமாய் பிரமம் ஏற்பட நியாயம் கிடையாது. ஆகையால் பிரமத்திற்குக் காரணம் அந்த பதார்த்த விஷயமான அக்ஞானமென்றே சொல்ல வேண்டும். அதேமாதிரி, ஆத்ம விஷயமான பிரமத்திற்கும் ஆத்ம விஷயமான அக்ஞானம் அதாவது அவித்யையென்பதுதான் காரணம் என்றே சொல்ல வேண்டும்.

## 2. ஸம்ஸார விருக்ஷம்.

அவித்யையாகிற பீஜத்திலிருந்து, சரீரத்தில் "நான்" என்கிற முளையேற்படுகிறது. देहात्मधीः अंकुरः சரீரம் என்பது ஸ்தூல சரீரம், ஸூக்ஷ்ம சரீரம், காரண சரீரம், என்று மூவகைப்படும். ஆனுல் அவித்யையே காரண சரீரமாகிவிட்டபடியால், முளையாகச் சொல்லப்படுகிற புத்திக்கு விஷயமானது ஸ்தூல ஸூக்ஷ்ம சரீரங்கள் மாத்திரம்தான். இவ்விரண்டு வித சரீரங்களிலும் ஆத்ம புத்தியேற்பட்டதேயானுல், அவைகளுக்கு நல்லதாகத் தோன்றுகிற விஷயங்களை ஆத்மாவுக்கும் நல்லதாக நினைத்து, அவைகள் தனக்கு வேண்டும் என்ற ராகம், அவைகளுக்கு அனுகூலமில்லாததென்று தோன்றுகிற விஷயங்களை ஆத்மாவுக்கும் அனுகூலமில்லாததென்று நினைத்து, அவைகள் தனக்குக் கூடாது என்ற துவேஷம், இந்த இரண்டும்

ஏற்படுகின்றன. ஆகையால், இவ்விரண்டையும் அம் முளையிலிருந்து வரும் தளிர்கள் என்று சொல்லலாம். ஆனால், ஸாதாரணமாய் ராகத்திற்கு இடமன்னியில் போகும்போது, பிரதிபந்தம் செய்யும் பதார்த்தத்தில் துவேஷம் ஏற்படுவதினால், துவேஷத்தை ராகத்திலிருந்து தனித்துச் சொல்லவேண்டியது அவசியமில்லை என்ற கருத்துடன் रागः पल्लवं "ராகம் தளிர்" என்று மாத்திரம் சொல்லப்பட்டிருக்கிறது. ஒரு மரம் வளரவேண்டுமானாலும் வாடி நசித்துப்போகாமலிருக்க வேண்டுமானாலும் ஜலத்தை எப்படி அபேக்ஷிக்கிறதோ, அப்படியே, இந்த ஸம்ஸார விருக்ஷமானது "கர்மம்" என்ற ஜலத்தை அபேக்ஷிக்கிறது. अम्बु कर्म கர்மம் குறையக் குறைய ஸம்ஸார விருக்ஷம் வாடும். ஸர்வ கர்ம நாசம் ஏற்படும்போது அந்த விருக்ஷமே நசித்துவிடும். அப்படியே கர்மம் விருத்தியாக விருத்தியாக ஸம்ஸாரம் மேன்மேலும் விருத்தியாகும். இப்பொழுது நாம் இருக்கும் ஸ்திதியில் கர்மத்திற்குப் பஞ்சமே இல்லை. ஸம்ஸார விருக்ஷம் ஜலமில்லாமல் வாடிப்போய்விடுமோ என்ற பயம் கொஞ்சமேனும் வேண்டாம். வர வர மேன்மேலும் விருத்தியடைந்து கொண்டுதானிருக்கிறது. அவ்விருக்ஷத்தின் நடுமரம் நம் சரீரமே. वपुः स्कन्धः ஸம்ஸார ரூபமாகிய இந்த ஜகத் முழுமையும் நம்மைச் சுற்றியிருப்பதாலும், ஸகல பதார்த்தங்களும் இந்த சரீரத்தைப் போஷிப்பதற்காகவே ஏற்பட்டவைகளாகத் தோன்றுவதாலும், சரீரத்தை நடுமரம் என்று சொல்லப்படுகிறது. இந்த

சரீரத்தில் மேலும் கீழும் குறுக்கேயும் நாலா பக்கங்களிலும் பரவியிருக்கிற பிராணன்களை சாகைகளாக பாவிக்கலாம். अधश्च: शाखाः கிளைகளின் நுனிகளாக இந்திரியங்களைச் சொல்கிறார். अग्राणि इन्द्रियसंहृताः மரத்தின் நுனிகளின் ஸம்பந்தம் ஸாதாரணமாய் புஷ்பங்களுக்கே இருப்பதால், இந்திரிய ஸம்பந்தமடையும் விஷயங்களை புஷ்பங்களாகக் கல்பிக்கிறார். विषयाः पुष्पाणि பழம் வேண்டுமென்றால் துக்கமே பலம். दुःखं फलं.

### 3. விஷயஸுகமும் துக்கமே.

இதில் ஒரு ஸந்தேஹம். ஸம்ஸாரமாகிற விருக்ஷத்திற்கு ஸுகம் துக்கம் இரண்டும் பலனாக இருக்க, துக்கத்தை மாத்திரம் பலனாகச் சொல்லலாமா? இது நியாயமான ஸந்தேஹம் தான். வாஸ்தவத்தில் ஸுகம் துக்கம் இரண்டையும்தான் பலனாகச்சொல்லி யிருக்க வேண்டும். ஆனால் அவ்விதம் சொல்லாமல் துக்கத்தை மாத்திரம் பலனாக ஆசார்யார் சொல்லியிருப்பதும் நியாயமாய்த்தான் இருக்கவேண்டும். அவர்களுடைய அபிப்பிராயம் என்னவென்று கவனிக்கும்போது, விஷயங்களால் ஏற்படும் ஸுகத்தை ஸுகமென்று சொல்ல அவர்களுக்கு இஷ்டமில்லை என்றும், அந்த ஸுகத்தையும் துக்கத்திலேயே அந்தர்பாவம் செய்திருக்கிறார்கள் என்றும், வியக்தமாய்த் தெரியும். விஷயங்களால் ஏற்படும் ஸுகம் வாஸ்தவத்தில் ஸுகமேயல்ல. அவ்விதம் ஸுகமாய்த்தோன்றுவது விஷய ஸம்பந்தத்தால் ஏற்பட்டதில்லை. ஒரு விஷயம் தனக்

குக்கிடைக்க வேண்டுமென்கிற ஆசையினுல் மனஸ் கலங்கி க்ஷோபத்தையடைகிறது. அந்த கலக்கம் அவ் விஷயம் கிடைத்தவுடன் நிவிருத்தியாகிறது. ஆசை அடங்கினவுடன் மனஸ் தெளிவடைகிறது. அந்த தெளிந்த மனஸில் ஆத்ம ஸ்வரூபமாகிய ஆனந்தம் பிரதிபலிக்கிறது. அதை ஆத்மாவின் ஸம்பந்தத்தினுல் ஏற்பட்டதென்பதைத் தெரிந்துகொள்ளாமல், விஷய ஸம்பந்தத்தினுல் ஏற்பட்டதுபோல் தப்பாக நினைக் கிறேம். விஷயம் கிடைத்துவிட்டபடியால் ஸுகம் ஏற்பட்டதாக நினைக்கிறேம். வாஸ்தவத்தில் ஆசை அடங்கினதினுல் ஏற்பட்ட ஸ்வரூப ஸுகம் அது. ஆசை அடங்குவதால் ஏற்படும் ஸுகம் ஏக ரூபமானது. ஆசைகள் எத்தனை விதமாக இருந்த போதிலும், ஆசா சாந்தி ரூபமான ஆத்ம ஸுகம் ஒரே மாதிரி தான். ஒருவன் ரோகத்தினுல் பீடிக்கப்பட்டி ருந்தால் "உனக்கு என்ன வியாதி?" என்று கேட்க லாம். அவனுக்கு ரோகம் நிவிருத்தியாகி நல்ல ஆரோக் கியம் வந்த பிறகு "உனக்கு என்ன ஆரோக்கியம்?" என்று கேட்பது கிடையாது. ஏனென்ருல், ரோகம் பலவகையாயிருந்தாலும், ஆரோக்கியம் ஒரே விதம் தான். ரோகம் வந்து நிவிருத்தியானவனுக்கும் ரோகமே வராமலிருந்தவனுக்கும் ஆரோக்கியத்தில் வித்யாஸமில்லை. வித்யாஸமுண்டென்று வைத்துக் கொண்டாலும், ரோகமே வராமலிருந்தவனுக்குத் தான் ஆரோக்கியம் ஜாஸ்தி. இதேமாதிரி, ஆசை யாகிற மனக்கலக்கத்தை அடைந்துவிட்டு பிறகு

அவ்வாசைக்கு விஷயமான பதார்த்தம் கிடைத்தவுடன் ஆசாசாந்தியடைந்தவனுக்கும் அவ்வாசையே ஏற்படாமலிருந்தவனுக்கும் ஸுகம் ஒரே விதம். வித்தியாஸமுண்டென்றால், ஆசை ஏற்படாதவனுக்கே ஜாஸ்தி ஸுகம் என்று சொல்லவேண்டும்.

ஜகத்திலிருக்கும் பதார்த்தங்கள் அனந்தமாயிருப்பதால் ஒரு பதார்த்தம் கிடைத்தவுடன் அந்த பதார்த்த விஷயமான ஆசை மாத்திரம் அடங்கலாமே யொழிய மற்ற பதார்த்தங்களில் ஆசா சாந்தி ஏற்படாது. ஆகையால் அந்த ஸமயத்திற்கு க்ஷணிகமாக ஸுகம் தோன்றுமே தவிர நிரந்தரமான ஸுகம் ஏற்படாது. தவிறவும், ஜகத்திலுள்ள ஆசைக்கு விஷயமான ஸகல பதார்த்தங்களையும் ஸம்பாதித்து விட்டால் நிரந்தரமான ஸுகத்தை அடைந்து விடலாமென்பதும் அஸாத்யமான கார்யம். ஆகையால் நித்யமாய் ஸுகம் வேண்டுமென்று நினைப்பவன் விஷயங்களைத் தேடி அலையாமல் விஷயங்களிலிருந்து ஆசையை ஒழித்து ஸ்வரூபானந்தத்தில் ரமிப்பதே வழி என்று சாஸ்திரம் சொல்கிறது. மேலே சொன்ன காரணங்களால் விஷயானந்தமும் ஸ்வரூபானந்தத்தின் பிரதி பலனே தவிர வேறில்லை என்று தெரிய வரும். இதைத் தெரிந்து கொள்ளாமல், விஷயத்தினாலேயே ஸுகமேற்படுகிறதென்று நினைத்துக்கொண்டு மனக்கலக்கமாகிற ஆசையை வைத்துக்கொண்டு அதன் பூர்த்திக்காக மிகச் சிரமப்பட்டு பிரயத்தினங்கள் செய்து, விஷயம் கைக்குக் கிடைத்து விட்டாலும்

கூட அதன் ஸம்ரக்ஷணத்தை யுத்தேசித்து மறுபடி யும் சிரமத்தை அநுபவிக்க வேண்டும். தவிரவும் காமம் பூர்த்தியானவுடன், மறுபடியும் இதே மாதிரி நமக்கு விஷயம் கிடைக்க வேண்டும் என்று ஆசை விருத்தி தான் அடையும். பிரயத்தினமும் ஜாஸ்திப் படும். எல்லாம் மனதுக்கு அமைதியைக் கொடுத்து ஸுகத்தையுண்டு பண்ணுமல் மேலுக்குமேல் க்ஷோபத்தையே கொடுக்கும். நிரதிசயானந்தத்தின் அனுபவத்திற்காகப் பிரயத்தினம் செய்வதற்கு இவ்விஷயங்களும் விஷய ஸுகங்களும் பிரதிபந்தகமாகவும் ஆகின்றன. ஆகையால் எல்லாவகையிலும் கவனிக்கும் போது விஷயங்களால் ஏற்படுவதாக நினைக்கும் ஸுகத்தை வாஸ்தவமாக துக்கமென்றே தான் பாவிக்க வேண்டியதே தவிர வேறில்லை. இதனுல் தான் பகவத்கீதையில் பகவானும் "விஷயேந்திரிய ஸம்யோகத்தால் ஏற்படும் போகங்கள் எல்லாமே துக்கத்திற்கே காரணங்கள். ஆதி, அந்தம் உடைய இவைகளில் புத்திசாலியானவன் ரமிக்க மாட்டான்" என்று சொல்லியிருக்கிருர். இதை உத்தேசித்துத் தான் ஸம்ஸார விருக்ஷத்தின் பலனுக ஸம்ஸார ஸுகத்தையும் துக்கத்திலேயே சேர்த்து दु:खं फलं என்று ஆசார்யாள் சொல்லிவிட்டார்கள்.

நம்மிடம் அவித்யை எவ்வளவு தூரம் வேரூன்றி யிருக்கிறதென்று அறிய துக்கரூபமான ஸம்ஸார ஸுகத்தில் ஸுகப்பிராந்தி யேற்பட்டிருப்பது ஒன்றே போதும். ஆந்திர தேசத்திலிருந்து ஒரு கனபாடிகள்

கிழவர் ஒருவர் ஒருதடவை மைசூர் ஸம்ஸ்தானத்திற்கு வந்திருந்தார். அவருக்கு பற்கள் எல்லாம் அநேக மாய் போய்விட்டன. இருந்தாலும் மைஸூர் வெற்றிலை மிகவும் துளிராகவும் ருசிகரமாகவுமிருக்கு மென்று பிரஸித்தி ஏற்பட்டிருப்பதால், அதில் ஆசை கொண்டு தாம்பூலம் போட்டுக்கொண்டார். பாக்கு கடினமாயிருந்தபடியால் ஈறுகளிலிருந்து ரத்தம் கசிய ஆரம்பித்து உதடுகளெல்லாம் நல்ல சிவப்பாய் விட்டன. இதைப் பார்த்த ஒரு ஸ்நேகிதர் "தங்கள் தேசத்து தாம்பூல சர்வண விதம் நிரம்பவும் சிலாக்கிய மாயிருக்கிறது. நாங்கள் எவ்வளவு நன்ருய் பக்குவ மாய்ப் போட்டுக் கொண்டாலும், உதடுகள் இவ் வளவு சிவக்கிறதில்லை" என்று சொன்ஞர். இது விளையாட்டாகச் சொன்ன வார்த்தை யென்று தெரிந்து கொள்ளாத அந்தக் கிழவர் தன் ஸாமர்த்தி யத்தைக் கண்டு தானே ஸந்தோஷமடைந்து முன்னி லும் ஜாஸ்தியாக சர்வணம் செய்யவாரம்பித்தார். கடைசியில் ராத்திரி போஜனம் செய்வதற்கு லாயக் கன்னியில் ஈறுகள் புண்ணுய்விட்டன. இவர் தன் ஈறிலிருந்து வருகிற ரத்தத்திஞல் உதடு சிவப்பாயிருக் கிறதென்று தெரிந்துகொள்ளாததும் தவிர, தாம்பூல சர்வணத்திஞல் ஏற்பட்ட சிவப்பு என்று நினைத்து ஸுகமென்று அந்த வலியை ஸஹித்ததற்குக் காரண மென்ன? அதேமாதிரிதான் ஜீவர்கள் எல்லாரும் விஷய ஸம்பந்தத்திஞல் தங்களுக்கு ஸுகம் ஏற்படுகிற தென்று நினைப்பது. மாமரமென்ருல் மாம்பழம்தான்

கிடைக்கும். அதேமாதிரி, அந்தந்த விருக்ஷங்கள் அததற்கு ஏற்பட்ட பழங்களைத்தான் கொடுக்கும். இந்த ஸம்ஸார விருக்ஷம் விலக்ஷணமானது. ஜீவர்களுடைய கர்மாக்கள் விதம் விதமாய் இருப்பதால், பலன்களும் அநேக விதமாயிருக்கின்றன. नानाकर्म-समुद्भव बहुविधं என்றார்கள். சதுர்முகப் பிரஹ்மா முதல் புல்பூண்டு வரையிலுமுள்ள கர்மபலன்கள் இத்தனை விதமென்று யாரால் கணக்கெடுக்க முடியும்? இந்த பழங்களை சாப்பிடும் பக்ஷி யார் என்றால் அதுவே ஜீவன். भोक्ताऽत्र जीव. खगः ।

## 4. அறியவேண்டிய விஷயம்.

மேலேகண்ட சுலோகார்த்தத்தை கவனித்தால் ஸம்ஸாரத்திற்குக்காரணம் அக்ஞானம்தான் என்று விளங்கும். ஸம்ஸாரமாகிற விருக்ஷத்தைச் சேதனம் செய்து துக்கானுபவம் நமக்கில்லாமல் செய்வதற்காக அதன் மூலகாரணமான அக்ஞானத்தையே ஒழித்து விட அதற்கு விரோதியான ஆத்மஞானம் அவசியம். அதைத் தவிர வேறு ஸாதனமும் கிடையாது. இந்த ஞானத்தை நமக்கு அளிக்கும் ஆசார்யரிடத்தில் நாம் எவ்வளவு தூரம் பக்தி செய்யவேண்டுமென்பதை சற்று கவனித்துப்பாருங்கள். எல்லாம் ஞானம்தானே, எல்லாம் ஞானம்தானே என்று நினைத்து கண்டதெல்லாம் படிக்காதீர்கள், கண்டதெல்லாம் நம்பாதீர்கள். லோக விஷயமான அக்ஞானம் இருந்ததேயானால் நமக்கு ஆபத்துக் கிடையாது. ஆத்ம விஷயமான அக்ஞானமிருக்கும்வரை நம்மை

விட்டு ஆபத்துக்கள் நீங்கா. அதையும் தெரிந்து கொள்ளவேண்டும், இதையும் தெரிந்துகொள்ள வேண்டும், என்று அச்சிட்ட புஸ்தகங்களையெல்லாம் வாசிக்கிறோம். வர்த்தமான பத்திரிகைகளைப் படிக்காமல் இருக்க முடியவில்லை. ஒருநாள் ஒரு பத்திரிகைக்காரருக்கு தம்முடைய பத்திரிகையின் எல்லாப்பக்கங்களுக்கும் அச்சிட போதுமான ஸமாசாரம் கிடைக்கவில்லை. இரண்டு பத்தி மீதமிருந்தது. ஏதோ ஒரு ஊர் பெயரிட்டு அவ்வூரில் குளத்தில் ஒரு பையன் தவறிவிழுந்து இறந்துபோனதாகக் கேள்விப்பட்டதாக விசேஷமாக வர்ணித்து எழுதிக்கொடுத்து அச்சிடச் சொன்னார். மீண்டும் சிறிது இடம் பாக்கி இருந்ததாம். அதையும் பூர்த்தி செய்வதற்காக "முன் இவ்விதம் கேள்விப்பட்டோம். ஆனால் நன்கு விசாரித்தபொழுது அது உண்மையல்லவென்று அறிகிறோம்" என்று ஒரு குறிப்பு எழுதி பாக்கி இடத்தையும் பூர்த்தி செய்தாராம். இவ்விரண்டையும் வாசிப்பதில் நம் ஆயுட்காலம் சிலவாகிறது. ஜனங்கள் வீணாகப் பொழுது போக்குவதைப்பற்றி ஸ்ரீ நீலகண்ட தீக்ஷிதரவர்கள் அழகாக வர்ணித்திருக்கிறார். அங்க தேச வாஸிகள் எவ்விதமிருக்கிறார்கள்? வங்க தேச வாஸிகள் என்ன செய்து கொண்டிருக்கிறார்கள்? என்று எதை எதையோ விசாரித்தும் படித்தும் பொழுது போக்குகின்றோம். எப்படியும் நாம் ஒரு காலத்தில் போய்ச்சேர வேண்டியதாயிருக்கிற யம தர்மராஜனின் பட்டணம் எப்படியிருக்கிற

தென்பதைக் குறித்து நாம் யோசிப்பதில்லை. விசாரித்துத் தெரிந்துகொள்ள நினைப்பதுமில்லை. ஜெயில் எவ்விதமிருக்கிறதென்பதைத் தெரிந்து கொண்டால் திருடமாட்டான். பயமிருக்கும். ஆகையால் புண்ய பாபங்களை அறிவிக்கிற சாஸ்திரங்களையும் நிரதிசயமான ஸுகத்தைக் கொடுக்கக்கூடிய ஞானத்தை ஏற்படுத்துகின்ற சாஸ்திரங்களையும் நன்கு தெரிந்துகொண்டால் பிரயோஜனமுண்டு. அவ்விதம் தெரிந்துகொள்ள குருவை அண்டி சரணமடையவேண்டும்.

## அத்யாயம் 12.

## தான் யார் ?

### 1. பரம ப்ரேமாஸ்பதம் ஆத்மா.

ஆத்ம விஷயமான ஞானமே பந்த நிவிருத்திக்கு ஸாதனம் என்று முன் சொன்னோம். ஆனால் அந்த ஆத்மா என்பது என்ன என்று நன்கு தெரிந்து கொள்ளவேண்டும். ஆத்மா என்றால் "தான்" என்று அர்த்தம். "தான்" என்கிற பதார்த்தம் எது என்பதில் ஸந்தேகங்கள் ஏற்படுகின்றன. தன்னிடத்தில் யாருக்கும் எல்லையற்ற பிரீதி இருக்கிறதென்பதில் ஸந்தேகமில்லை. தன்னைத் தவிர இதர பதார்த்தங்களில் பிரீதி ஏற்படுகிறதென்றால், தனக்கு அநுகூலமாயிருக்கும் ஸந்தர்ப்பத்தில் தான் அந்தப் பிரீதி ஏற்

படும். தன்னிடத்தில் இருக்கும் பிரீதி மாத்திரம் எப்பொழுதும் ஸித்தமாகவும் மற்றொரு காரணத்தை அபேக்ஷிக்காமலும் இருந்து வருகிறது. தன்னைத் தவிர வேறு பதார்த்தங்கள் சில வேளைகளில் பிரிய மாகத் தோன்றினாலும் அதே பதார்த்தங்கள் வேறு வேளைகளில் அப்பிரியமாக ஏற்பட்டு விடலாம். "தான்" மாத்திரம் எப்பொழுதும் பிரியமே தவிர, ஒரு காலத்திலும் அப்பிரியமாகக் கூடியதில்லை. இவ் விஷயத்தை ஸகல ஸித்தாந்தவாதிகளும் உணர்ந்திருக் கிறார்கள். ஆகையினாலேயே ஆத்மாவிற்கு லக்ஷணம் சொல்லும்போது "பரம ப்ரேமாஸ்பதம்", பரமமான பிரீதிக்கு விஷயமானது, என்று சொல்கிறார்கள். இந்த லக்ஷணம் தெரிந்துகொண்டிருந்தாலும் கூட, பரம மான பிரீதிக்கு விஷயம் எது என்பதில் மறுபடியும் விவாதிக்கிறார்கள். உலகத்திலுள்ள ஸகல ஸுக துக்கங்களும் இந்த சரீரத்தையே ஆசிரயித்திருப்ப தால் இந்த சரீரம் தான் பரமப் பிரீதிக்கு விஷயம் என்று சிலர் சொல்கிறார்கள். யாரேனும் அடிக்க வந்தால் முதுகில் பட்டாலும் பாதகமில்லை, கண் முதலிய இந்திரியங்களில் படக்கூடாதென்று நினைப் பதினால், இந்திரியங்களே பரம ப்ரேமாஸ்பதம் என்று சிலர் சொல்கிறார்கள். கண் குருடாகவும், காது செவிடாகவும் போனாலும் பாதகமில்லை, எப்படி யாவது பிராணனை வைத்துக்கொண்டிருந்தால் போது மென்று தோன்றுவதால் பிராணனே பரமப்ரீதிக்கு விஷயம் என்று சிலர் சொல்கிறார்கள். மனது வேலை

செய்ய இடமன்னியில் வெறும் பிராணனை வைத்துக்கொண்டு என்ன பிரயோஜனம், மனதுதான் பரம ப்ரேமாஸ்பதம் என்று சிலர் சொல்கிறார்கள். மனது தோன்றினபடி எல்லாம் போய்க்கொண்டிருந்தால் அவன் பயித்தியமே யாவான். ஆகையால் மனதை அடக்கியாளக்கூடிய புத்திதான் அவசியம், ஆகையால் அப்புத்திதான் பரம ப்ரேமாஸ்பதமென்று சிலர் சொல்கிறார்கள். அப்புத்தியும் க்ஷணிகமா, ஸ்திரமா, என்பதில் ஸந்தேஹம். ஆனந்தாம்சம் இல்லாத ஞானமே ஆத்மா என்பார் சிலர். ஜட ஸ்வபாவமும் சித்ஸ்வபாவமும் கலந்ததே ஆத்மா என்பார் மற்றும் சிலர். சித்தோடு கூடிய ஜடம் தான் ஆத்மா என்று வேறு சிலர் சொல்வார்கள். ஸச்சிதானந்தமாய் இரண்டற்றதாயிருப்பதே ஆத்மா என்று மற்றும் சிலர் சொல்வார்கள். இவ்வளவுவிதமான வாதங்களிருப்பதில் எப்படி நிச்சயம் செய்வது?

देहं केऽपि वदन्ति खानि तु परे प्राणान्मनश्चापरे
बुद्धिं च क्षणिकां स्थिरामथ परे केचिच्चितं निस्सुखाम् ।
आत्मानं जडचित्स्वभावमपरे चिद्वज्जडं चेतरे
सत्यज्ञानसुखाद्वितीयमपरे तत्रास्य को निश्चयः ॥

## 2. சரீரம் ஆத்மாவல்ல

தேஹமே ஆத்மா என்று சொல்வது மிகவும் ஸ்தூலமான பக்ஷம். பஞ்ச பூதங்களால் செய்யப்பட்டு,

பிரதி க்ஷணம் மாறுதல் அடைந்துகொண்டு, ஜடமாக இருக்கிற இந்த மாம்ஸபிண்டத்தை ஆத்மா என்று எப்படி சொல்ல முடியும்? சரீரத்தைவிட ஆத்மா வேறு என்பதற்கு அதிகமாக யுக்தி தேவையில்லை. நம் அனுபவத்திலேயே ஸுலபமாகத் தெரிந்து கொள்ளலாம். சரீரமே ஆத்மாவானால் உட்கார்ந்து கொண்டே தூங்கலாமே. அசையாமல் உட்கார்ந்து கொண்டு ஏன் தூங்கமுடியவில்லை? அப்பொழுது சரீரம் ஏன் கீழே சாய்கிறது? சரீரமே ஆத்மாவா யிருந்தால், ஜாக்கிரத் காலத்தில் அந்த சரீரத்தை தூங்கிக் கொண்டிருக்கிற ஞான சக்தி தூங்கும் பொழுதும் தாங்கிக் கொண்டிருக்க வேண்டாமா? சரீரம் ஏன் தட்டித் தள்ளாடிக் கீழே விழுகிறது? இதற்கு நாம் ஸமாதானம் சொல்வது எப்படி என்றால், ஜாக்கிரத் காலத்தில் இருந்த "நான்" என்ற அபிமானம் தூக்கத்தில் ஸ்தூல சரீரத்திலிருந்து தளர்ந்து விடுவதால் தான் அது மெதுவாக கீழே விழுகிறது. ஒரு காலத்தில் நான்கு பேர்கள் சிரமப் பட்டுத் தூக்கிக்கொண்டு போக வேண்டியதாயிருக் கிற இச் சரீரத்தை நாம் "நான்" என்ற அபிமான ரூபமான தாரணை சக்தியினால் பிரதி நிமிஷமும் தூக் கிக் கொண்டு நடந்து செல்கிறோம். ஜடமான இந்த சரீரத்தில் அபிமானம் கொள்ளவும் அதன் வலுவால் சரீரத்தைத் தூக்கிக் கொண்டிருக்கவும் சரீரத்தைத் தவிர வேறு ஒருவன் இருக்க வேண்டுமென்று தெளி வாகின்றது.

இன்னும் பிறவிச் செவிடரும் பிறவிக் குருடரும் ஸ்வப்னத்தில் பல விஷயங்களைக் கேட்டதாகவும் கண்டதாகவும் சொல்வதாகக் கேட்டிருக்கிறோம். பிறவிச் செவிடர் கனவிலே எவ்விதம் கேட்டார்கள்? பிறவிக் குருடர் கனவிலே எவ்விதம் கண்டார்கள்? ஜாக்கிரத் காலத்தில் அனுபவித்த விஷயங்களின் ஸம்ஸ்காரங்களினாலேயே ஸ்வப்நம் ஏற்படுகிறதென்ற நியாயத்தை கவனித்தால், பிறந்தது முதல் சிலகாலம் கண்ணிருந்து பிறகு எக்காரணத்தினாலோ பார்வை இழந்தவன் கண்ணுள்ள காலத்திலே கண்ட வாஸனைப்படி இப்பொழுது ஸ்வப்னத்தில் பார்க்க முடியலாம். பிறவிக் குருடனுக்குப் பிறந்தது முத லேயே கண் பார்வையில்லையே? அவன் ஸ்வப்நத்தில் எவ்விதம் கண்ணால் பார்த்தான்? இதை கவனிக்கும் போது குருட்டுக் கண்ணோடு கூடிய இச்சரீரத்திற்கு வேறாக திருஷ்டி சக்தியோடு கூடின ஒருவன் இருக்க வேண்டுமென்று நன்கு நிச்சயிக்கலாம். பிறவிச் செவிடனுடைய செவிகள் இந்த ஜன்மத்தில் எவ்வித சப்தங்களையும் கேட்டறியாதவைகள்தான். ஆனாலும் முன் ஜன்மங்களில் செவிகளால் கேட்டனுபவித்த ஸம்ஸ்கார பலத்தினால் இப்பொழுது கனவில் செவி களால் கேட்டனுபவித்ததாக அனுபவம் ஏற்படுகிறது. இந்த சரீரமே ஆத்மாவாக இருந்தால் இந்த அனுபவத் திற்கு ஸமாதானம் எப்படிச் சொல்லமுடியும்? இது போலவே பக்ஷவாத சரீரத்தோடுகூடிய ஒருவன் அந்த வியாதியினால் உணர்ச்சி இல்லாமலே இருப்பான்.

அவனும் ஸ்வப்னத்தில் மிருதுவான சயனத்தில் இருந்ததாகச் சொல்லலாம். ஆகையால் ஸ்வப்னத்தில் அனுபவிப்பவன் இந்த ஸ்தூல சரீரமில்லையென்பது ஸ்பஷ்டமாகும். அதனாலேயே இந்த சரீரம் ஆத்மா இல்லை என்பது நன்கு விளங்கும்.

### 3. பரகாயப் பிரவேசம்

ஸ்ரீ சங்கர பகவத் பாதாசார்யார் பரகாயப் பிரவேசம் செய்ததாக சங்கர விஜயத்தில் சொல்லப் படுகிறது. தன் சரீரத்தை சிஷ்யர்களின் பாதுகாப்பில் வைத்துவிட்டு அமருகன் என்ற அரசனுடைய சரீரத்தில் கொஞ்சகாலம் இருந்ததாகச் சொல்லப்படுகிறது. ஒரு சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் பிரவேசிப்பதே பரகாயப் பிரவேசம் எனப்படும். ஒரு சரீரத்தை விட்டு மற்றொரு சரீரத்தில் பிரவேசிப்பது என்பதிலேயே, சரீரம் வேறு, ஒன்றிலிருந்து மற்றொன்றில் பிரவேசிக்கிற ஆத்மா வேறு, என்பது தெளிவாகிறது. சரீரத்தினின்றும் ஆத்மா வேறாக இருக்கிறது என்பதை நமக்கு நிரூபித்துக் காட்டவே ஆசார்யார் இவ்விதம் செய்தார் போலும்! அவர்களுடைய சிஷ்யரான ஹஸ்தாமலகர் சரித்திரத்தை கவனித்தாலும் இவ்விஷயம் நன்கு தெரியவரும். பரமாத்ம ஸ்வரூபத்தை உள்ளங்கை நெல்லிக்கனிபோல் தெளிவாக உணர்ந்து எடுத்துரைத்ததால் அவருக்கு இப் பெயர் காரணப் பெயராக அமைந்தது.

ஸ்ரீபலக் கிராமம் என்ற ஊரில் பிரபாகரர் என்ற ஒரு பிராம்ஹணோத்தமர் இருந்து வந்தார். ஒருநாள் அவரும் அவர் ஸம்ஸாரமும் தன் சிறு குழந்தையுடன் ஒரு விசேஷ புண்ணியகாலத்தில் நதீ தீரத்திற்கு ஸ்நாநம் செய்யச் சென்றார்கள். கரையில் விடப் பட்டிருந்த அக்குழந்தை பெற்றோர் கவனிக்காமல் இருந்த தருணத்தில் மெல்ல மெல்ல நகர்ந்து நதிப் பிரவாஹத்தில் விழுந்து விட்டது. இதை அறிந்த பெற்றோர்களும் மற்றோர்களும் ஜீவனற்ற அக் குழந்தையின் சரீரத்தை எடுத்து வைத்துக்கொண்டு மிகவும் பரிதாபகரமாய் கதறி அழுதார்கள். அந்த ஸமயம் கொஞ்ச தூரத்தில் தவஞ்செய்து கொண்டு இருந்த ஒரு பெரியவர் இவர்களின் வியஸனத்தைக் கண்டு மனம் உருகினவராய் தனது சரீரத்திலிருந்து வெளியேறி அக் குழந்தையின் சரீரத்தில் உட்புகுந்து கொண்டார். குழந்தை மறுபடியும் உயிர் பெற்றதாக நினைத்து பெற்றோர்கள் அக் குழந்தையை எடுத்துக் கொண்டு மிகவும் ஸந்தோஷத்துடன் வீடு போய்ச் சேர்ந்தார்கள்.

ஆனால் குழந்தைக்குப் பேசத்தக்க வயது வந்தும் பேசவில்லை. உலகக் காரியம் வீட்டுக் காரியம் ஒன்றி லும் புத்தி நாடவேயில்லை. குழந்தையின் மந்தத் தன்மையைப் பார்த்து மாதாபிதாக்கள் மனம் வருந்தி னார்கள். உபநயனம் செய்யவேண்டிய காலமும் வந் தது. ஊமைகளுக்கு ஏற்பட்ட கிரமப்படியே உப நயனம் செய்து வைக்கப்பட்டது. அதன் பின்

கொஞ்ச நாள் கழித்து தெய்வாதீனமாக அவ்வூருக்கு ஸ்ரீமத் ஆசார்யார் விஜயம் செய்தார்கள். மஹானிடம் அழைத்துக் கொண்டுபோய்க் காட்டினால் அவர்களுடைய அனுக்ரஹ விசேஷத்தினால் இவனுக்கும் புத்தித் தெளிவு ஏற்படலாமென்று நினைத்து குழந்தையை அழைத்துவந்து ஆசார்யார் முன்பு நிறுத்தினார்கள். அவர்கள் இக்குழந்தையைப் பார்த்து "कस्त्वं शिशो—குழந்தாய், நீ யார்?" என்று கேட்டார்கள். உடனே அக்குழந்தை "நான் சரீரமல்ல, கண் முதலிய இந்திரியமல்ல; மனதுமல்ல, எல்லாவற்றிற்கும் பிரேரகனாய் மிஞ்சி நிற்கும் நித்ய ஞான ஸ்வரூபியான ஆத்மாவே நான் स नित्योपलब्धिस्वरूपेऽहमात्मा" என்று உபநிஷத்துக்களின் ஸாரம் அடங்கிய பல சுலோகங்களால் பதில் உரைத்தது. அதுவரை மந்தன் என்று நினைக்கும்படி யிருந்த அக்குழந்தை வாஸ்தவத்தில் ஆத்மஞான ஸம்பத்து நிறைந்து அதன் விசேஷத்தால் மௌன நிஷ்டையிலிருந்த மஹான் என்று அறிந்து யாவரும் ஆச்சரிய மடைந்தார்கள். ஆசார்யாரும் இப் பதிலைக் கேட்டு மிகவும் ஸந்தோஷித்தார்கள். இக்குழந்தை ஆசார்யரிடமே இருக்கத் தகுந்ததென்ற தீர்மானத்துடன் அவர்களிடம் அர்ப்பணம் செய்தார்கள். அவரே ஹஸ்தாமலகாசார்யார். ஆற்றில் விழுந்த சிசுவின் சரீரத்தில் பிரவேசிக்குமுன் நன்கு செய்திருந்த சிரவண மனன நிதித்யாஸனாதி ஸாதனங்களை அனுஷ்டித்துப் பழகியவராதலால், முன் சரீரத்திலிருந்த காலங்களில் ஸாதனானுஷ்டானம் செய்து

ஸாத்திய ஞானம் பெற்று நிஷ்டையேற்படுமுன் தயை யினுல் இச்சரீரத்தில் வந்துவிட்டதால் இப்பொழுதும் அந்த அனுபூதியே நழுவாது துடர்ந்திருக்கிறதென்று நன்கு தெரியவரும். இந்த சரித்ரத்தினுல் யோக சாஸ்திரம் பொய்யல்லவென்றும் யுக்தி அனுபவங் களுக்குப் பொருந்தியதுதானென்றும் பிரகாசமாகி றது. பிரகிருதத்தில் இந்த ஜடமான சரீரத்தில் பிர வேசித்து அதை ஆட்டிவைக்கும் ஆத்மா இதைவிட வேறு என்பதும் ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

தவிரவும், உலகத்தில் எல்லா ஜனங்களுக்கும் ஸுகம் வேண்டுமென்ற எண்ணமே இருக்கிறது. அதை உத்தேசித்தே முயற்சியும் செய்கிருர்கள். ஸுகம் அனுபவிக்க விரும்பி வெகு தூரத்திலிருந்து தண்ணீர் முதலிய சாமான்களை சரீரப் பிரயாஸப் பட்டு கொண்டுவருகிருர்கள். சரீரம் கஷ்டப்படு கிறது ஸ்பஷ்டமாகத் தெரிகிறது. சரீரமே ஆத்மா வானுல், இவ்விதம் வெய்யிலில் போய் கஷ்டப்பட்டுத் தண்ணீர் சுமக்க ஸம்மதிக்குமா? சரீரத்தைவிட வேருக ஆத்மா ஒன்று இருப்பதினுல் தான் அந்த ஆத்மா வின் ஸுகத்திற்காக இந்த ஜடமான சரீரத்தை சிரமப்படுத்த முடிகிறது. ஹரிச்சந்திரன் என்ன பாடு பட்டான்? அவன் சக்கிரவர்த்தி. ராஜ்யத்தை இழந் தான். புத்திரனைப் பறிகொடுத்தான். மனைவியை விற்ருன். தானும் சண்டாளனுக்கு அடிமையாகி வருந்தினுன். சரீரமே ஆத்மாவானுல் இவ்விதம் தன் பதவியையும் மனைவி மக்களையும் இழப்பானு? சரீரத்

னும் வேருக ஆத்மா ஒன்று இருக்கிறது, அதன் க்ஷேமத்திற்காக நமது சரீரம் முதலியது எவ்வித கஷ்டப்பட்டாலும் சரி ஆத்மாவின் க்ஷேமத்தையே நாம் கருதவேண்டும், என்று அவன் உறுதியுடன் ஸகலத்தையும் தியாகம் செய்தான். தனக்கு ஸுகம் வேண்டுமென்பதே மனிதனுடைய உத்தேசம். "தனக்கு" என்ருல் சரீரத்திற்கல்ல என்பது இவ்வுதாஹரணங்களால் நன்கு தெரியவரும்.

## 4. இந்திரியங்களும் ஆத்மாவல்ல.

ஜடமாய் மாம்ஸ பிண்டமாயிருக்கிற சரீரம் ஆத்மாவாக இருக்க வேண்டாம். ஸூக்ஷ்மமாய் பிரகாச ரூபமாய் தோன்றுகிற இந்திரியங்கள் ஆத்மாவாக இருக்கட்டுமே என்று தோன்றலாம். எவைகளால் ஞானமுண்டாகிறதோ அவை ஞானேந்திரியம் எனப்படும். எவைகளால் கர்மா செய்யப்படுகிறதோ அவை கர்மேந்திரியம் எனப்படும். காது சப்தத்தைக் கேட்கிறது. மிருது கடினம் என்ற ஸ்பர்சத்தை த்வக் உணர்கிறது. கண் ரூபத்தைப் பார்க்கிறது. தித்திப்பு முதலிய ரஸங்களை நாக்கு அறிகிறது. புஷ்பம் முதலியவைகளின் கந்தத்தை மூக்கு முகர்கிறது. நாக்கு பேசுகிறது. கால் நடக்கிறது. கை எடுக்கிறது. குதகுஹ்யங்களும் தன் தன் வேலைகளைச் செய்கின்றன. இந்திரியங்கள் என்பது நம் கண்ணுக்கு வெளிப்படையாகத் தோன்றுகிற இந்த மாம்ஸக் கூடுகளல்ல. அவைகளின் உள்ளே இருந்து கொண்டு அவைகளுக்கு

சக்தியைக் கொடுப்பவைகளே இந்திரியங்கள். ஞானேந்திரியங்கள் ஐந்து, கர்மேந்திரியங்கள் ஐந்து, ஆக பத்து இந்திரியங்கள் இருக்கின்றன.

இவைகளில் ஒவ்வொரு இந்திரியம் ஒவ்வொரு ஆத்மாவாக பத்து இந்திரியங்களும் பத்து ஆத்மாக்களா? அல்லது எல்லாம் சேர்ந்து ஒரு ஆத்மாவா? ஒவ்வொரு இந்திரியத்திலும் தனித்தனியாக ஆத்மா உண்டு என்ருல், எவரெவருக்கு எந்த எந்த இந்திரியம் இல்லாமல் குறைப்படுகிறதோ, அவரவர்களுக்கு அந்த அந்த ஆத்மா போயிற்று என்று சொல்ல வேண்டியதாக வரும். மேலும், ஒரு பொருளை எவன் பார்த்தானே அவனே, அதைப் பார்த்ததாகச் சொல்லுகிருன். பார்த்த ஆத்மா வேறு, சொல்லுகிற ஆத்மா வேறு என்றிருந்தால் இது எப்படி ஸாத்தியப்படும். தவிரவும், ஒரு சபைக்கு இரண்டு தலைவர்கள் உண்டா? ஒரு ராஜ்யத்திற்கு இரண்டு அரசர்கள் உண்டா? गुरुद्वयं शिष्यनिपातहेतुः குரு இருவராஞல் சிஷ்யன் கெட்டான் என்பது போல், பத்து ஆத்மாக்களையுடைய இச்சரீரம் உலேந்து விடும். ஒவ்வொரு ஆத்மாவும் தனித்தனியாக சரீரத்தை ஏவ ஆரம்பித்து விட்டால் அதைத் தடுப்பவர் யார்? இந்த பத்து ஆத்மாக்களும் ஒன்றுக்கொன்று அடங்கி நடப்பது எப்படி? எல்லாம் ஸமமான தன்மையுடையவைகளல்லவா? தேஹம் சிதறி விடும். ஆகையால் தனித்தனி ஆத்மாக்கள் என்பது கொஞ்சமேனும் பொருந்தாது. அவ்விதம் சொல்வது சிவன் வேறு, விஷ்ணு வேறு, பிரஹ்மா வேறு, என்பது

போல் ஆகும். இம்மூவரும் வெவ்வேருனல் இவர்களில் ஒருவர் ஸ்ருஷ்டிக்க விரும்பினுல் அதை மற்ருெருவர் ஸம்ஹரிக்க விரும்புவார். ஒருவர் ஸம்ஹரிப்பதை மற்ருெருவர் பரிபாலனம் செய்ய விரும்புவார். மூன்று பேர்களுக்குள் ஒற்றுமையிருக்காது. அவர்களின் ஆளுகையில் அகப்பட்ட நமக்கே திண்டாட்டம் வந்துவிடும். வாஸ்தவத்தில், ஜகத் ஸ்ருஷ்டி கர்த்தாவாக, ஜகத் ஸம்ரக்ஷகனுக, ஜகத் ஸம்ஹாரகனுக, இருப்பது ஒருவனே தான். ஜீவர்களின் குணங்களுக்கும் வாசனைக்கும் தக்கபடி அவரவர் ஸேவித்து நன்மையடையட்டுமென்பதற்காகவே சிவன், விஷ்ணு, பிரஹ்மா என்று மும்மூர்த்திகளாக ரூபம் தரிக்கிருர். மூவரும் ஒருவரே தவிர வேறல்ல. அதே மாதிரி, பத்து இந்திரியங்களும் தனித்தனியே இச் சரீரத்திற்கு யஜமானனுகிய ஆத்மாவாக இருந்தால் சரீரமே கெட்டு விடும்.

பத்து பேர்கள் சேர்ந்து எப்படி ஒரு தூணைத் தூக்குகிருர்களோ, அப்படியே பத்து இந்திரியங்களும் சேர்ந்துதான் இந்த சரீரத்தை தாங்குகின்றனவென்று வைத்துக்கொண்டால், ஆத்மாவாக இருக்கும் தன்மையானது பத்து இந்திரியங்களும் சேர்ந்த ஒரு ஸமுதாயத்தைச் சேர்ந்ததாகச் சொல்லவேண்டும். பத்தும் சேர்ந்து ஆத்மாவானுல், அவைகளில் ஏதேனும் ஒன்று குறைந்தாலும் "பத்தும் சேர்ந்த ஸமுதாயம்" என்பது இல்லாமல் போய்விடும். குருடர் ஊமையர் முதலியவர்களுக்கு பத்து இந்திரியங்கள்

இல்லாததினுல் அவர்களுக்கு ஆத்மா நஷ்டமாகி, அவர்கள் சாகவேண்டியதாக ஏற்படும். செவிடனுக்கு பத்து இந்திரியங்களில்லாமலிருந்தும் அவன் ஜீவித்திருப்பதை நாம் பார்க்கிறோம். இதுபோல் மற்றும் ஒவ்வொரு இந்திரியங்களில்லாதவர்களையும் பார்த்திருக்கிறோம். இரண்டு, மூன்று, நான்கு இந்திரியங்கள் இல்லாதவர்களும் ஜீவித்திருப்பதாகவே பார்த்திருக்கிறோம். கூட்டம் குறைந்தால் ஸபை குறைவதுபோல, இந்திரியங்கள் குறைந்தால் ஆத்மாவும் குறையவேண்டாமா ?

தவிரவும் கண் காது முதலிய இந்திரியங்களால் வெளியிலுள்ள வஸ்துக்களைக் காண்பது, கேட்பது முதலிய காரியங்கள் நடைபெறும் நிலைக்கு ஜாக்கிரத் அவஸ்தை என்பார்கள். இந்திரியங்களும் மனதும் ஓய்வடைந்த நிலை ஸுஷுப்தி, தூக்கம், என்பார்கள். இந்திரியங்களே ஆத்மாவாக இருந்தால், ஆத்மாவே ஓய்வடையும் நிலையாகிய தூக்கத்தினிடத்தில், மரண விஷயமாக எவ்வளவு பயம் ஏற்படுகிறதோ, அவ்வளவு ஏற்படவேண்டும். அப்படி ஏற்படுகிறதில்லை. ஸந்தோஷமாக தூக்கத்தை விரும்புகிறோம். ஆத்ம நாசத்தை யாரும் விரும்பமாட்டார்கள். ஆகையால் இந்திரியங்களும் மனதும் ஓய்வடைந்தாலும் ஸுகத்தை அனுபவிக்கிற வேறு ஒருவன் இருக்கிறானென்று நன்கு தெரிகிறது.

மேலும் தூங்குகிறவனுக்கு வெளியிலுள்ள காது கண் எல்லாம் அப்படியே இருக்கின்றன. இவை

களால் அவன் கேட்பதுமில்லை. பார்ப்பதுமில்லை. ஆனால் கேட்பதாகவும் பார்ப்பதாகவும் ஸ்வப்னம் காண்கிறான். இந்த வெளி இந்திரியங்களே ஆத்மாவாக இருந்தால் ஸ்வப்னத்தில் ஸகல இந்திரியங்களையும் வைத்துக்கொண்டு அனுபவிக்கிறதாகத் தெரிகிறவன் யார்? கை கால் கண் காது குறைப்பட்டவர்களும் ஸ்வப்னத்தில் எவ்வித குறையுமன்னியில் அனுபவிக்கிறார்கள். அதெப்படி ஸாத்தியமாகிறது? ஆகையால் இந்திரியங்கள் தனித்தாவது சேர்ந்தாவது ஆத்மாவில்லையென்றும் இந்திரியங்களைத் தவிர்த்து வேறாகவே ஆத்மா இருக்கிறாரென்றும் தான் நிர்ணயிக்க வேண்டியிருக்கிறது.

खानामात्मत्ववादे प्रतिनियतगतौ स्वामिनानात्वदोषा-
देहोन्मन्थप्रसङ्गः समुदितविषये त्वन्धमूका म्रियेरन् ।
उक्तेर्दृष्टश्रुतानामपि च न घटते नापि सङ्घा निरूप्यः
स्वप्नद्रष्टैव न स्याच्छयनमरणयोर्निर्विशेषाद्वयं स्यात् ॥



## அத்யாயம் 13.

## ஆத்மஸ்வரூபம்.

---

### 1. பிராணாயாமம்.

ஸ்தூலமான சரீரம் ஆத்மாவல்ல, கருவிகளாகிய இந்திரியங்களும் ஆத்மாவல்ல, என்பது நியாயம்.

சரீரத்தில் பிராணன் இருக்கும் வரை ஜீவித்திருக்கிறன் என்றும் பிராணன் போய்விட்டால் இறந்துவிட்டான் என்றும் சொல்லப்படுவதால் பிராணனே ஆத்மாவாக இருக்கலாம் என்று தோன்றலாம். ஸாமான்யமாக ஒரு நியாயத்தை கவனிப்போம். இந்த சரீரத்தை நியமனம் செய்கிற ஆத்மா பிராணனுகவிருந்தால், அதுவே இந்த சரீரமாகிற பட்டணத்திற்கு அரசன் என்று ஏற்படும். இந்திரியங்கள் பிராணனுடைய வேலைக்காரர்கள் என்றும் ஏற்படும். நல்ல தூக்க ஸமயத்தில் இந்திரியங்களெல்லாம் ஓய்வடையும் போதுகூட பிராணன் தன் காரியமான உச்சுவாஸ நிச்சுவாஸங்களை செய்துகொண்டிருக்கிறதைப் பார்க்கிறேம். ராஜாவை சரீரத்திற்குக் காவலாக வைத்துவிட்டு இந்திரியங்களாகிய வேலைக்காரர்கள் எங்கேயோ போயிருக்கிறர்கள் என்றல் அது சரியா? மரியாதை யாகுமா? பிராணனே ஆத்மாவாக இருந்தால் அவைகள் அவ்விதம் செய்யமாட்டா. அரசன் வேலை செய்வதும் வேலைக்காரர்கள் தூங்குவதும் உண்டா? பிராணனுக்கு ஸ்வப்நத்திலாவது ஸுஷுப்தியிலாவது ஓய்வு கிடையாது. இந்திரியங்களுக்கு உண்டு. பிராணனுகிய ராஜாவுக்கல்லவா ஓய்வில்லாத வேலையாயிருக்கின்றது? இது நியாயமாகுமா?

யோக சாஸ்திரத்தில் மனம் அடங்குவதற்காக பிராணனுடைய கார்யங்களான உச்சுவாஸ நிச்சுவாஸங்களை தடை செய்யவேண்டுமென்று சொல்லப்

படுகிறது. காற்றை வெளிவிடுதலை ரேசகம் என்றும், உள்ளே இழுப்பதை பூரகம் என்றும், குடத்தில் தண்ணீர் நிரப்புவதுபோல் காற்றை உள்ளே நிரப்பி நிறுத்துவதை கும்பகம் என்றும் சொல்வார்கள். பிராணனாகிய காற்று அசைந்தால் மனமும் சலிக்கும், காற்று அசையாவிட்டால் மனமும் அசையாது. பிராணனுக்கும் மனதிற்கும் உள்ள ஸம்பந்தம் இதனால் விளங்கும். அப்படியே மனம் ஒருமைப்பட்டு நின்றால் பிராணனும் நிற்கும். ஒருவன் பெரிதான ஒரு துக்கத்தில் ஆழ்ந்ததாக வைத்துக்கொள்வோம். முடிவில் ஒரு பெருமூச்சு விடுகிறான். காரணமென்ன? வியஸன நிலையில் வேறு விஷயத்தில் மனது சலிக்காமல் அவ்வியஸனத்திலேயே நின்றபொழுது பிராணனும் சலியாமல் அவ்வளவு நேரம் உள்ளே யடங்கிக் கிடந்தது. பிறகு வெளியே நீண்டு வருகிறது.

இவ்விதமாக பிராணனுக்கும் மனதிற்கும் உள்ள ஸம்பந்தத்தை நன்கு உணர்ந்த பெரியோர்கள் பிராணாயாமத்தினால் மனதை அடக்கி மேன்மையடைந்தார்கள். வாஸ்தவத்தில் கவனித்துப் பார்த்தால் அவர்கள் செய்கிற கார்யங்களை நாமும் செய்து தான் வருகிறோம். பலன் மாத்திரம் விபரீதமாக இருக்கிறது. நாமும் மூச்சைப் பிடித்துக்கொண்டு பலவிதத்தில் கஷ்டப்படுகிறோம். ரிஷிகள் பொறுமையுடன் வாழ்ந்தார்கள். நாமும் மேலதிகாரிகள் கோபித்துக் கொள்வதை யெல்லாம் ஸஹித்துக்கொண்டு தன் கோபத்தையும் செலுத்த வழியில்லாமல் அடக்கிக்

கொண்டு பொறுமையோடு இருக்கிறோம். ரிஷிகள் வெய்யில் மழைகளின் மத்தியில் தபஸ் செய்தார்கள். நாமும் வெய்யில் மழைகளில் அலேந்து தவிக்கிறோம், நடுநிசியில் கண் விழித்துக்கொண்டு வேலே பார்க்கிறோம். வெய்யில் மழை காற்று எல்லாம் ஸஹிக்கிறோம். உஷ்ண காலத்தில் பஞ்சாக்னி மத்தியில் ரிஷிகள் தபஸ் செய்தது போலவே நாமும் வேனற் காலத்தில் அலேந்து வேலே பார்க்கிறோம். "தபதாஹே' என்கிற அர்த்தத்திற்கு இசைந்தபடி நாம் செய்வதும் தபஸ்தான். ரிஷிகள் காய் கிழங்குகளே உண்டு காடுகளில் வாழ்ந்தார்கள். நாம் அவைகூட கிடைக்காமல் காடுகளிலும் நாடுகளிலும் அலேந்து திண்டாடுகிறோம். ரிஷிகள் வீடு வாசல்களே விட்டுப் போவதுபோலவே நாமும் டில்லியில் உத்தியோகம் கிடைத்தால் வீடு வாசல் பந்துக்களெல்லாவற்றையும் விட்டுவிட்டுப் போகிறோம். ரிஷிகள் வைராக்கியத்தினுல் எல்லாவற்றையும் விட்டார்கள். நமக்கு ஒன்றும் கிடையாததினுல் நாமும் விட்டிருக்கிறோம். அவர்களுடைய வைராக்யம் சரியான வைராக்யம், நம்முடைய வைராக்யம் அபாவ வைராக்யம். அவர்கள் சுவாஸபந்தம் செய்து பகவானே தியானம் செய்தார்கள். நாம் மூச்சு விடாமல் பணத்தையே தியானம் செய்கிறோம். இவ்விதம் ரிஷிகள் செய்த கார்யங்களே யெல்லாம் நாமும் செய்கிறோமானுலும், அவர்கள் ஸந்தோஷத்துடன் போகங்களேயும் போக ஸாதனங்களேயும் விட்டதினுல் அவர்களுக்கு பலன்

கள் நன்மையாக ஏற்பட்டன. நாம் துக்கத்தோடு விட்டிருப்பதால் வேறுவிதமான பலனை அளித்து நம்மை ஏமாற்றிவிட்டன. நாம் அந்தந்தப்பயன்களால் ஏமாற்றப்பட்டோம்.

क्षान्तं न क्षमया गृहोचितसुखं त्यक्तं न संतोषतः
सोढा दुःसहशीतवाततपनक्लेशा न तप्तं तपः ।
ध्यातं वित्तमहर्निशं नियमितप्राणैर्न शंभोः पदं
तत्तत्कर्म कृतं यदेव मुनिभिस्तैस्तैः फलैर्वञ्चिताः ॥

என்று பர்த்ருஹரி வெகு அழகாக வர்ணித்திருக்கிறார்.

எப்படியும் இருவிதமான பிரவிருத்தியிலும் பிராணனை அடக்குவது அவசியமென்று தெரிகிறது. ஒருவன் சரீரப் பயிற்சி எவ்வளவு செய்திருந்தாலும் மல்ல வித்யை கற்றுக் கொண்டிருந்தாலும் தன் தோளில் தான் ஏறி நிற்பது ஸாத்யமில்லாத காரியம். தன் ஸாமர்த்தியத்தை மற்றொருவன் பேரில் நின்று நிரூபிக்கலாம். ஒரு கையால் மற்றொருவனைப் பிடிக்கலாம், மற்றொரு கையையும் பிடிக்கலாம். அதே கை தன்னைத்தானே பிடித்துக்கொள்ளமுடியாது. மூச்சையடக்கினால் கனமான சாமான்களைத் தூக்கமுடியும். பிராணாயாம பலத்தினால் இரும்புச் சங்கிலியை அறுக்க முடியும், இதினால் பிராணனுடைய சேஷ்டையான மூச்சை கட்டுப்படுத்த முடியுமென்று நன்கு தெரிகிறது. முன் சொன்ன நியாயப்படி பிராணனை அடக்குவது பிராணனாகவே இருக்க முடியாது. கட்

டுப்படுகிற பிராணனைத் தவிர கட்டுப்படுத்துகிற மற்றொன்று உண்டென்று ஒப்புக்கொள்ள வேண்டும். பிராணன் தனக்குத் தானே கட்டுப்பட வேண்டியதாயிருந்தால், அது விஷயமாக சாஸ்திரங்களின் உபதேசம் வியர்த்தமேயாகும். பிராணனை அஸ்வதந்திரமாக ஒப்புக்கொண்டால் தான் அதையடக்க முடியும். பிராணனுக்கும் எஜமானனாக இருப்பதே ஆத்மா. மேலும் தூங்கும் ஸமயத்தில் ஒரு திருடன் வீட்டில் நுழைந்து திருடிக்கொண்டு போவதை பிராணன் பார்த்துக் கொண்டிருக்கலாமா? ஆத்மாவுக்கு ஞான சக்தியுண்டல்லவா? பிராணன் ஆத்மாவாக இருந்தால், அந்த ஞானசக்தி அப்பொழுது எங்கே போயிற்று? இதனாலும் பிராணனுக்கு பிரகாசமாவது கர்த்ருத்வமாவது ஸ்வாதந்திரியமாவது கிடையாது என்று நன்கு தெரிகிறது. ஆகையால் பிராணனும் ஆத்மாவல்ல.

## 2. மனோநிக்ரஹம்.

இதே காரணத்தினால் மனதும் ஆத்மாவல்ல. ஒருவனிடம் நாம் ஒரு விஷயத்தைப்பற்றிப் பேசிக் கொண்டிருக்கும் மத்தியில் அவன் "என் மனது வேறோரிடம் போயிற்று. இனியும் ஒருதரம் சொல்லுங்கள்" என்று சொல்லுகிறான். மனது வேறோரிடம் சென்றது என்ற விவரத்தை அறிந்தவன் அந்த மனதைப் பார்க்கிலும் வேறாகவே இருக்கவேண்டும். கண் முதலிய இந்திரியங்கள் வேலை செய்வதை நாம் பார்க்கிறபடியால் நாம் அவைகளைக் காட்டிலும்

வேறு என்பது போலவே, மனது வேலை செய்வதையும் நாம் பார்க்கிறபடியால் நாம் அதைக் காட்டிலும் வேறுதான் என்று தெரிந்து கொள்ளலாம். காண்போன் வேறு, காணப்படும் பொருள் வேறு. ஸாக்ஷி வேறு, ஸாக்ஷ்யம் வேறு. திருக் வேறு, திருச்யம் வேறு. மனதும் காணப்படும் விஷயங்களில் சேர்ந்துவிட்டபடியால் அதையும் காண்போனாகிய ஆத்மா வேறுதான். தவிரவும் பிராணனை யடக்குவது போலவே மனதையும் அடக்க முடியும். பிராணனை அடக்குவதினாலேயே மனதையும் அடக்கிவிடலாம். ஒரு பசு வயலில் சென்று பயிரைத் தின்கிறது. பயிரைத் தின்கின்ற சப்தம் மனிதன் காதில் படக் கூடாதென்று அதற்கும் தெரிந்தேயிருக்கிறது. மனிதர் வரும் சப்தம்கேட்டு மூச்சை யடக்கிக் கொண்டு சப்தமில்லாமலிருக்கிறது. திருடன் திருடும் பொழுது சப்தமில்லாமல் மூச்சை அடக்கிக்கொண்டு திருடுகிறான். ஆகையால் மிருகமும் ஸாதாரண மனுஷ்யனும்கூட பிராணனையும் மனதையும் அடக்கிக் கொள்ளத் தெரிந்துகொண்டுதான் இருக்கிறார்கள் என்று சொல்லவேண்டும். அவ்வித சக்தி எல்லாருக்கும் இருந்தும் நல்ல கார்யத்தில் உபயோகப்பட மாட்டேன் என்கிறது. நல்ல கார்யத்தில் பிராணனையாவது மனதையாவது நிலை நிறுத்த முடிகிறதில்லை. பிராணாயாமம் செய்ய முடிகிறதில்லை. தியானம் செய்ய முடிகிறதில்லை. மூச்சு அடங்கமாட்டேனென்கிறது. மனது சஞ்சலப்படுகிறது. மற்று

விஷயங்களிலோ வென்றல் அப்படியல்ல. திருடன் மாதிரி மற்ற விஷயங்களில் ஜாக்கிரதையாக இருக்க முடிகிறது. திருடனுக்கு நிர்பந்தத்தினுல் கெட்ட விஷயத்தில் மனது அடங்கியிருப்பதுபோல், நாமும் நல்ல விஷயத்தில் மனதை நிர்பந்தம் செய்து அப்யாஸம் செய்தால் அது அடங்கி நிற்கும். “அப்யாஸத்தினுலும் வைராக்யத்தினுலும் மனது நிக்ரஹம் செய்யப்படும்” என்று பகவான் கீதையில் சொல்லியிருக்கிறர். மனதே ஆத்மாவாக இருந்தால், அதை அடக்குவதற்காக பிராணுயாமம் வைராக்யம் அப்யாஸம் முதலிய ஸாதனங்களைச் சொல்லும் சாஸ்திரங்கள் வியர்த்தமேயாகும்.

முற்காலத்தில் ரிஷிகள் தங்கள் பிராணனைக் கட்டுப்படுத்தி மனதை பகவானிடம் நிறுத்தினபடியால் பெரியோர்களானுர்கள். ஹஸ்தாமலகரைப் போல் விசேஷமாக ஸாதனங்களை அனுஷ்டானம் செய்திருந்தவர்களுக்கு இப்பொழுது மனது ஸுலபமாக ஸ்வபாவமாகவே அடங்கும். அவ்விதம் அடங்காத மனதை உடையவர்கள் ஹடயோகத்தினுலாவது மனதை அடக்கவேண்டும். வெளியே மேயப்போன பசு வீட்டுக்குள்ளே வந்து தொழுவில் நிற்பதற்கு இரண்டுவித யுக்தி செய்வார்கள். இளம்புல்லைக் காட்டி நயவாக்குகளால் பசுவைத் தொழுவில் கொண்டு சேர்ப்பது ஒரு விதம். தடிகொண்டு அடித்து அங்குமிங்கும் விறட்டிக் கடைசியில் பசுவை தொழுவில் நுழையும்படிச் செய்வது மற்ருெரு விதம்.

அதுபோலவே, நம் மனம் எளிதில் வசப்படாவிட்டால், பிராணுயாமம் முதலிய ஸாதனங்களைக்கொண்டு, ஆட்களையும் கயிறுகளையும் தடிகளையும் உதவியாகக் கொண்டு பசுவை இடையன் கட்டுவதுபோல், நாம் மனதைக் கட்டவேண்டும். மனது சஞ்சலமாயிருப்பதையும் கட்டுப்படுவதையும் பார்த்துக் கொண்டு அதற்கும் நியந்தாவாக இருப்பவனே ஆத்மாவாகும்.

### 3. அநாத்மாக்களில் ஆத்மபுத்தி

இவ்விதமாக சரீரம், இந்திரியங்கள், பிராணன், மனது முதலானதுகளுக்கு மேல்பட்டதாக அவைகளை நியமனம் செய்துகொண்டு அவைகளையும் அவைகளுடைய சேஷ்டைகளையும் ஸாக்ஷியாக இருந்து பார்த்துக்கொண்டிருப்பவனே ஆத்மா என்று தெரிகிறது. அப்படியிருக்க, அவ்வாத்மாவுக்கு வேருயும் ஜடங்களாயுமிருக்கிற சரீரம் இந்திரியம் முதலியவைகளில் ஆத்மத்தன்மை இருப்பதாகச் சொல்கிறவனை பெரும் திருடன் என்றே சாஸ்திரங்கள் சொல்கிறதாக முன்னமேயே சொல்லப்பட்டது. ஒருவனுடைய பெட்டியை மற்ருெருவன் திருடினன் என்ருல் என்ன அர்த்தம்? நமது சாஸ்திரங்கள் இதை வெகு அழகாகத் தெரிவிக்கின்றன. "சொந்தக்காரனுக்கு விருப்பமில்லாத இடத்தில் அவனுடைய பொருளை மற்ருெருவன் கொண்டு வைத்தால் அச்செய்கை திருட்டாகும்" என்ருர்கள். நம் பணப்பெட்டி நம்மிடமிருப்பதே நமக்கு இஷ்டம். அதை மற்ருெருவன் நமக்கு இஷ்ட

மில்லாத அவன் வீட்டில் கொண்டுவைத்தால் அது திருடுதல். இதுபோலவே, ஞான ஸ்வரூபமான ஆத்மாவின் தன்மையை அதற்கு வேறான சரீரம் இந்திரியம் மனது முதலியவற்றில் இழுத்துச் சென்று ஆத்மத்தன்மை அவற்றைச் சேர்ந்ததாக நினைப்பது ஆத்மாவையே திருடுவதாகும். தனது ஆத்மாவையே பிற இடங்களில் திருடிக்கொண்டு செல்லத் துணிதல் துணிவுகளிலெல்லாம் சிறந்த பெரும் துணிவு. இந்த கார்யத்தில் துணிந்தவன் மற்ற எந்த கார்யத்தில் தான் வரிசையாகத் துணியமாட்டான்? என்று வியப்புற்று किं तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा। என்று சொல்கிறார்கள். செய்யத்தகாத ஒரு பாபகார்யத்தை முதலில் செய்யத் துணிந்தவன் பிறகு எல்லா பாப கார்யங்களையும் செய்யத் துணிவது ஸஹஜம் என்ற நியாயத்தையும் இந்த வாக்கியம் காட்டுகிறது. சரீராதிகளில் ஆத்மபுத்தி கொள்ளுதலாகிய ஒரு தவறு தலைச்செய்தவன் எல்லா பாபங்களைச் செய்வதற்கும் துணிவான் என்றும் முன்னால் சொன்னோம். ஆத்மாவே பரமப்ரீதிக்கு ஆஸ்பதமாயிருக்க சரீராதிகளில் அந்த பாவனையை வைக்க ஆரம்பித்தவுடன் அவைகளுக்காக ஸகல பாபங்களையும் செய்ய ஆரம்பிப்பது ஸஹஜம்தானே?

அநாத்மாக்களான சரீராதிகளில் ஆத்மத்தன்மையைக் கல்பித்தல் ஜாக்கிரத்காலத்திலும் ஸ்வப்ன காலத்திலும் மாத்திரம் இருக்கின்றது. துக்கமும் அவ்விரண்டு காலங்களில்தான் உண்டு. ஸுஷுப்தி

ஸமயத்தில் சரீராதிகளில் நாம் ஆத்மபுத்தி செய்யாததினால் துக்கமில்லை, அங்கே ஸுகத்தையே அனுபவிக்கிறோம். இதிலிருந்தே, அநாத்மாக்களான சரீராதிகளில் ஆத்மத்தன்மை இருப்பதாக நினைக்கும் வரையிலேயே நமக்கு துன்பங்கள் உண்டாகின்றன வென்றும், அவற்றில் ஆத்மத்தன்மையை கொண்டு வைக்காமல் ஆத்மாவை அவைகளின் ஸம்பந்த மற்றதாக அஸங்கமாக ஸாக்ஷியாக பாவிக்கும்போது இன்பமே விளங்குகிறதென்றும் தெளிவாகிறது. ஜாக்கிரத் காலத்திலும் ஸ்வப்ன காலத்திலும் தோன்றுகின்ற துக்கம் ஆத்மாவின் ஸ்வரூபத்தில் ஸம்பந்தித்திருக்குமானால், ஸுஷுப்தியிலும் அந்த துக்கம் நீங்காமல் தோன்றவே வேண்டும். அவ்விதம் காண்கின்றோமா? நித்திரையில் துக்கமே யில்லாத ஆனந்தத்தை யன்றோ அனுபவிக்கிறோம்! சர்க்கரையின் இயற்கையான தித்திப்பு சில ஸமயம் இருப்பதும் சில ஸமயம் இல்லாமலிருப்பதும் உண்டா? கிடையாது. சர்க்கரையின் இயற்கை எப்பொழுதும் தித்திப்புத்தான். அதன் ஸ்வபாவம் அதைவிட்டு எப்பொழுதும் நீங்குவதில்லை. எல்லா இந்திரியங்களும் ஓய்ந்து தூங்கும்போது ஆத்மாவின் ஸ்வரூபமான ஆனந்தம் விளங்குவது பிரத்யக்ஷஸித்தம். ஜாக்கிரத்திலும் ஸ்வப்னத்திலும் இந்திரிய மனஸ் ஸம்பந்தத்தினால் துக்கம் தோன்றுகிறது, ஸுகம் தோன்றினாலும் துக்கத்துடன் கலந்தே தோன்றுகிறது. கலப்பில்லாமல் துன்பத்தின் தொடர்

பில்லாமல் சுத்தமாக ஆனந்தம் தோன்றுவது ஸுஷுப்தியில்தான். அதற்குக் காரணம் அந்த ஆனந்தம் ஆத்ம ஸ்வரூபமாகவே இருப்பதால்தான்.

ஸ்படிகம் உண்மையாகவே சுத்தமானதுதான். அது சிவப்பாகத் தோன்றுவதேன்? செம்பருத்தி முதலிய சிவப்புப் புஷ்பங்கள் ஸ்படிகத்தின் பக்கத்தி லிருக்குமானால், அவற்றின் வர்ணம் ஸ்படிகத்தி லிருப்பதுபோல் தோன்றும். அதுபோலவே, அநாத் மாக்களாகிய தேகம், இந்திரியம், மனஸ், இவைகளின் சேர்க்கையால்தான் ஜாக்கிரத் ஸ்வப்னவஸ்தைகளில் ஆத்மாவும் துக்கமடைவதுபோல் தோன்றுகிறது. செம்பருத்திப் பூவின் சாயல் ஸ்படிகத்தில் படாத வாறு செய்வோமாயின், ஸ்படிகம் சுத்தமாகவே விளங்கும். அதுபோல, ஸுஷுப்தி ஸமயத்தில் சரீரம் இந்திரியம் மனஸ் என்பவையாகிய செம் பருத்திப்பூவின் ஸம்பந்தமின்றி ஸ்படிகம்போல் ஆத்மா இருப்பதால் அப்பொழுது சுத்த ஆனந்த ஸ்வரூபமாகவே விளங்குகின்றது. இதனால் ஸ்தூல ஸூக்ஷ்ம சரீர அபிமானம் ஏற்படும்பொழுதுதான் நாம் துக்கத்தை அனுபவிக்கிறோம் என்று நன்கு தெரிகிறது.

### 4. தன் நிலை தவறுதல்.

அவ்வபிமானம்தான் ஸகல ஆபத்துக்களுக்கும் காரணம். மிருத்யு என்பது யார் என்று கேட்டால் யமதர்ம ராஜன் அல்ல, வாஸ்தவத்தில் தன் ஸ்வரூபத்

திலிருந்து வழுவுதலே மிருத்யு என்று ஸநத்ஸுஜாதர் சொல்கிருர். प्रमादं वै मृत्युमहं ब्रवीमि। ஸ்வரூபத்திலிருந்து நழுவாதவன் யமனுக்கு உட்படமாட்டான். ஸ்வரூபத்திலிருந்து கொஞ்சம் தவறினுலும்கூட யமனுக்கு உட்பட்டவனேயாவான். எப்பொழுது இந்த நழுவுதல் ஏற்பட்டதென்று சொல்வதற்கில்லாமல் இருக்கிறது. வெகுநாளாக இருந்து வேரூன்றியிருக்கிற இந்த தோஷத்தை திடீரென்று நினைத்த மாத்திரத்தில் நிவிருத்தி செய்துவிடலாமென்று நினைப்பது மிகவும் தவறுதல். கிரமமாக கொஞ்சம் கொஞ்சமாக அதற்குவேண்டிய ஸாதனங்களை அனுஷ்டானம் செய்து வந்தால்தான் பலன் கைகூடும். நமக்கு பாப கர்மா பலன் கொடுக்கத்தலைப்பட்டால் துன்பம் வரும். புண்ணியகர்மா பலன் கொடுக்கத் தலைப்பட்டால் ஸுகம் கிடைக்கும். மனஸ் ஒரு விஷயத்தில் நோங்க வேண்டுமாளுல் துக்கமிருக்கக்கூடாது. ஆகையால் மனது தெளிவடைய மனஸ் சுத்தமாயிருக்க வேண்டும். அதாவது பாப கர்மாவை அறவே ஒழிக்கவேண்டும். விஷய ஸுகத்தில் ஆசையிருந்து கொண்டிருக்கிற வரையில் மனஸ் ஒருமைப்படாது. ஆகையால் மனதை ஆசையற்று வைத்துக் கொள்ள வேண்டும். சரீராதிகள் நான் அல்லவென்ற த்ருடமான ஞானம் ஸித்திக்கிறவரையில், "நான் செய்கிறேன்" என்ற கர்த்ருத்வபாவனை இருந்து கொண்டேயிருக்கும். பகவான் கீதையில் சொல்லிய படி ஒரு க்ஷணம்கூட கர்மா செய்யாமல் யாராலும்

இருக்கமுடியாது. கர்மா செய்தே ஆகவேண்டுமானால் நிஷித்த கர்மாக்களை விட்டு விட்டு விஹிதமான கர்மாக்களை செய்வதே உசிதமாகும். விஹித கர்மாக்களிலும் காம்ய கர்மாக்கள் பந்தத்திற்கே ஹேதுவாகும். ஆகையால் நித்திய கர்மாக்களைச் செய்வதே உசிதமென்று ஏற்படுகிறது. கர்மா என்பது எது என்று கேட்கும்போது எது பந்தத்தின் பொருட்டு ஏற்படவில்லையோ அதுவே கர்மா तत् कर्म यन्न बन्धाय என்று பெரியோர்கள் சொல்லுகிறார்கள். ஆகையால் யாகாதி கர்மாக்களை நிஷ்காமமாக ஈசுவரார்ப்பண புத்தியுடன் செய்யவேண்டும். அவ்விதம் செய்தால் தான் நம்மை பந்திக்க மாட்டா. இவ் விஷயத்தை கீதையில் பகவான் அடிக்கடி வற்புறுத்தி இருக்கிறார்.

## 5. நித்யகர்மாவின் பிரயோஜனம்

சிலர்கள் எல்லா நித்ய கர்மாக்களுக்கும் பலனே கிடையாதென்றும் பிரத்யவாய தோஷ பரிஹாரம் மாத்திரம் தான் பலன் என்றும் சொல்கிறார்கள். அதாவது ஸந்தியாவந்தனாதிகள் செய்தால் புண்ணியமோ ஸ்வர்க்கமோ கிடையாது, செய்யாமலிருந்தால் மாத்திரம் பாபம் உண்டு, அந்தப் பாபம் ஏற்படாமலிருக்க வேண்டி அக்கர்மாக்களைச் செய்யவேண்டுமென்கிறார்கள். அது நம்முடைய ஸித்தாந்தமில்லை. வேதத்தில் விஹிதமாயிருக்கிற கர்மாவைச் செய்தால் புண்ணியமில்லை என்பது கொஞ்சமேனும் உசிதமில்லை. "விதி" என்றால் என்னவென்று நன்கு விசாரித்திருந்

தால் அவ்விதம் சொல்லமாட்டார்கள். विधेयत्वं 'விதிக்கப்படும் தன்மை' என்பதில் மூன்று அங்கங்கள் உண்டு. 1. कृतिसाध्यत्वं ஒரு கார்யம் செய்யென்று சொன்ஞல் அது செய்வதற்கு ஸாத்தியமாயிருக்க வேண்டும். 2 इष्टसाधनत्वं நமக்கு இஷ்டமான ஒரு விஷயம் அதற்கு பலஞயிருக்கவேண்டும 3. बलवदनिष्टाननुबन्धित्वं ஏற்படும் இஷ்ட பலனை விட ஜாஸ்தியாக அநிஷ்டமேற்படாமலிருக்க வேண்டும். ஆகையால் நித்திய கர்மா விஹிதமானபடியால் அதுவும் இஷ்ட ஸாதனமாயிருக்க வேண்டியது அவசியமானபடியால் ஒரு இஷ்டம் பலஞக இருந்தே தீரவேண்டும். பூர்வ மீமாம்ஸையில் விசுவஜித் அதிகரணத்தில் விசுவஜித் யாகத்திற்குப் பலன் சொல்லாமல் போஞலும் விஹிதமாயிருப்பதால் ஸாதாரணமான ஸ்வர்க்கமே பலன் என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. ராத்திரி ஸத்திரம் என்ற யாகத்திற்கும் பலன் சொல்லவில்லை. அதற்கும் அர்த்தவாத வாக்யங்களிலிருந்து பலன் உண்டென்று தீர்மானித்திருக்கிருர்கள். அவ்விரண்டு கர்மாக்களும் காம்யரூபமாயிருப்பதால் காம்ய பலன் சொல்லவில்லையே என்று விசாரணை செய்து அவ்விதம் ஜைமினி பகவான் தீர்மானம் செய்திருக்கிருர். நித்திய கர்மாவில் அந்த நியாயம் எப்படிப் பொருந்தும் என்று கேட்கலாம். உபநிஷத்திலிருக்கிற कर्मणा पितृलोकः "கர்மாவிஞல் பிதிருலோகம்" என்ற வாக்கியத்தைப் பொதுவாக வைத்துக்கொண்டு, அந்த இரண்டு யாகங்களுக்கும் வேதத்தில் இந்த வாக்கி

யத்தினுல் வியக்தமாகவே பலன் சொல்லப்பட்டிருக் கிறது என்று ஜைமினி உபபாதனம் செய்திருக்கலாம். அப்படிச் செய்யாமலிருந்ததினுலேயே இந்த வாக்கியம் காம்யகர்மபரம் இல்லையென்று நாம் தெரிந்து கொள்ளலாம். ஆகையால் இந்த வாக்கியத்தை நித்திய கர்மாவிற்கு பிதிருலோகம் பலன் என்று விதிப்பதாகவே வைத்துக்கொள்வதில் எவ்வித ஆக்ஷே பணையுமில்லை. ஆனுல் நித்திய கர்மாவிற்கு சித்த சுத்தியல்லவா பலன் என்று கேட்டால் அதுதான் முக்கியமான பலன், பிதிருலோகம் ஆநுஷங்கிக பலன், அதாவது அதுவும் மத்தியில் ஏற்படுகிறது. தவிரவும் பிரத்யவாயம் ஏற்படாமலிருப்பது என்பது அபாவ ரூபமாயிருப்பதால், அதை ஒரு பலனுகச் சொல்வது உசிதமாகாது. நித்திய கர்மாவை செய்யாமலிருத்தல் என்பதும் அபாவ ரூபமாயிருப்பதால் அதற்கு பாவ ரூபமான பிரத்யவாயம் பலனுக ஏற்படுகிறதென்பதும் யுக்திக்கு விரோதம். ஆகையால் நித்திய கர்மாவுக்கும் பலன் உண்டென்றே தீர்மானம். ஆனுல் அதில் மனதை நோங்கவிடாமல் ஈசுவரார்ப்பண புத்தியுடன் நம் கடமையென்று மாத்திரம் செய்வோமேயானுல் சித்தம் சுத்தியடையும். சித்தம் சுத்தியடைந்தால் மனதில் ஆசையாவது சாஞ்சல்யமாவது கொஞ்ச மேனும் இருக்காது. நிர்மலமான அம்மனது ஆத்ம விஷயத்தில் நன்கு செல்லும். ஆத்மாவுக்கு வேருயிருக்கிற தேஹம் இந்திரியம் முதலியவற்றில் அபிமானம் அறுபடும். ஸ்ரீ ஸதாசிவேந்திர யோகி

களைப்போல் த்ருடமான வைராக்கியம் ஸித்திக்கும். திருட வைராக்யத்திளுல் நிர்மலமாயுள்ள சித்தத்துடன் கூடியவனுக்கே "ஆத்மா அஸங்கன்" ஒன்றிலும் பற்றற்றவன், என்ற உணர்வு தோன்றும். அவனுக்கே ஆத்மஸாக்ஷாத்காரம் ஸித்திக்கும். அவனே கிருத கிருத்யனுவான்.



## அத்யாயம் 14.

## ஜன்ம ஸாபல்யம்.

### 1. இப்பொழுதே பிரயத்தினம் அவசியம்.

ஆத்ம ஞானம் ஸம்பாதித்தாலொழிய ஆத்யந்திகமான ஸுகத்தை அடைய முடியாதென்றும் அந்த ஆத்ம ஞானம் ஏற்படுவதற்கு சரீராதிகளான அனாத்மாக்களில் நாம் வைத்திருக்கும் ஆத்ம புத்தி போகவேண்டுமென்றும் அது போகவேண்டுமானல் சித்தம் பரிசுத்தமாகவேண்டுமென்றும் சித்தம் சுத்தமாகவேண்டுமானல் ஈசுவரார்ப்பண புத்தியுடன் நிஷ்காமமாக விஹித கர்மாக்களை அனுஷ்டிக்க வேண்டும் என்றும் முன் சொல்லப்பட்டிருக்கிறது. "இதர மதங்களில் இந்த ஜன்மா ஒன்றுதான் உண்டு. இதில் செய்யும் கார்யங்களுக்குத் தக்கபடி சாசுவதமான ஸுகமோ துக்கமோ ஏற்படுமென்று சொல்வதால் தீவிரமான முயற்சி இப்பொழுதே செய்தாகவேண்டும் என்ற நிர்பந்தம் உண்டு. நம் மதத்திலோ இதுவரை

அநாதிகாலமாக கணக்கில்லாமல் ஜன்மாக்கள் எடுத்திருக்கிறோம். இனிமேலும் கணக்கில்லாமல் ஜன்மாக்கள் எடுக்க அவகாசமுண்டு. ஆகையால் இப்பொழுதே என்ன அவஸரம்? இந்த ஜன்மத்தில் இல்லையானால் அடுத்த ஜன்மத்தில் பார்த்துக்கொள்ளலாம், அதிலும் இல்லையானால் அதற்கடுத்த ஜன்மத்தில் பார்த்துக் கொள்ளலாம். இந்த ஜன்மத்தோடு சரியென்றால் தான் பயப்பட வேண்டும். நமக்கோ அதற்கு அவசியமில்லை" என்று இம்மாதிரியாக நம்முடைய சோம்பேரித்தனத்திற்கும் அசிரத்தைக்கும் பக்க பலமாக பல யோசனைகள் தோன்றுகின்றன. வாஸ்தவத்தில் இப்பொழுது ஏதோ ஒரு புண்ணியத்தினால் கிடைத்திருக்கிற மானிட ஜன்மாவை வியர்த்தமாக்க ஏதேனும் நியாயமுண்டாவென்பதை கவனிக்க வேண்டும். இப்பொழுது நமக்குக் கிடைத்திருக்கிற ஜன்மாவை நாமே உதாஸீனம் செய்து வீணாக்கி விட்டால் அடுத்த ஜன்மம் நமக்கு மானிட ஜன்மம் தான் கிடைக்கும் என்பது என்ன நிச்சயம்? அதன் மேன்மையை அறிந்துகொள்ளாமல் வியர்த்தமாக்கின நமக்கு மறுபடியும் அந்த ஜன்மாவை பகவான் கொடுத்து அனுக்ரஹிப்பார் என்று நாம் எதிர்பார்க்க ஏதேனும் நியாயமுண்டா? தவிரவும் மனுஷ்ய ஜன்மா எடுத்தால் மாத்திரம் போதாது. அந்த ஜன்மாவிலும் ஞானம் ஸம்பாதிப்பதற்கு வேண்டிய ஸாதனங்களை அனுஷ்டிக்க வேண்டும். ஸாதனங்களை ஒரு ஜன்மாவில் அனுஷ்டித்தால் போதாது. அனேக

ஜன்மாக்களில் ஸாதனங்களை அனுஷ்டித்தால் தான் பலன் கிடைக்கும். பகவத்கீதையில் பகவான் சொல்லும்போது

'अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥'

'बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ॥'

என்று வெகு ஜன்மாக்கள் ஆகவேண்டுமென்பதை வற்புறுத்துகிறார். ஸாதனுப்யாஸமின்றி வெறும் வெகு ஜன்மாக்கள் மாத்திரம் ஸித்திக்குக் காரணமாயிருந்தால் நாம் இதுவரை எடுத்திருக்கும் ஜன்மாக்கள் கணக்கிலகப்படாததினுல் நமக்கு முன்னமேயே ஸித்தி ஏற்பட்டிருக்கவேண்டும். அவ்விதமேற்படாததால் ஜன்மாக்களின் வெறும் எண்ணிக்கை மாத்திரம் போதாதென்று தெரிகிறது. அப்பியாஸத்தோடு கூடிய வெகு ஜன்மாக்கள் ஏற்படவேண்டும் என்று தெரிகிறது. அவ்விதம் நாம் ஸாதனுப்பியாஸம் செய்யாததினுலேயே நாம் இன்னமும் ஜன்மாக்கள் எடுத்துக்கொண்டிருக்கிறோம். ஞானம் பெறவில்லை. இன்னம் கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் நமக்கு நல்ல கதி ஏற்படாமலிருக்க வேண்டுமென்று கூட நாம் முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறோமோ என்று நினைக்க இடமிருக்கிறது. பகவான் ஸ்ரீ ராமராகவும் ஸ்ரீ கிருஷ்ணராகவும் அவதாரம் எடுத்து அனுக்ரஹத்தினுலும் நிக்ரஹத்தினுலும் திருஷ்டியினுலும் ஸ்பர்சத்தினுலும் கணக்கில்லாத ஜனங்களை பரிசுத்தம் செய்து ஸத்கதி

கொடுத்திருப்பதாகச் சொல்லப்பட்டு இருக்கிறது. நாமும் அந்த காலங்களில் ஜன்மம் எடுத்துத்தான் இருந்திருக்க வேண்டும். அப்படியிருந்தும் அந்த பகவந் மூர்த்திகளுக்கு தட்டுப்படாமலே ஜாக்கிரதை யாயிருந்திருக்கிறோமென்று தெரிகிறது. பகவா னுடைய பாதாரவிந்தம் பட்ட தண்டகாரண்யத்தில் ஏதேனும் செடி கொடியாயிருந்து அவர் காலின் தூசி பட்டிருந்தாலும் கிருதார்த்தர்களாக ஆகியிருப்போம். வெகு ஜாக்கிரதையாய் ஒதுங்கியே வாஸம் செய் திருக்கிறோம் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. ஆகையால் வெறும் வெகுஜன்மாக்கள் பிரயோஜனமே இல்லை. பகவத் பிரீதிக்கு ஸாதனமாயுள்ள பகவத் ஆராதனரூபமான கர்மாக்களை செய்வதிலேயே செலவழிக்கின்ற அநேக ஜன்மாக்கள் ஏற்பட வேண்டும். அப்படி பகவதாராதனரூபமான கர்மாக் களைச் செய்வது மனுஷ்ய ஜன்மாவில் தான் ஸாத்தி யமே தவிர இதர ஜன்மாக்களில் முடியாது. வேறு ஜன்மா எடுப்பது ஸுலபமாயிருக்கலாம். ஆனாலும் மறுபடியும் மனுஷ்யஜன்மா எடுப்பது மிகவும் துர்லபம்.

## 2. இதுவே கர்மபூமி.

மோக்ஷமடைவதற்கு மனுஷ்ய ஜன்மமே சிறந்த ஸாதனம். ஸ்வர்க்காதி ஸுகங்களை அடைவதற்கும் மனுஷ்ய ஜன்மமே சிறந்தது. இந்திரன் முதலான தேவர்களை உத்தேசித்து யாகம் செய்து ஸ்வர்க்கம் பெறலாம், அதையே நிஷ்காமமாக செய்து சித்த

சுத்தி ஏற்பட்டு ஞானமடைந்து மோக்ஷம் பெறலாம். தேவர்களுக்கு அவ்விதமல்ல. இந்திரன் முதலிய தேவர்கள் யாகாதி கர்மம் செய்வதென்றால், தங்களுக்குக் கீழ்பட்ட அக்கினி முதலான தேவர்களுக்கு ஹவிர்பாகம் கொடுப்பதா? தனக்கு மேற்பட்டவர்கள் விஷயத்தில் பக்தியோடு செய்யும் கர்மா தான் பலன் கொடுக்கும். தேவர்களுக்கு இது ஸாத்திய மில்லை. மனிதர்கள் செய்கிற யாகத்தில் தேவர்களைக் குறித்து ஹவிர்பாகம் கொடுக்கும்போது इन्द्राय इदं न मम "இந்திரனுக்கு இது, என்னுடையதில்லை" என்று தங்களுடைய அபிமான ஸம்பந்தத்தை விலக்கிக் கொள்கிறார்கள். இதை உத்தேசத் தியாகம் என்று சொல்வதுண்டு. மனிதர்களுக்கு மேல்பட்டவர்களாக தேவர்கள் இருப்பதால் அவர்களின் அனுக்கிரஹம் வேண்டுமென்று யாகம் செய்ய முடிகிறது. தேவர்களுக்கு அவ்விதமில்லை. தேவர்கள் யாகம் செய்தால் அர்ப்பணம் செய்கிற ஹவிர்பாகங்களை "தன்னுடையதல்ல" என்று உத்தேசத் தியாகம் செய்யவேண்டும். அவ்விதம் வாயால் சொன்னாலும் தேவர்கள் வியாபகர்களாக இருப்பதால் ஹவிர்பாகம் எங்கே செல்ல முடியும். ஆகையால் அவர்களுக்கு மேல்பட்ட வேறு தேவர்களில்லாததினாலும் உத்தேசத் தியாகம் செய்ய இடமில்லாததினாலும் அவர்கள் யாகாதி கர்மாக்களை செய்வது ஸாத்தியமில்லை. சில புராணங்களில் பிரஹ்மாதி தேவதைகள் சில ஸமயங்களில் யாகம் செய்ததாகச் சொல்லும்போது கூட அவர்கள் தன்னை

விட மேல்பட்ட தேவதையை உத்தேசித்து யாகம் செய்ததாக சொல்வதுடன் பூலோகத்தில் வந்து பரிச்சின்ன மனுஷ்ய ரூபத்துடன் செய்ததாகவே சொல்லியிருக்கிறது. ஆகையால் கர்மாவிற்கு ஏற்பட்டது இந்த லோகமென்றே ஏற்படுகிறது.

### 3. இதுவே ஞானபூமி.

கர்மாவிற்கு இடமில்லாததால் தேவலோகத்தில் சித்த சுத்தி ஏற்படுவதும் ஸாத்தியமாகாது. கர்மாவிற்கு இடமில்லாமல் போனாலும் வேதாந்த விசாரம் செய்து ஞானமடையக் கூடாதா என்று கேட்கலாம். அதுவும் ஸாத்தியமல்ல. தேவாதிலோகங்கள் போக பூமிகள். தேவலோகத்தில் இந்திரிய ஸுகமே ஜாஸ்தி. அதிலேயே மனது ஈடுபட்டிருக்கும். கந்தர்வ லோகத்திலுள்ளவர்கள் போகலம்படர்கள் என்பது பிரஸித்தம். போகத்தில் ரமிக்கிற மனது ஞானத்தில் எப்படிச் செல்லும்? உபநிஷத்துக்களில் பிரஹ்மலோகமும் இவ்வுலகமும் தான் ஞானபூமி என்று வியக்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விரண்டுலோகங்களில் பிரஹ்மலோகமானது அனந்த விசேஷ புண்ணியம் செய்தவர்களுக்கே கிடைக்கத்தக்கது. அவ்வித புண்ணியம் செய்தவர்கள் மாத்திரம் பிரஹ்மலோகம் சென்று பிரஹ்மாவின் முன்னிலையில் ஆத்ம விசாரம் செய்து ஞானம் பெறலாம். ஸாமான்யமான புண்ணியம் செய்தவர்களுக்கு பிரஹ்மலோகம் கிடைக்குமா? தவிரவும், பிரஹ்மலோகம் போய்ச் சேருவதற்கு வேண்டிய புண்ணிய கர்மாக்களை இங்கே பூலோகத்

தில்தான் செய்யவேண்டும். அது ஸுலபமாகச் செய்யக்கூடியதா? செய்வதானாலும் எவ்வளவு காலம் செல்லும்? எவ்வளவு சிரமம் எடுத்துக் கொள்ளவேண்டும்? அதற்காகச் செலவாகிற காலத்தை நாம் இவ்வுலகிலேயே ஞானம் பெறுதற்காகச் செலவிடலாமே? அதற்காகப் படுகிற சிரமத்தையும் ஞானம் பெறுதற்காக வைத்துக் கொள்ளலாமே? மேலும், துக்கம் ஜாஸ்தியாயிருக்கிற இந்த லோகத்தில்தான் ஞான ஸாதனமாகிய வைராக்கியம் ஏற்படக்கூடும். அது ஸ்திரமாகவும் இருக்கும். தேவாதி லோகங்களில் வைராக்கியம் ஏற்பட முடியாது. தவிரவும் ஆத்ம ஸ்வரூபத்தையறிய சரீராதிகளிலிருந்து ஆத்மா தனிப்பட்டவன் என்று உணரவேண்டுமானால் ஆத்மா சரீராதிகளுடன் சேர்ந்திருக்கும் தருணத்தையும் தனித்திருக்கும் தருணத்தையும் அனுபவிக்கிறவர்களுக்குத் தான் ஸுலபமாகும். தேவர்களுக்கு ஜாக்கிரத் அவஸ்தை மாத்திரம் தானுண்டு, ஸ்வப்னமும் ஸுஷுப்தியும் கிடையாது. நாம் அம்மூன்று நிலைகளையும் மாறி மாறி அனுபவிக்கிறோமாதலால் ஸுகதுக்கானுபவம் ஏற்படுவதுடன் அவைகளுக்கு அதீதமான ஒரு நிலை உண்டென்று உணர்ந்துகொண்டு அதையடைய முயற்சி செய்யவேண்டுமென்கிற எண்ணம் உண்டாகிறது. ஜாக்கிரத் அவஸ்தை மாத்திரமுடைய தேவர்களுக்கு இது ஸாத்தியமில்லை. மேலும் இந்த சரீரம் அழியக்கூடியது, அநித்தியமானது, பலவித தோஷங்

களுடன் கூடியது, என்கிற விவேகத்தால் நமக்கு மோக்ஷவிருப்பமும் ஞானமும் ஏற்பட நியாயமுண்டு. தேவர்களுடைய சரீரம் தோஷரஹிதமாயிருப்பதுடன் வெகு காலம் மாறுதலில்லாமலிருப்பதால், நாம் சில ஸமயம் சில கார்யங்களைப் பிறகு பார்த்துக் கொள்ளலாமென்று ஒதுக்கி வைப்பதுபோல, பிறகு மோக்ஷமடைய முயல்வோமென்று அவர்கள் நினைத்துக் கொள்ளக்கூடும். அதாவது இந்திரிய ஜன்ய ஸுகத்திலுள்ள பிடிமானம் ஞானத்திலுள்ள சிரத்தையை மங்கும்படிச் செய்யுமென்று கருத்து. இவ்விதமாக எப்படி கவனித்துப் பார்த்தாலும் தேவலோகத்தை விட ஞானம் ஸம்பாதிப்பதற்கு நம் பூலோகமே உரித்தானதென்று தெரிகிறது.

மனிதனுக்குக் கீழ்பட்ட ஜந்துக்களுக்குப் பகுத்தறிவே இல்லாமையால், அவைகளுக்கு கர்மத்திலாவது ஞானத்திலாவது அதிகாரம் கிடையாதென்பதைப்பற்றி அதிகமாய்ச் சொல்லவேண்டியது அவசியமில்லை. மானிட ஜன்மா எடுத்தாலும் புருஷனாகப் பிறப்பது சிலாக்கியமென்பதை

दुर्लभं मानुषं जन्म प्राप्य तत्रापि पौरुषम् ॥

என்கிற சுலோகத்தில் ஆசார்யார் காட்டியிருக்கிறார்கள். ஸ்திரீகளுக்கு வேதாத்யயனத்தில் அதிகாரம் இல்லை யென்பதுடன் அவர்களுடைய ஸ்வபாவத்தினாலும் சாஸ்திரத்தினாலும் அவர்களுக்கு ஸ்வாதந்திரியமுமில்லை. அவர்களுக்கு ஸத்கதிக்கு பாதிவ்ரத்யமே

ஸாதனம். கணவனையே தெய்வமாகக் கருதி, திரி கரணங்களாலும் வழிபடுதல் பதிவ்ரதா தர்மமாகும். அவ்விதம் தன் பர்த்தாவை வழிபடும் பதிவ்ரதை களான ஸ்திரீகள் ஜன்மாந்தரத்தில் புருஷ ஜன்மாவை அடைந்து ஞானம் பெற்று மோக்ஷமடைகிறார்கள் என்று சாஸ்திரம் சொல்கிறது. ஆகையால் பதிவ்ரதா தர்மமும் மோக்ஷஸாதனமேயாகும். ஆனால் ஸாக்ஷாத் ஸாதனமாகாது. பரம்பரையாக ஸாதனமாகும். புருஷனுக்கு இப்பொழுதே பிரஹ்ம ஞானமடைய ஸௌகர்யமுண்டு. இந்தக் காரணத்தினாலேயே புருஷ ஜன்மா சிலாக்கியமானது என்று சொல்லப்பட்டு இருக்கிறது.

## 4. ஜன்மாவை வீணாக்கக்கூடாது.

மனிதனாகவும் புருஷனாகவும் மாத்திரம் பிறந்து விட்டால் ஞானம் ஏற்பட்டு விடாது. அதற்கு தீவிர மான முயற்சி வேண்டும். ஞானம் ஏற்பட வேண்டு மானால் நன்கு விசாரணை செய்யவேண்டும், விசாரணை செய்து அறிந்துகொண்ட விஷயத்தை ஸ்வானுபூதிக்கு விஷயமாக்க வேண்டும். இதையே ஞானாப்பியாஸம் என்பார்கள். நான் யார், இந்தப் பிறவி எனக்கு எப்படி வந்தது, இது இனி வராமலிருக்க வழி என்ன, என்ற விஷயத்தை ஆராய்வதே முக்கியமான விசா ரணையாகும். கொஞ்சம் புத்தியுள்ளவர் யாவரும் இந்த விசாரணை செய்ய வேண்டியதவசியம். ஆனால் பெரும்பாலோர்களுக்கு இது தோன்றுவதே கிடை யாது. பிறந்தது முதல் பதினாறு வயது வரை விளை

யாட்டில் பால்யகாலம் போய்விடுகிறது. பிறகு யௌவனத்தில் விஷய ஸுகத்திற்காக அங்குமிங்கும் அலைகிருர்கள். அதன் பிறகு எல்லா இந்திரியங்களை யும் தளரச்செய்கிற ஜரை வந்து விடுகிறது. பிறகு ஜன்மா முடிந்துவிடுகிறது. ஆயுசு பூராவையும் கொஞ்சம்கூட ஞானப்பியாஸத்திற்கு உபயோகப் படுத்தாமல் வீணுக காலத்தைக் கழிக்கிருர்கள். நாம் ஞானம் பெற்று முக்தியடைவதற்காகவே இம்மானிட ஜன்மாவை யடைந்திருக்கிறோம் என்பதை மறந்துவிடு கிருர்கள். இந்திரிய ஸுகமடைவதற்கு இந்த உயர்ந்த ஜன்மம் வேண்டுமா? வாஸ்தவத்தில் கவனித்துப் பார்த்தால், நம்மைவிட மிருகாதிகளுக்கே இவ்விஷயத் தில் ஸௌகர்யம் ஜாஸ்தி என்று சொல்ல வேண்டும். பர்த்ருஹரி

स्थाल्यां वैदूर्यमय्यां पचति तिलखलं चान्दनैरिन्धनौघैः
सौवर्णैर्लाङ्गलाग्रैर्विलिखति वसुधामर्कतूलस्य हेतोः ।
छित्त्वा कर्पूरखण्डान् वृतिमिह कुरुते कोद्रवाणां समन्तात्
प्राप्येमां कर्मभूमिं न भजति मनुजो यस्तपो मन्दभाग्यः ॥

என்று அழகாகச் சொல்லுகிருர். பிண்ணுக்கு வேக வைப்பதற்கு வைடூர்யத்தில் செய்த கிண்ணம் வேண்டுமா? சந்தனக் கட்டைகளைத்தான் எரிய விடவேண்டுமா? எருக்கச்செடி பயிரிடுவதற்காக தங்கமுனை வைத்த கலப்பை வேண்டுமா? கர்பூரத்தை வெட்டி வெட்டி கொள்ளுச் செடிக்கு வேலி

கட்டுவதா? இவ்வுத்தமமான கர்மபூமியை யடைந்தும் எந்த மனிதன் தபஸ் செய்யவில்லையோ அவன் பாக்கியம் கெட்டவன் என்பதில் என்ன ஸந்தேஹம்? "இந்த கர்மபூமி" என்று பர்த்ருஹரி சொல்லியிருப்பதை ஸகல கர்மாக்களையும் செய்ய அதிகாரமும் யோக்கியதையும் பெற்றிருக்கிற இந்த மானிட சரீரத்தைக் குறிப்பதாகவும் வைத்துக் கொள்ளலாம், வைதிக கர்மாக்கள் செய்தால் பலன் கொடுக்கக் கூடியதாய் புண்ணிய பூமியாயிருக்கிற இந்த தேசத்தைக்குறிப்பதாகவும் வைத்துக் கொள்ளலாம். எப்படி இதர சரீரங்களெல்லாம் பெரும்பாலும் போக சரீரங்களாகவும் மனித சரீரம் மாத்திரம் கர்மாவுக்குரிய சரீரமாயுமிருப்பதாக முன் சொன்னேமோ, அதேமாதிரி ஆஸேது ஹிமாசல மத்திய வர்த்தியாயிருக்கிற இந்த தேசத்தைத் தவிர மற்ற தேசங்களெல்லாம் பெரும்பாலும் போக பூமிகளாகவும் இந்த தேசம் மாத்திரம் கர்மாவுக்கு லாயக்கான தேசமாகவும் ஏற்பட்டிருக்கிறது. இந்த தேசத்திலும் ஜன்மாவடைந்து மனிதனுகவும் பிறந்து இவ்விசேஷ அனுகூலத்தை அடைந்திருக்கிற நாம் நம் ஆயுட்காலத்தை வீணுக்கினுல், நமக்கு என்றுதான் ஸத்கதி கிடைக்கும்? இரண்டு ரூபாய் நஷ்டமாகிவிட்டால் மூன்று நாளாகிறது நமக்கு வ்யஸனம் தீர. மிகமிகக் கிடைப்பதற்கரிதான மனித ஜன்மத்தைப் பெற்றும் ஞானம் பெருமல் இதை நஷ்டமாக்கிக் கொண்டோமேயானுல், இதற்காக நாம் என்ன

பரிஹாரம் செய்து தீர்க்கமுடியும்? தன் ஆயுஸ்ஸை சில நாட்கள் நீடிக்கும்படிச் செய்யவேண்டுமென்று வைத்தியர்களுக்கு ஏராளமாகப் பணம் கொடுக்கத் தயாராக இருக்கிறோம். இப்பொழுது ஒரு வியாதியுமில்லாமல் ஸ்வஸ்தமாக இருக்கிற ஸமயத்தில் கணக்கில்லாமல் கண்டபடியெல்லாம் வீணுக்குகிறோம். இதனுல்தான் கடோபநிஷத்தில் இந்த மானுஷ ஜன்மாவில் எவன் ஞானமடையவில்லையோ அவன் பெரிய நஷ்டமடைந்தவன் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

## 5. ஞானஸாதனங்கள்.

மனிதர்களே ஞானத்திற்கு முக்கியாதிகாரிகளாக இருந்தாலும், எல்லாமனிதர்களும் ஞானத்தில் ருசி கொண்டு பிரவிருத்திப்பது கிடையாது. ஞான விஷயமான முயற்சி ஏற்படவேண்டுமானுல் அடிப்படையாக நான்கு ஸாதனங்கள் வேண்டும். இவைகளையே ஸாதன சதுஷ்டயம் என்று சொல்வார்கள். அவைகளில் முதலாவது நித்யாநித்ய வஸ்து விவேகம். அதாவது ஆத்மா ஒன்றுதான் நித்யமாகவுள்ள வஸ்து என்றும், மற்றுள்ள யாவும் அநித்யமானவை என்றும் தெரிந்துகொள்ள வேண்டும். அவ்விதம் அறிவு ஏற்பட்டவுடன் அநித்யமாயிருக்கிற ஸகல பதார்த்தங்களிலும் போகங்களிலும் அதாவது இவ்வுலகத்தில் உள்ளதும் ஸ்வர்க்காதி பிரஹ்மலோக பர்யந்தமுள்ள ஸ்தானங்களில் கிடைக்கக் கூடியதுமான போக வஸ்துக்களிலும், நாயால் வாந்தியெடுக்கப்பட்ட

அன்னத்தில் வெறுப்புண்டாவதுபோல, ஆசையற்றிருப்பது இஹாமுத்ரார்த்த பலபோக விராகம் என்ற இரண்டாவது ஸாதனம் ஏற்படும். அதின்பேரில் ஆறு வித நியமங்கள் கூடிய சமாதிஷட்க ஸம்பத்தி என்ற மூன்றாவது ஸாதனம் அவசியமாகும். நடந்த, நடக்கிற, நடக்கப்போகின்ற விஷயங்களைப் பற்றி நினைக்கிற மனோவாஸனையை அடக்குவது சமம் எனப்படும். சக்ஷுராதி இந்திரியங்களை அவைகளின் விஷயங்களாகிய ரூபாதிகளில் செல்லாமல் தடைசெய்வது தமமாகும். சீதோஷ்ணம், பசி தாகம், ஸுகதுக்கம் முதலானவைகளை ஸஹித்துக்கொள்வது திதிக்ஷை. மனதின் ஒழிவே அல்லது ஸந்யாஸமே உபரதியாகும். குருவின் வாக்கியங்களிலும் வேத வாக்கியங்களிலும் இதுவே ஸத்யமென்று பக்தி கொள்வது சிரத்தையெனப்படும். மனது அமைதியாய் இருப்பது ஸமாதானம். இந்த ஆறும் சேர்ந்து மூன்றாவது ஸாதனமாகிற சமாதிஷட்க ஸம்பத்தி யென்பார்கள். ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைகிறதாகிய மோக்ஷத்தை அடையவேண்டுமென்கிற தீவிரமான விருப்பம் முமுக்ஷுத்வம் எனப்படும். அதுவே நான்காவது ஸாதனமாகும். இவை நான்கு ஸாதனங்களும் யாருக்கு இருக்கிறதோ அவர்தான் ஞானங்கமான ஆத்ம விசாரத்தில் இறங்க அதிகாரியாவார். அவருக்கு ஆத்ம விசாரம் ஸபலமாகி ஞானமேற்பட முடியும்.

## 6. நம் கடமை

சுகர் முதலியவர்கள் முக்தர்களாகிவிட்டார்களே,

நான் மாத்திரம் இப்படியே இருக்கிறேனே, என்றால் அவர்கள் பல ஜன்மாக்களில் ஞானாப்பியாஸம் செய்து முக்தி பெற்றார்கள். நாம் இன்னம் அது விஷயமான முயற்சிக்கே ஆரம்பிக்கவில்லை. முயற்சி செய்ய வேண்டுமென்ற எண்ணமே நமக்கு இன்னம் ஏற்பட வில்லை. அவ்வெண்ணம் ஏற்படவேண்டியதற்குத் தக்கபடி நம் மனதும் பரிசுத்தமாகவில்லை. சித்த சுத்திக்காக நாம் பகவதாராதன ரூபமான கர்மாக் களைச்செய்யவில்லை. ஆனால் அப்பெரியோர்களுடைய நிலை மாத்திரம் நமக்கு வந்துவிடவேண்டுமென்ற பேராசை இருக்கிறது. அதெப்படி ஸாத்தியப்படும்? ஒரு பள்ளிக்கூடத்தில் ஒரே வகுப்பில் இரண்டு மாணாக்கர்கள் படிக்கிறார்கள். ஒருவன் அதிகமான அக்கரையுடன் படிக்கிறான். மற்றொருவன் விளை யாட்டு புத்தியுடனிருந்துகொண்டு அவ்வளவு அக்கரையுடன் படிக்கிறதில்லை. இவ்விருவருக்கும் போஜன வஸதிகளோ, படிக்கவேண்டிய ஸௌகர்யங் களோ, எல்லாம் ஒரேமாதிரி கிடைக்கின்றன. குருவின் உபதேசங்களும் ஒரேவிதமாக இருக்கின்றன. இருந்தாலும், ஒரு வித்யார்த்தி பரீக்ஷையில் தேறு கிறான். மற்றொருவன் தேறுகிறதில்லை. இதற்குக் காரணம் இவர்களுடைய முயற்சியும் முயற்சி யின்மையுமேயாகும். அதேமாதிரி சிலர்கள் ஞானி களாகி முக்தர்களாவதற்கும் மற்றவர்கள் அக்ஞானி களாயிருந்து ஸம்ஸாரத்தில் உழன்று கொண்டிருப்ப தற்கும் முயற்சியும் முயற்சியின்மையுமே காரணம்.

ஆகையால் யத்னம் அவசியம் செய்யவேண்டும். அந்த யத்னமும் யாருக்காகச் செய்கிறேம்? நமக்கேற்பட்டு இருக்கிற கட்டை அவிழ்த்து நம்மை விடுவித்துக் கொள்ளவல்லவா இந்த முயற்சி? தான் ஒரு நிர்பந்த மான கட்டில் அகப்பட்டுக்கொண்டு மற்றவர்களை ஸம்ரக்ஷிக்கிறேன் என்று சொல்வது கொஞ்சமேனும் பொருந்துமா? தான் நதியைத்தாண்டிப் போவதற்கு நீஞ்சத் தெரியாமலிருப்பவன் மற்றவர்களைத் தன் முதுகில் ஏற்றிக்கொண்டு எப்படித் தாண்டிப்போகச் செய்ய முடியும்? ஆனால் இக்காலத்தில் அநேகம் பேர் லோகக்ஷேமத்தை யுத்தேசித்தே வெகு கார்யங்கள் செய்வதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். அவர்கள் தன் க்ஷேமத்தை முதலில் தேடிக்கொண்டிருக்கிறார் களாவென்று பார்த்தால், அவ்விஷயத்தில் கொஞ்ச மேனும் பிரயத்தினம் செய்திருக்கமாட்டார்கள். அப் பேர்ப்பட்டவர்கள் தன்னையே வஞ்சித்துக்கொண்ட வர்கள் என்று சாஸ்திரம் சொல்கிறது. தன்னையே தான் வஞ்சித்துக்கொள்ள வேண்டுமானால் அவர் களுடைய மௌட்டியம் எவ்வளவு ஜாஸ்தியாக இருக்கவேண்டுமென்று கவனிக்கவேண்டும். ஆகை யால்தான் தன்னுடைய விடுதலையை உத்தேசித்துப் பிரயத்தினம் செய்யாதவனை மூடபுத்தியுள்ளவன் என்று நமது ஆசார்யார் சொல்லியிருக்கிறார். துர்லப மான மனித ஜன்மாவை அடைந்து அதிலும் புருஷ னுகப்பிறந்து வேதாந்த விஜ்ஞானமும் ஏற்பட்டு தன் னுடைய முக்திக்காக பிரவிருத்திக்காதவனை மூட

புத்தி என்று மாத்திரம் சொன்னால் போதாது. அவன் ஆத்மஹத்தி செய்தவன் என்றே சொல்லவேண்டும், அஸத் பதார்த்தங்களை கிரஹித்துக்கொண்டு, தன்னையே இல்லாமல்போலச் செய்து விடுகிறான் அல்லவா, என்கிறார்கள் நமது ஆசார்யார்:—

लब्ध्वा कथंचिन्नरजन्म दुर्लभं
तत्रापि पुंस्त्वं श्रुतिपारदर्शनम् ।
यः स्वात्ममुक्त्यै न यतेत मूढधीः
स आत्महा स्वं विनिहन्त्यसद्ग्रहात् ॥

அவன் வெறும் மூடன் என்பதில் என்ன ஆக்ஷேபணை? ஜகத்தில் மூடர்கள் அநேகர் இருக்கிறார்கள். ஒவ்வொருவரும் ஒவ்வொரு விஷயத்தில் மூடர்களாயிருப்பார்கள். லோக வியவஹாரம் தெரியாமலிருக்கலாம். "நான் இருக்கிறேனா, இல்லையா?" என்றே ஸந்தேஹம் வந்துவிட்டால் அவனை மூடன் என்று சொல்வதில் என்ன ஸந்தேஹம்? அதற்கும்மேலாக 'நான் இல்லை' யென்றே தீர்மானத்துடனிருப்பவனுக்குமேல் மூடன் ஜகத்தில் இருக்கமுடியாது. ஆகையால் தன்னைப் பற்றிய ஸந்தேஹமோ, தன்னைப்பற்றிய விபரீத புத்தியோ, எவனுக்கிருக்கிறதோ அவனைவிட மூடனாக யாரையும் சொல்லமுடியாது. இந்த ஸந்தேஹத்திற்கும் விபரீத புத்திக்கும் காரணம் தன் நிலையிலிருந்து நழுவினதேதான். அந்த நழுவுதலைத்தான் முன்னால் "பிரமாதம்" என்று சொன்னோம். ஆகையால் தன் விஷயத்திலேயே நழுவினவனைப்பற்றி 'அவனுக்கு

மேல் மூடன் உண்டா' என்று ஆசார்யார் கேட்கிறார்கள்.

इतः को न्वस्ति मूढात्मा यस्तु स्वार्थे प्रमाद्यति ।
दुर्लभं मानुषं देहं प्राप्य तत्रापि पौरुषम् ॥

ஆகையால் புத்திசாலியாயிருப்பவன் தன்னை அநாத்ம பந்தத்திலிருந்து விடுவித்துக்கொள்வதற்காக தீவிரமான பிரயத்தினம் செய்துகொள்ளவேண்டிய தவசியம். இப்பொழுது கிடைத்திருக்கிற மானிட ஜன்மாவையும், புருஷத் தன்மையையும், ஞானம் ஸம்பாதித்துக்கொள்ளவேண்டிய மற்ற ஸௌகர்யங்களையும் நாம் வீணாக்கிக்கொள்ளக்கூடாது. வெளியிலுள்ள அநாத்ம பதார்த்தங்களிலுள்ள ஆசையை ஒழிக்கவேண்டும். ஆத்ம ஞானமடைந்த ஒரு மஹானை சரணமாக அடைந்து அந்த ஸத்குரு மூலமாக உபதேசிக்கப்பட்ட விஷயத்தை நன்கு அறிந்து அதிலேயே மனதை நிறுத்தி ஸ்வரூப ஸாக்ஷாத்காரம் பெற்று முக்தனாக ஆகவேண்டும்.

अतो विमुक्त्यै प्रयतेत विद्वान्
संन्यस्तबाह्यार्थसुखस्पृहः सन् ।
सन्तं महान्तं समुपेत्य देशिकं
तेनोपदिष्टार्थसमाहितात्मा ॥

சுபமஸ்து